E-mail : omsakthieditorial@gmail.com
https://archive.org/search.php?query=omsakthi

# ஓம் சக்தி

மார்ச் 2019
விலை ரூ.15



நிறுவனர் :
நா. மகாலிங்கம்

யாவர்க்கும் பொதுவாய் யாவர்க்கும் நட்பாய்
யாவர்க்கும் எளிதாய் யாவர்க்குமான அருட்செல்வரின்
96-வது பிறந்த தினம்

# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**






## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.




## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்டையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.




## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலினைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.




## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE

re KCT'S PLATFORM FOR RESEARCH & EXPLORATION

**தொழிலக ஆராய்ச்சிகள்**










**போர்ஜ்**

கே.சி.டி.யின் ஒர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்

**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**



சுரங்கம்

# தேசியக் கட்சிகளும் மாநிலக் கட்சிகளும்

*மாநிலங்களில் சிறு சிறு கட்சிகள் மலிந்துவிட்டன. அவற்றில் அதிக மானவை சாதிய, சமயக் கட்சிகள் எனலாம். இவையல்லாமல் தாய்க்கட்சியி லிருந்து பிரிந்த கட்சிகளின் தலைவர்கள் சிலரும் தனித்தனியாகக் கட்சிகளை நடத்துகிறார்கள். இவை எல்லாமே தேசியக் கட்சிகளை மங்கச் செய்துவிட்டன.*

*அதனால், தேர்தல் வந்தால் தேசியக் கட்சிகள் மாநிலக் கட்சிகளிடம் மண்டியிடுகிற காட்சிகளைப் பார்த்து அருட்செல்வர் 15 ஆண்டுகளுக்கு முன்பு (2004) எழுதிய ஒரு சிந்தனைக் கட்டுரை, இந்த மாதச் 'சுரங்கம்' பகுதியில் வாசகர்களுக்கு வழங்கப்படுகிறது.*

*– இ.ஆர்.*

ராஜீவ் காந்தியின் படுகொலைக்குப் பிறகு 1991–இல் நடந்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியில் 232 எம்.பி.–க்களே வெற்றி பெற்றனர். தனிப்பெரும் கட்சியாக அது விளங்கினாலும், ஆட்சி அமைப்பதற்குரிய அறுதிப் பெரும்பான்மை யான 272 உறுப்பினர்கள் அக்கட்சிக்குக் கிடைக் கவில்லை. ஆனாலும் காங்கிரஸ் கட்சியின் தலைவர் நரசிம்மராவையே ஆட்சி அமைக்குமாறு குடியரசுத் தலைவர் மேதகு ஆர். வெங்கட்ராமன் கேட்டுக்கொண்டார்.

அவ்வாறு அமைக்கப்பட்ட 'மைனா ரிட்டி' நரசிம்மராவ் ஆட்சி 1996–ஆம் ஆண்டு வரை செயல்பட்டது.

அந்த ஆட்சியின் பெரும்பான் மைக்குச் சோதனை நேர்ந்தபோது எதிர்க்கட்சியாக இருந்த பாரதிய ஜனதா கட்சியின் மறைமுக ஆதரவு அதற்குக் கிடைத்தது.

இந்த வகையில், இந்திய ஜனநாயக அரசியல் வரலாற்றில் பிரதமர் நரசிம்மராவின் காங்கிரஸ் அமைச்சரவைதான் கடைசியாக ஆட்சி செய்த தனிக்கட்சி அமைச்சரவையாகும்.

1996–இல் நடந்த பொதுத் தேர்தலில் ஐக்கிய முன்னணி என்ற கூட்டணி அமைக்கப்பட்டு அதில் ஜனதாதளம் பிரதானப் பாத்திரத்தை வகித் தது. 5 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐக்கிய முன்னணிக் கூட்டணி ஆட்சி 18 மாதங் களிலேயே முடிவுக்கு வந்தது.



அதன் பின்னர்தான் 1999–இல் 23 மாநிலக் கட்சிகளைக் கூட்டணி சேர்த்து, பாரதிய ஜனதா கட்சி மத்தியில் ஆட்சியை அமைத்தது. இது 5 ஆண்டு களுக்கு வெற்றிகரமாக நடந்த முதல் கூட்டணி ஆட்சியாகும். 2004 செப் டம்பர் மாதம் வரை ஆட்சிக்காலம்

டாக்டர் நா. மகாலிங்கம்





லல்லு பிரசாத் யாதவ்



மம்தா பானர்ஜி



மாயாவதி

இருந்தாலும், ஏப்ரல் மாதத்திலேயே ஆட்சியைக் கலைத்துவிட்டுத் தேர்தல் நடத்த அது தேர்தல் ஆணையத்தைக் கேட்டுக்கொண்டது.

14–ஆவது பொதுத் தேர்தலில் இந்திய அரசியலில் இரண்டு அணிகள். ஒன்று பாரதிய ஜனதா கூட்டணி. அடுத்தது காங்கிரஸ் கூட்டணி.

இவ்வாறு, தெளிவாக இருவேறு அணிகள் எதிரும் புதிருமாக இருந்தாலும், இந்த அணிகளுக்குத் தலைமை தாங்கும் தேசியக் கட்சிகளின் நிலைமை பரிதாபமாகவே உள்ளது.

நமது அரசமைப்புச் சட்டம் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை பொதுத் தேர்தல் மூலமாக ஜனநாயக ஆட்சியை அமைக்க வழிவகுத்துக் கொடுத்துள்ளது.

நமது அரசமைப்புக் சட்டத்தை உருவாக்கிய முன்னோடிகள், இந்தியாவை ஒரே தேசமாகக் கருதினர். தேசத்தைப் பொருளாதார ரீதியில் அபிவிருத்தி செய்ய வெவ்வேறு கொள்கை உள்ள அரசியல் கட்சிகள் செயல்பட நமது ஜனநாயகம் அனுமதித்துள்ளது.

காங்கிரஸ் கட்சி, பாரதிய ஜனதா கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி, மார்க்சிஸ்ட் கட்சி, சோஷலிஸ்ட் கட்சி, பிரஜா சோஷலிஸ்ட் கட்சி ஆகிய ஆறுதான் உண்மையில் தேசியக் கட்சிகள்.

காலப்போக்கில் தேசியக் கட்சிகளின் எண்ணிக்கை காங்கிரஸ், பா.ஜ.க., கம்யூனிஸ்ட் கட்சி, மார்க்ஸிஸ்ட் கட்சி என நான்காகச் சுருங்கிவிட்டன. சோஷலிஸ்ட், பிரஜா சோஷலிஸ்ட் கட்சிகள் மாநிலக் கட்சிகளாகவே ஆகிவிட்டன.

கடந்த பத்து ஆண்டுக் காலத்திற்குள் தேசியக் கட்சிகள் கொஞ்சம் கொஞ்சமாக மங்கி, மாநிலக் கட்சிகள் மெல்ல மெல்லப் பிரகாசம் அடைந்துள்ளன.

பஞ்சாபில் சிரோன்மணி அகாலிதளம், பீகாரில் ஜார்ஜ் பெர்னாண்டஸின் சமதா, ராம் விலாஸ் பஸ்வானின் மதச்சார்பற்ற ஜனதாதளம், லல்லு பிரசாத்தின் ராஷ்ட்ரிய ஜனதாதளம், உ.பி.யில் முலாயம்சிங்கின் சமாஜ்வாதி, மாயாவதியின் பகுஜன் சமாஜ் கட்சி, கேரளாவில் முஸ்லீம் லீக், மகாராஷ்டிரத்தில் சிவசேனா, சரத்பவாரின் தேசியவாதக் காங்கிரஸ், அசாமில் சங்மாவின் தேசியவாதக் காங்கிரஸ், மேற்கு வங்காளத்தில் மம்தா பானர்ஜியின் திரிணாமுல் காங்கிரஸ், பார்வேர்டு பிளாக், புரட்சி சோஷலிஸ்ட், காஷ்மீரில் முன்னாள் முதல்வர் பரூக் அப்துல்லாவின் தேசிய மாநாட்டுக் கட்சி, ஒரிசாவில் பிஜு ஜனதா தளம், ஆந்திராவில் தெலுங்கு தேசம்.

லோக் தந்திரிக், இந்திய தேசிய லோக்தளம், தமிழ்நாட்டில் தி.மு.க., அ.தி.மு.க., ம.தி.மு.க., பா.ம.க. இவ்வாறு இந்தியா முழுவதும் மாநிலக் கட்சிகளின் எண்ணிக்கை ஏராளமாகிவிட்டன.

அதுமட்டுமல்ல, மாநிலத்திற்குள்ளேயே விடுதலைச் சிறுத்தைகள், புதிய தமிழகம், மக்கள் தமிழ் தேசம், மூவேந்தர் முன்னேற்றக்கழகம் முதலிய ஜாதிக் கட்சிகளும் உள்ளன.

எண்ணிக்கையில் பெரிய அளவில் மாநிலக் கட்சிகள் மலிந்துவிட்ட காரணத்தால்தான், தேசியக் கட்சிகள் தேய்ந்துபோய் விட்டனவோ எனக் கருத வேண்டியுள்ளது.

பொதுத் தேர்தல் அறிவிக்கப்பட்டால் தேசியக் கட்சிகள் மாநிலக் கட்சிகளைத் தேடி அலையும் நிலையைத்தான் நாம் காணுகிறோம்.

மாநிலக் கட்சிகள்தான் தேசியக் கட்சிகளுக்கான இடங்களின் எண்ணிக்கையை நிர்ணயிக்கின்றன. மாநிலக் கட்சிகளால் நிர்ணயிக்கப்பட்ட இட எண்ணிக்கையைத் தேசியக் கட்சிகள் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியதாகின்றது.

உதாரணமாக, பா.ஜ. கட்சிக்குத் தமிழ்நாட்டில் 7 தொகுதிகள் என்று மாநிலக் கட்சி அறிவித்துள்ளது. அதை மாற்றி 8 தொகுதிகள் வேண்டுமென்று கேட்கின்ற தைரியம் பா.ஜ.க.வுக்கு இல்லை.

இதேபோல, காங்கிரசுக்குப் பத்துத் தொகுதி என்று மாநிலக் கட்சி அறிவித்துள்ளது. அதை மாற்றி 11 தொகுதிகள் வேண்டுமென்று கேட்கின்ற தைரியம் காங்கிரசிற்கு இல்லை. இதனை ஒரு பரிதாபகரமான நிலை என்று கூறுவதா? ஆகாதா?

இது, இந்திய ஜனநாயகத்திற்கு ஆரோக்கியமானதா என்பதைப் பற்றிச் சிந்திக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

# சூலூர் கலைப்பித்தனுக்குத் தமிழக அரசின்
# ‘கி.ஆ.பெ. விருது!’




*சென்ற 21.1.2019 அன்று எழுத்தாளர் சூலூர் கலைப்பித்தன் அவர்களுக்கு, அவருடைய தமிழ்ப் பணிகளைப் பாராட்டி, திருவள்ளுவர் திருநாளில் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு எடப்பாடி கே. பழனிச்சாமி அவர்கள், ‘முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் விருது’ அளித்து ரூ. 1 லட்ச ரூபாயும், தங்கப்பதக்கமும் வழங்கிச் சிறப்பித்த காட்சி. உடன் துணை முதலமைச்சர் மாண்புமிகு ஓ. பன்னீர்செல்வம், மாண்புமிகு அமைச்சர்கள் டி. ஜெயக்குமார், க. பாண்டியராஜன், கே.ஏ. செங்கோட்டையன், கடம்பூர் ராஜு, உடுமலை ராதாகிருஷ்ணன், பா. பெஞ்சமின் ஆகியோர்.*

பாரதத் துணைப் பிரதமர் எல்.கே. அத்வானி கூட, மாநிலக் கட்சிகளின் வளர்ச்சியைப் பற்றி மனம் நொந்து போய், ‘ஏதாவது ஒரு தேசியக் கட்சியின் கூட்டணிக்கு வாக்களியுங்கள்’ என்று மக்களைக் கேட்டுக் கொண்டுள்ளார். இதேபோல திருமதி. சோனியா காந்தி அவர்களும் கூட்டணியினால் பெரிய அரசியல் கட்சிகளுக்குப் பாதிப்புத் தான் ஏற்படும் என்றும், கூட்டணி எப்போதும் நிலையானதல்ல என்றும் கருத்துத் தெரிவித்துள்ளார்.

2004, மார்ச் மாதம் முதல் தேதி அன்று கொல்கத்தாவில் கூட்டணி ஆட்சி பற்றி ‘ஞான சக்தி’ என்ற பெயரில் ஒரு கருத்தரங்கம் நிகழ்ந்தது. அதில் கலந்து கொண்ட பல்வேறு கட்சித்


சரத்பவார்


சந்திரபாபு நாயுடு


நிதிஷ்குமார்







தலைவர்கள், மத்தியில் தனிக்கட்சி ஆட்சியை விட, கூட்டணி ஆட்சியில்தான் அதிகமான ஜன நாயகம் உள்ளது என்ற கருத்தைத் தெரிவித் துள்ளனர்.

கூட்டணி அமைச்சரவை அமைக்கப்படுகிற போது, அதில் இடம்பெறுகிற மாநிலக் கட்சிகள், சம அந்தஸ்தில் இடம்பெறுவதில்லை. ஆளும் தேசியக்கட்சி சகித்துக் கொண்டுதான் மாநிலக் கட்சிகளுக்கு இடம் தருகிறது.

கூட்டணி என்பது இனித் தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது என்பது மட்டும் உண்மை. அப்படியா னால், முரண்பட்ட கொள்கை களைக் கொண்ட கட்சிகளின் கூட் டணி என்பது, இந்திய தேசத்தின் சமஷ்டி அமைப்பையே சீர்குலைக்கக் கூடியதாக உள்ளது என்று அரசியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

அதுமட்டுமல்ல, மத்திய ஆட்சியில் கிடைக் கப்போகிற மந்திரிப் பதவிக்காகவே மாநிலக் கட்சிகள் கூட்டணிக்குச் சம்மதிக்கின்றன.

இன்னும் சில மாநிலக் கட்சிகள், மந்திரிப் பதவிகளில்கூட மிகவும் அதிகாரம் வாய்ந்த பதவி களையே விரும்புகின்றன.

மத்திய ஆட்சியில் “கூட்டணி” என்பது, மாநிலக் கட்சிகளுடைய பதவி மோகத்தை அம்பலப்படுத்திவிட்டது.

சில மாநிலக் கட்சிகள் தங்களுக்குப் பதவி ஆசை இல்லை என்று விளம்பரப் படுத்துவதற் காகவே ‘வெளியிலிருந்து ஆதரவு’ என்கின்றன. வெளியிலிருந்து ஆதரவு என்பது, வெளியி லிருந்து ஆட்டிப் படைப்பது என்பதாகத்தான் இருந்துள்ளது.

இன்றைய சூழ்நிலையில், இந்தியாவில் தனிக்கட்சிக்கான நம்பகத்தன்மை கொண்ட தேசியத் தலைமை இல்லை என்றே சொல்லலாம்.

இரண்டு கம்யூனிஸ்டுக் கட்சிகளையும் தேசியக் கட்சிகள் என்கிறோம். அவையே நாடாளுமன்றத்திற்கு அதிகபட்சம் 75 இடங்களில் தான் போட்டியிடுகின்றன. பா.ஜ.க. 350 இடங் களுக்கும், காங்கிரஸ் 300 இடங்களுக்கும் போட்டியிடலாம். எந்த ஒரு தேசியக் கட்சியும் நாடாளுமன்றத்தின் மொத்த இடங்களான 543 இடங்களுக்குப் போட்டியிட முன்வரவில்லை. ஆட்சிக்கான அறுதிப் பெரும்பான்மையான 273 இடங்களுக்கும் சற்றுக் கூடுதலாகப் போட்டியிடும் தேசியக் கட்சிகள் இரண்டும்தான் களத்தில் நிற்கின்றன.

பலன்களைப் பெறுவதற்கு மட்டும் தான் மாநிலக் கட்சிகள். அதேசமயம், தங்கள் பங்களிப்புகளை மத்திய அரசுக்கு அவை தர மறுக்குமேயானால், நிச்சயமாக இந்திய தேசத்தின் கட்டமைப்பு உருக்குலைந்து விடும்.

இன்றைக்குள்ள தேசக் கட்டமைப்பைச் சாசுவதப்படுத்த வேண்டுமென்றால், மத்திய அரசை பலவீனப்படுத்த அனுமதிக்கக்கூடாது. மத்திய அரசு பலமுள்ளதாக விளங்க வேண்டு மானால், தேசியக் கட்சிகளுக்குத்தான் முதலிடம் இருக்க வேண்டும்.

தேசியக் கட்சிகளின் தேர்தல் சின்னத்தில் தான் கூட்டணி விரும்பும் மாநிலக் கட்சிகள் நாடாளுமன்றத் தேர்தலில் நிற்குமாறு செய்யலாம்.

ஒரு குறைந்தபட்சப் பொதுத் திட்டத்தை வரையறை செய்து, அதன் அடிப்படையில் கொள்கை ரீதியாகத்தான் கூட்டணியை உரு வாக்க வேண்டும். அந்தக் கூட்டணியும் தேர்தல் நடக்கப்போகும் ஆண்டில் சுமார் 6 மாதத்திற்கு முன்பே அமைக்கப்பட வேண்டும்.

இந்திராஜி பிரதமராக இருந்தபோது, நாடாளு மன்றத்தின் பதவிக்காலத்தையும் மாநிலச் சட்ட சபையின் பதவிக் காலத்தையும் 6 வருடம் என்று மாற்ற விரும்பினார். அது வரவேற்கத்தக்க கருத் தாகும். அதனை அமல் செய்யலாம்.

அதேசமயம் உள்ளாட்சிகளுக்கான பதவிக் காலத்தை 3 ஆண்டுகள் எனக் குறைக்கலாம். அப்படிக் குறைத்தால், நாடாளுமன்றத் தேர்த லுடன் ஒரு முறையும், சட்டமன்றத் தேர்தலுடன் ஒரு முறையும் உள்ளாட்சித் தேர்தல்களை நடத்திக் கொள்ளுமாறு திட்டமிடலாம்.

நாடாளுமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கு வெற்றி பெறாத தேசியக் கட்சிகளின் சின்னங்களை முடக்கிவிடுமாறு செய்யலாம்.

அந்தச் சூழ்நிலை ஏற்படுமானால், தேசியக் கட்சிகளில் அதிக நாடாளுமன்ற உறுப்பினர் களைக் கொண்ட முதல் இரண்டு கட்சிகளி லிருந்து உறுப்பினர்களை நியமித்து மத்திய அமைச்சரவையை உருவாக்கலாம். அதற்குக் குடியரசுத் தலைவரே தலைமை வகிக்கலாம். இதே போல மாநிலங்களில் ஆளுநர்கள் செயல்படலாம்.

இவற்றை எல்லாம் இப்போது நடைபெறும் இத்தேர்தலில் செய்ய முடியாவிட்டாலும், இனி வரும் தேர்தலில் இவற்றைச் செய்யுமாறு அறிஞர்கள் இதுபற்றி மேலும் விவாதிக்கலாம். ●



சமத்தூரில் கால்நடைத் திருவிழாவைத் தொடங்கி வைக்கும் சிரவை ஆதீனம் சீர்வளர்சீர் இராமானந்த குமரகுருபர அடிகள். உடன் திரு. சங்கர் வாணவராயர்.

# சமத்தூரில் கொங்கு நாடு வேளாண் & கால்நடைத் திருவிழா!

நகரங்கள் இல்லாமல்கூட நமது பாரதம் வாழ முடியும், வளர முடியும். ஆனால், கிராமங்கள் இல்லாமல் நமது நாடு வாழவோ, வளரவோ முடியாது. காரணம், கிராமங்கள்தான் இந்தியா என்ற இப்பாரதம்.

செங்கல் இல்லாமல் சுவர் எழுப்புவது எப்படி முடியாதோ, அதுபோல்தான் கிராமங்கள் இல்லாமல் இந்தியாவைக் கட்டமைக்க முடியாது. நமது கிராமங்கள் அனைத்துமே முன்னொரு காலத்தில் இன்றைக்கு இருக்கிற கிராம சபையைப் போல ஒரு பரிபாலன நிர்வாக சபையை வைத்து, நிர்வாகம் செய்து வந்தவையாகும்.

அன்றைக்கு கிராம மக்கள் 80 சதவிகிதத்தினர் விவசாயம் சார்ந்தே வாழ்ந்தனர். அவர்களில் சிறு குடியானவர்கள்தான் பெரும்பகுதியினர். அதேபோல விவசாயக் கூலிகளாகப் பணிகளை மேற்கொண்டவர்களும் அதிகமானவர்கள். பெரும் நிலச்சுவான்தார்கள் எனப்படும் மிராசுதார்கள், பாளையக்காரர்களாக, பட்டக்காரர்களாக, ஜமீன்தார்களாக அன்றைய காலகட்டத்தில் இருந்தனர். அதற்கு முன்பு குறுநில மன்னர்கள் ஆட்சியைச் செய்திருக்கிறார்கள்.

புரவி பாளையம் ஜமீன்தார், ஊத்துக்குளி ஜமீன்தார், சமத்தூர் ஜமீன்தார், நெய்க்காரப்பட்டி ஜமீன்தார், ஆயக்குடி ஜமீன்தார், இடையகோட்டை ஜமீன்தார், பழையகோட்டைப் பட்டக்காரர் எனப் பலரைக் காண்கிறோம். தெய்வத்திரு. முத்துராமலிங்கத்தேவர் கூட ஒரு ஜமீன்தார் பரம்பரையில் வந்தவர்.

இப்பிரிவைச் சார்ந்தவர்கள் அந்தந்தக் கிராம ஆட்சியை நடத்தி வந்ததோடு, அந்த மக்களிடத்தில் மிகுந்த அன்பு காட்டியவர்களாக வாழ்ந்திருக்கிறார்கள். எஜமான் விசுவாசம் மிக்க அந்த மக்களின் பக்தியை ராஜ பக்தி என்றே அன்றைக்குச் சொல்லப்பட்டது.

தாராபுரம் வட்டாரத்தில் மக்கள் கடைக்குச் சென்று அரிசி, பருப்பு வாங்குகிற வாடிக்கையாளர்கள், தங்களுக்குத் தேவையான சர்க்கரையை மட்டும் 'சர்க்கரை' என்று கேட்காமல், 'இனிப்புப் பொடி' என்றுதான் கேட்பார்களாம். காரணம், தாராபுரம் வட்டாரம் சர்க்கரை மன்றாடியார் அவர்களுக்கு உட்பட்ட பகுதி. அவர் பெயரில் சர்க்கரை இருப்பதால், தங்கள் எஜமான் விசுவாசத்தைக் காண்பிப்பதற்காகச் சர்க்கரையை இனிப்புப் பொடி என்பார்களாம்.

இந்தக் குறுநில மன்னர்களின் கிராமத்தில் யாருக்கும் சார்பில்லாமல் பஞ்சாயத்துகள் நடத்தப்பட்டுத் தீர்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. அதேபோல, நீர்ப்பாசனத்திற்கான வசதிகளும் செய்யப்பட்டன. கிராமங்களில் குடவோலை என்ற பண்டைய தேர்தல் முறை மூலமாக மக்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

குறுநில மன்னர்களாகிய கிராம ராஜாக்கள், குடியானவர்களின் நலன்களைக் கவனித்ததோடு, புலவர்களைப் பேணி இலக்கியங்களிலும் ஈடுபாடு காட்டியிருக்கிறார்கள். தூத்துக்குடி வட்டாரத்தில் எட்டயபுரம் ஜமீன்தார் அரண்மனையில்தான் பாரதியாரே சில காலம் இருந்துள்ளார். அதனால், குறுநில மன்னர் பரம்பரையில் வந்த ஜமீன்தார்கள், பட்டக்காரர்கள் கிராமக் கலைகளில் அதிக அக்கறை செலுத்தியுள்ளனர்.

நாடு சுதந்திரம் பெறுவதற்கு 70 ஆண்டுகளுக்கு முன்பே பிரிட்டிஷ் ஆட்சியில் கிராம




கால்நடைத் திருவிழாவில் காளை வளர்ப்பிற்குப் பரிசு வழங்கும் சக்தி பைனான்ஸ் நிர்வாக இயக்குநர் திரு. ம. பாலசுப்பிரமணியம்.

நிர்வாகம் மங்கத் தொடங்கிவிட்டது. அதேசமயம் குறுநில மன்னர்களின் பரம்பரையில் வந்த பாளையக்காரர்கள், பட்டக்காரர்கள், ஜமீன்தார்கள் முதலியோரை பிரிட்டிஷார் தங்களின் ஆட்சிக்குப் பயன்படுத்திக் கொண்டனர்.

பிரிட்டிஷ் ஆட்சியில் ராஜபரம்பரையில் வந்த குறுநில மன்னர்கள், தங்களுடைய வசதிக்குட் பட்ட நிதியில் கிராமக் கலைகளையும், பக்தி இயக்கத்தையும் வளர்த்தார்கள்.

ஆனாலும், கடந்த 70 ஆண்டுக்காலத்தில் ஜனநாயகத் தேர்தல் மூலமாக மன்னராட்சி மெல்ல மெல்ல மறைந்து, மக்கள் பிரதிநிதிகளின் ஆட்சி மலரத் தொடங்கிவிட்டது. அப்படியிருந்தும் கிராமங்கள் மேலும் மேலும் தேய்ந்துவிட்டன. காரணம், கிராமத்தின் பிரதானத் தொழில் விவசாயம் தான். விவசாயத்திற்குப் பாசன நீர் அத்தியாவசிய மானது. அதற்கான திட்டத்தை நமது குடியரசு ஆட்சி பெரிதாகச் செய்யவில்லை. அதனால் விவசாயம் வீழ்ச்சியடையத் தொடங்கியது. விவசாயிகள் செழிப்பாகவில்லை.

இப்பின்புலத்தில் கிராமக் கலைகளும் மங்கி, மறைந்து கொண்டிருந்தன. உரியடித் திருவிழா, மாரியம்மன் சாட்டு, வண்டி மாகாளி, புலியாட்டம், சிலம்பாட்டம், கும்மியாட்டம், கோலாட்டம், ஜல்லிக் கட்டு, ரேக்ளா பந்தயம் போன்ற விளையாட்டுக்கள், கலைகள், பண்டிகைகள் அனைத்துமே சுணக்கமடைந்துவிட்டன. காரணம், கிராமங்கள் நகரங்களைப் போலத் தொடர் வேலைவாய்ப்பைத் தரக்கூடியவையாக இல்லாமல் போய்விட்டன. வறுமையின் பிடியில் சிக்கித் தேய்மானம் அடைந்து வந்தன.

சமீப காலமாகத்தான் கிராமங்களை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற அரசு நடவடிக்கைகள் தொடங்கியுள்ளன. அதற்கு காந்திஜியின் கொள்கையே மூலமந்திரமாகியிருக்கிறது. ஏனெனில், அவர்தான் கிராமங்களைக் கண்டு உணர்ந்து தனது சுதந்திர பாரதத்தை கிராம ராஜ்ய மாகவே நினைத்தவர்.

இந்த நிலையில், பல கிராமங்களில் கிராமக் கோயில்களின் திருப்பணிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. திருப்பணிகளையொட்டி, கிராமப் பண்டிகைகளை கிராம மக்கள் கொண்டாடு




கால்நடைத் திருவிழாவில் காங்கயம் இன மாடுகள் வளர்ப்புக்குப் பரிசு வழங்கி ஊக்குவிக்கும் காட்சி.

கிறார்கள். இப்படித்தான் நமது ஜல்லிக்கட்டுக்கூட மீட்டுயிர்ப்பிக் கப்பட்டது.

இதேபோல, கடந்த நான்கு ஆண்டுகளாக, பொள்ளாச்சிக்கு அருகில் உள்ள சமத்தூர் கிராமத் தில் கொங்கு நாடு வேளாண் & கால்நடைத் திருவிழா மூன்று நாட் களுக்குச் சிறப்பாக நடந்தது. அதனை சமத்தூர் ஜமீன் பரம்பரை யைச் சார்ந்த வாணவராயர் ஃபவுண் டேஷன் நடத்தி வருகிறது.

சமத்தூர் ஜமீனில் மதிப்புமிக்க அரசர் டாக்டர் பி.கே. கிருஷ்ண ராஜ் வாணவராயரின் குமாரர் இளவரசர் திரு. சங்கர் வாணவ ராயர் இதில் மிகுந்த ஈடுபாடு காட்டி வருகிறார். இவருடைய கடுமையான அர்ப்பணிப்பு மிக்க முயற்சியால், பொள்ளாச்சி சமத்தூர் 'சக்தி டெக்ஸ்டைல்ஸ்' வளாகத்தில் சென்ற பிப்ரவரி மாதம் 7, 8, 9 ஆகிய மூன்று நாட் கள் வேளாண் மற்றும் கால்நடைத் திருவிழாக் கண்காட்சி மிகச் சிறப்பாக நடந்தது.

இக்கால்நடைத் திருவிழாவில் பார் வையாளராக உள்ளே சென்றால், நகர்வதற்கே முடியாது. நடப்பது அதைவிடச் சிரமம். அவ்வளவு திரளான கூட்டம். பார்த்தவுடன் அடையாளம் தெரியுமாறு காங் கேயம் இன மாடுகள் வரிசை யாகக் கட்டி வைக்கப்பட்டி ருந்தன. அந்த மாடுகளின் முக அழகே நம்மை வசீகரிக்கிறது. அதுவும், அந்த இனத்தில் உரு வான பசுக்கள் உண்மையில் கோமாதாதான்.

கால்நடைத் திருவிழா, 108 கோமாதா பூசையுடன் தொடங்கியது. சிரவை ஆதீனம் தவத்திரு இராமானந்த குமரகுருபர சுவாமிகள் விழாவைத் தொடங்கி வைத்தார்.

பிரதமர் மோடி அவர்கள் குறிப் பிட்டதைப்போல, பசுக்கள் நமக் குப் பால் தருகிற மிகப்பெரிய பயனைத் தருகின்றன. ஒரு தாயின் பணியை அவை செய்வ தால், நமது குழந்தைகள்


விழாவில் இடம்பெற்ற சேவல்


ஆட்டுக்கிடா


காங்கயம் காளைகள்


குதிரை

ஆரோக்கியத்துடன் வளர்கிறார்கள். அதனால்தான் பசுவைக் 'கோமாதா' என்று கும்பிடுகிறோம் என்ற அவருடைய கருத்து, மதம் சார்ந்தது அல்ல என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

ஏனெனில், குழந்தைகளுக்கான பசும்பால் இந்துக் குழந்தைகளுக்கு மட்டுமானதல்ல, கிறிஸ்துவ, இஸ் லாமிய, சீக்கிய, பௌத்தக் குழந்தை களுக்கும் உபயோகமானதுதான். ஒரு தாயின் பாத்திரத்தை வகிக்கும் பசுக்களை நமது பாசத்தை வெளிப்படுத்தும் வகை யில் 'கோமாதா' என்று அவற்றைத் தரிசிப்பது மூட நம்பிக்கையுமல்ல, மத நம்பிக்கையுமல்ல. அது நமது நன்றி பாராட்டுதலாகும்.

அக்கண்காட்சியில் மணப்பாறைக் குட்டை இனத்தில் உருவான பசுக் களைப் பார்க்க முடிந்தது. சின்னப் பசுக்கள். உயரமே இல்லை. அவ் வளவு சிறிய அப்பசுக்களின் பால், குழந்தைகளுக்கு வலுவூட்டக் கூடியது எனப்படுகிறது.

பசுக் கண்காட்சியைத் தாண்டிச் சென்றால், சேவல் கண்காட்சி. அவை வரிசையாகக் கட்டி வைக்கப்பட்டுள்ளன. பலம் பொருந்திய சேவல்கள். ஆனால், சேவல் சண்டை எங்குமே அக் கண்காட்சியில் இடம்பெறவில்லை. ஒவ்வொரு சேவலும் இன்னொரு சேவலைவிட எவ்வளவு வலுவுள் ளது என்று நாமே ஒப்பிட்டுப் பார்க்குமாறு அவை இருந்தன.

அதைத் தாண்டிச் சென்றால், செம்மறி ஆட்டுக் கிடாக்கள். அவற் றின் கொம்புகள் வளைந்திருந் தாலும், மிகவும் வலுவான கிடாக்கள். அவை ஒன்றோடு ஒன்று மோது மானால், அவை மோதும் சத்தமே, கட்ட டம் இடிவதைப் போலிருக்குமாம். செம்மறி ஆடுகளைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம் போலிருந்தது.

அதைத் தாண்டிச் சென்றால், ஆண் குதிரைகள் வட்டமாக ஒரு வளாகத்திற்குள் நிறுத்தப்பட்டிருந் தன. கம்பீரமாகக் காட்சி தந்தன. கடிவாளத்தையே மீறி, அவற்றின் வளர்ப்பாளரின் உத்தரவுக்கும் அடங்காமல் எம்பிக் குதித்தன.


காங்கயம் இன மாடுகள்

அந்தக் குதிரைகளில் சிறந்த குதிரைகளை நடுவர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அதைத் தாண்டிச் சென்றால், வரிசை வரிசையாகப் பெண் குதிரைகள். அவற்றில் அநேகம் வெள்ளைக் குதிரைகள். அதைத் தாண்டிச் சென்றால் ராஜபாளையம் இன நாய்கள். கோம்பை இன நாய்களைக் காணவில்லை. காங்கயம் கருப்பு நாய்க்குட்டிகள் விற்பனைக்கு வைத்திருந்தார்கள்.

இந்த இனங்களையெல்லாம் பராமரிக்கத் தவறுவோமேயானால், அவை ஒழிந்து போய்விடும் என்பதில் சந்தேகமில்லை. அதிக அளவில் பொள்ளாச்சி சமத்தூர் சுற்றுப்புறக் கிராம இளைஞர்களும், பெண்களும் அக்கண்காட்சியில் தென்பட்டார்கள். அது ஒரு வகையில் உற்சாகத்தையும், ஊக்கத்தையும் அளித்தது. காரணம், இன்றைய இளைஞர்கள் வேளாண்மையைப் பெருமைக்குரியதாகக் கருதாத காலத்தைச் சேர்ந்தவர்களாகி விட்டார்கள்.

அவர்களுக்கு கார், மோட்டார் – பைக் அதிவேக வாகனங்கள்தான் பிடிக்கும். அதுபோலத் திரைப்படங்கள். அதிலும் குறிப்பாக விஜய், அஜீத் குமார் முதலியோரின் சண்டைக் காட்சிகள்தான் பிடிக்கும். திரிஷா, அனுஷ்கா முதலிய நடிகைகளின் காதல் காட்சிகள்தான் பிடிக்கும். இந்த இளைஞர்கள் நகரங்களில் மட்டுமல்லாமல், கிராமங்களிலும் இப்போது பரவி இருக்கிறார்கள்.

இக்காலகட்டத்தில், சமத்தூர் வேளாண்மைக் கண்காட்சி இந்த இளைஞர்களை ஈர்த்துள்ளது என்றால், இது ஒரு பெரிய சாதனை. இது வேளாண் கண்காட்சிக்கு மட்டுமல்ல, அந்த இளைஞர்களின் வாழ்க்கைக்கும் சேர்ந்த வெற்றி.

படித்த இளைஞர்கள் வேளாண்மைக்கு வர வேண்டும், விவசாயம் செய்ய வேண்டும், புதிய புதிய சாகுபடி முறைகளைக் கையாள வேண்டும். மகசூலை அமோகமாக எடுக்க வேண்டும். அரைக்கால் "டிராயரை" அணிந்து கொண்டு அவர்கள் சேற்றில் இறங்கி உழவுப் பணிகளைச் செய்ய வேண்டும் என்று அருட்செல்வர் அடிக்கடி சொல்வார்.

விவசாயத்தைவிட்டு வெகுதூரம் விலகிவிட்ட இந்த இளைஞர்களைத் தடுத்து நிறுத்தி இக்கண்காட்சி திரும்பிப் பார்க்க வைத்திருக்கிறது என்றால் அது மிகையல்ல. கிராம மறுமலர்ச்சி என்பது, கிராம மக்களின் மனப்பான்மையில்தான் முதலில் ஏற்பட வேண்டும். அதிலும் குறிப்பாக இளைய தலைமுறையின் மனப்பான்மையில் ஏற்பட வேண்டும்.

ஆடிஸ் காரில் ஸ்டியரிங் வீல் பிடித்துக் கொண்டு உட்கார்கிற பெருமிதத்தை ரேக்ளா வண்டியில் அந்தக் காளையை ஓட்டும்போது இந்த இளைஞர்கள் பெற வேண்டும். அப்போதுதான் கிராம விவசாயமே கீர்த்தி பெறும். அதற்குத் தேவை அவசர அவசரமாக நமக்குப் பாசன நீர்தான்.

இந்த இளைஞர்கள் ஜல்லிக்கட்டை மீட்டுருவாக்கி நடத்திக் கொண்டிருப்பதைப் போல, பாசன நீருக்காகப் போராடுவதற்கும் திட்டமிட முடியும். மகாநதி நீரை வைகை வரை கொண்டு வருவதற்கு ஊர்வலம் நடத்தலாம். உண்ணாவிரதம் இருக்கலாம். **மதுரை நீரியல் நிபுணர் பொறியாளர் ஏ.சி. காமராஜ் அவர்களின் நீர்வழிச்சாலைத் திட்டத்தை நிறைவேற்றினாலே ஒவ்வொரு ஊருக்கும் ஓர் ஆழியாறு கிடைக்கும்.**

இவ்வகையில், சமத்தூர் வேளாண் கண்காட்சி மற்ற மற்ற ஊர்களிலும் இதேபோல நடப்பதற்குத் தூண்டுகோலாக அமைய வேண்டும். நாகர் கோவில், தூத்துக்குடி, திருநெல்வேலி, தஞ்சை முதலிய பகுதிகளில் இதுபோன்ற கண்காட்சிகள் தொடர்ந்து நடைபெறத் தூண்டுதல் கண்காட்சியாகத்தான் சமத்தூர் வேளாண் கண்காட்சி திகழ்ந்தது.

திரு. சங்கர் வாணவராயர் இதில் காட்டி வரும் ஈடுபாடு, கிராம மறுமலர்ச்சிக்கான சரியான முயற்சியாகும். இக்கண்காட்சியை அவருடைய நிர்வாகத்தின்கீழ் செயல்படும் குமரகுரு பொறியியல் கல்லூரி மாணவர்களும், குமரகுரு வேளாண் கல்லூரி மற்றும் பொள்ளாச்சி வாணவராயர் வேளாண் கல்லூரி மாணவர்களும் சிறப்பாகச் செய்து காட்டினர்.

**– ந.நி.**

நேர்காணல்

# யோகாசனத்தால் நூற்றாண்டு கண்ட

# பத்மஶ்ரீ நானம்மாள்!



பத்மஶ்ரீ
நானம்மாள்

நம் நாட்டின் சிறந்த உடற்பயிற்சிக் கலையான யோகாசனக் கலை இன்று உலகம் முழுவதும் பரவி வருகிறது. நமக்கு வந்திருக்கும் பல நோய்களைக் குணப்படுத்துவதோடு, இதனைச் செய்து வருவதால், நோய்கள் வராமலும் காக்கப்படும் என்பதை நாம் அறிவோம்.

தற்போதைய மைய அரசு, யோகாசனத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்து வருகிறது. பிரதமர் மோடியின் முயற்சியால், ஐ.நா. அவையும் ஜூன் 21–ஆம் நாளை உலக யோகா தினமாக அறிவித்து, உலக நாடுகளெல்லாம் யோகாசனத்தைப் பயின்று உடல் நலம் பெற வழிவகுத்துள்ளது. இந்த நாளில் பிரதமரே, யோகாசனம் செய்து யோகா தினத்தைக் கொண்டாடுவதை நாம் அறிவோம்.

பல்வேறு துறைகளில் சாதனைகள் செய்வோருக்கு நம் மைய அரசு பத்ம விருதுகள் அளித்துச் சிறப்பித்து வருகிறது. அந்த வகையில், யோகக் கலையைச் சிறு வயது முதல் தொடர்ந்து செய்து நூற்றாண்டை நெருங்கிய நிலையிலும் ஆரோக்கியமாக இருப்பதோடு, பலருக்கும் யோகக்கலையைக் கற்பித்து, ஏராளமான யோகா ஆசிரியர்களையும் உருவாக்கிய கோவையைச் சேர்ந்த திருமதி. நானம்மாள் அவர்களுக்குச் சென்ற ஆண்டு 'பத்மஶ்ரீ' விருது வழங்கிக் கௌரவிக்கப்பட்டது.

'பத்மஶ்ரீ' நானம்மாள் அவர்கள், சென்ற 24.2.2019 அன்று 99–ஆம் அகவையை நிறைவு செய்து, 100–ஆவது அகவையில் அடியெடுத்து வைத்துள்ளார். நூற்றாண்டு கண்ட நிலையில் இன்றும் யோகாசனங்கள் செய்து கொண்டு ஆரோக்கியமாக இருக்கிறார்.

இவரது புதல்வர்கள், புதல்வியர், பேரன்– பேத்திகள், கொள்ளுப்பேத்தி எனக் குடும்பத்தினர் அனைவரும் யோகாசனத்தைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள். இவர்கள் யோகாவால் பெற்ற பதக்கங்கள், வெற்றிக்கோப்பைகள், கேடயங்கள் முதலிய பரிசுப் பொருள்கள் ஏராளமாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

வயது 100 என்று சொல்ல முடியாதபடி, ஏறத்தாழ 75 வயது என்றே சொல்லத்தக்க தோற்றம், நடுக்கமற்ற பேச்சு, கண்ணாடி அணியாத தெளிவான பார்வை, தடுமாற்றமில்லாத நடையுடன் இருக்கும் அன்னை நானம்மாளை, அவரது நூற்றாண்டு வேளையில், 'ஓம் சக்தி' வாசகர்களுக்காகச் சந்தித்தோம்.

அம்மையார், அவரது நான்காம் புதல்வர் திரு. வி. எல்லுசாமி அவர்கள் நடத்தி வரும் 'ஆனந்தம் யோகா இயற்கை மருத்துவ மையத்தில்' நமக்கு முன் சில ஆசனங்களைச் செய்து காண்பித்தார். அவர், தமது புதல்வர் திரு. வி. எல்லுசாமி அவர்களுடன் நமக்கு அளித்த பேட்டி...

***கேள்வி : நீங்கள் எந்த வயதில் யோகா கற்கத் தொடங்கினீர்கள்? யோகா கற்கும் ஆவல், சூழ்நிலை எப்படி ஏற்பட்டது?***



**பதில் :** கிட்டத்தட்ட மூன்று வயதிலேயே யோகா கற்கத் தொடங்கி விட்டேன். இதற்குக் காரணம், எனது தந்தையாரும், தாயாரும் நாள்தோறும் யோகா செய்பவர்கள், கற்பிப்பவர்கள். எனது பெற்றோர்கள்தான் எனக்கு யோகா குருவாக இருந்தனர். இதனால், குடும்ப அளவிலேயே எனக்கு யோகா கற்கும் வாய்ப்பு இயற்கையாகவே அமைந்துவிட்டது.

மேலும், எங்கள் ஊர், பொள்ளாச்சி ஜமீன் காளியாபுரம் அருகிலுள்ள 'பெரிய களந்தை' என்னும் சிற்றூராகும். அங்கு ஆதீஸ்வரர் கோயில் உள்ளது. அக்கோவிலில் யோகாசனம் செய்யும் சிற்பங்கள் உள்ளன. அக்கோவிலைச் சுற்றி வாழ்ந்த எங்கள் முன்னோர்கள் பலர் அவற்றைப் பார்த்தும் யோகாசனம் செய்து வந்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.



**கேள்வி : யோகாவால் உடல் மற்றும் மனதளவில் நீங்கள் அடைந்த பலன்கள் என்னென்ன?**

**பதில் :** உடலளவில் என்று பார்த்தால், எனக்கு ஆறு குழந்தைகள். அனைவரும் இயற்கைப் பிரசவத்தில் பிறந்தவர்கள்தான். இன்றுபோல அறுவைச் சிகிச்சையில் யாரும் பிறக்கவில்லை. அன்று முதல் இன்றுவரை மருத்துவமனை வாசலைக்கூடத் தொட்டது கிடையாது. அலோபதி மருந்துகள் இன்றுவரை உட்கொண்டது கிடையாது. இன்று வரை யோகாசனங்கள் செய்து கொண்டிருக்கிறேன். மனதளவில் எந்த அழுத்தமும் இல்லாமல் இயல்பான வாழ்க்கை வாழ்ந்து வருகிறேன்.

**கேள்வி : யோகாசனத்தால் என்னென்ன நோய்களை வராமல் தடுக்கலாம்? உடலின் வெளி நோயான தோல் நோயைக் குணப்படுத்த முடியுமா?**

**பதில் :** யோகாசனம் செய்வதால் எந்த நோயும் வராமல் தடுக்கலாம். ஒவ்வொரு நாளும் உங்களால் செய்ய முடிந்த ஏதேனும் ஐந்து ஆசனங்களைச் செய்து வந்தால் போதும், அவற்றிலேயே எல்லா உள்ளுறுப்புக்களும் வேலை செய்யும். உள்ளுறுப்புக்கள் வேலை செய்தால் எந்த நோயும் வராது.

உள்ளுறுப்புக்கள் நன்கு செயல்படும் போது, வெளி நோயான தோல் நோயும் வராது. அதற்கு உணவு முறைகளும் சரியாக இருக்க வேண்டும். வேப்பங்குச்சியில்தான் பல் துலக்குதல், வேப்பிலைக் கொழுந்து தின்றல் முதலியவற்றால் உள்ளே கசப்புப் போவதால், வெளி நோய்களும் அகலும்.

**கேள்வி : அப்படிச் செய்ய வேண்டிய எளிமையான சில ஆசனங்களைச் சொல்லுங்கள்...**

**பதில் :** நாம் மிக எளிமையாகச் செய்யக்கூடியது புஜங்காசனம். இதனால் நுரையீரல் தொடர்பான பிரச்சனைகள் வராது. அடுத்து, மூச்சுப் பயிற்சி. ஒற்றைக் காலில் நிற்கும் ஏக பாதாசனம் நமது மனதைத் தெளிவாக இருக்க வைக்கும், நினைவாற்றல் கூடும். பாதஹஸ்தாசனம் செய்வதால் வயிறு சுருக்கமடையும். இதனால், வயிற்றில் உள்ளுறுப்புகள் நன்கு வேலை செய்யும். அர்த்த மச்சேந்திராசனம் சர்க்கரை நோயைக் கட்டுப்படுத்தும். சர்வாங்காசனம் எல்லா உறுப்புக்களையும் வேலை செய்ய வைக்கும். ஹலாசனம் வயிற்றுத் தசைகளைப் பலப்படுத்தும். இயன்ற ஆசனங்களைச் செய்ய உடல் நலம் பெறும்.



**கேள்வி : எந்த மாதிரியான இடத்தில் யோகாசனம் செய்ய வேண்டும்?**

**பதில் :** சூரிய வெளிச்சத்தில், காற்றோட்டமான இடத்தில் யோகாசனம் செய்ய வேண்டும். அடைத்த அறையில் செய்யக்கூடாது. காற்றோட்டத்தில் உடலின் வெளிப்பகுதிக்கும் சேர்த்துப் பயிற்சி கிடைக்கிறது. வியர்வை உடலிலிருந்து வெளியேறும்போது, தோல் நோய்களும் வெளியேறும்.

**கேள்வி : இன்று நம் நாட்டில் அதிகமான மக்கள் பாதிக்கப்பட்டிருப்பது நீரிழிவு மற்றும் இரத்த அழுத்த நோய்களால்தான். இவற்றை யோகாசனத்தால் குணமாக்க முடியுமா? பாதிக்கப்பட்டவர்கள் நோய் நீங்கி இனிப்பு உண்ண முடியுமா?**

**பதில் :** முடியும். அர்த்த மச்சேந்திராசனம், ஹலாசனம், பச்சிமோத்தாசனம், ஜானுசிராசனம் ஆகியன செய்வதால், நீரிழிவு நோயைக் குணமாக்க முடியும். அர்த்த மச்சேந்திராசனம் கணையத்தையும், சிறுநீரகத்தையும் நன்கு வேலை செய்ய வைக்கிறது. இதனால் இன்சுலின் சுரப்பிகள் நன்கு சுரக்கும்.

இரத்த அழுத்தம் என்பது ஒரு நோயே கிடையாது. இப்போது உடல் உழைப்பே இல்லாமல் இருப்பதால் இந்தப் பிரச்சனை வருகின்றது. முன்னர் நாற்காலிகளில் உட்காரவில்லை. கைகளால் அரைத்தார்கள். உள்ளங்கைகளிலும், உள்ளங்கால்களிலும்தான் அழுத்தப் புள்ளிகள் உள்ளன. இவற்றைச் செயல்பட வைப்பதால், இரத்த ஓட்டம் சீராக இருக்கும். உடலுழைப்பும், ஆசனங்களும் செய்தால், தலைக்கு நல்ல இரத்த ஓட்டம் இருக்கும். இரத்த அழுத்தம் வராது. யோகாசனத்தால் இரத்த அழுத்தம் முழுமையாக நீங்கியவர்கள் பலர் உள்ளனர். அத்துடன் உணவு முறைகளும் இருக்க வேண்டும். கொய்யா இலை, வேப்பிலைக் கொழுந்து, பாகற்காய்ச் சாறு முதலியவற்றை உட்கொண்டால் நலமாக இருக்கும்.

**கேள்வி : இருதய நோயாளிகள், கர்ப்பிணிகள் செய்யக்கூடாத ஆசனங்கள் எவை?**

**பதில் :** யோகாசனம் முறையாகச்



செய்து வந்தால், இருதய நோயே வராது. இருதய நோயாளிகள் கடின மான ஆசனங்களைச் செய்யக் கூடாது. மெதுவாக மூச்சுப் பயிற்சிகள் செய்யலாம். சில எளிய ஆசனங் களைச் செய்யலாம், பாதங்களிலும், கைகளிலும் சில அழுத்தங்கள் கொடுக்கலாம். இதனால் இருதய நோய்கள் நீங்கப்பெறுவார்கள்.

கர்ப்பிணிப் பெண்கள் நன்கு வேலை செய்து வர வேண்டும். முற் காலத்தில் மகப்பேற்றிற்கு முந்தைய நாள் வரை வேளாண் நிலங்களில் பெண்கள் வேலை செய்வார்கள். அத னால் சுகப்பிரசவம் நடந்தது.


திருமதி நானம்மாளுடன்
மகன் எல்லுசாமி

இப்போது கர்ப்பம் தரித்த உடன் வேலை செய்வதை விட்டுவிடுவதால் தான் பிரசவங்கள் கடினமாகின்றன.

எளிய பயிற்சிகள் செய்யலாம். வயிற்றுக்கு அழுத்தம் தரும் பயிற்சிகள் செய்ய வேண்டாம். குதபாத ஆசனம் 9–ஆம் மாதத்தில் செய்தால் பிரசவம் எளிதாக இருக்கும். ஆனால், எந்த ஆசனமும் ஆசானின் கற்பித்தலில் தான் செய்ய வேண்டும். 3 மாதங்கள் வரை கைகள், கால்களை அசைத்தல் மட்டும் செய்யலாம். இயற்கை உணவு களை உட்கொள்வது நல்லது.

**கேள்வி : உங்கள் உணவுகள் பற்றிக் கூறுங்கள்...**

**பதில் :** கம்பு, சாமை, தினை, வரகு, குதிரைவாலி, சோளம் எனச் சிறு தானிய உணவுகள். கீரைகள், பழ வகைகள் எல்லாம் உணவாக உட் கொள்கிறேன். அதனால் இன்றுவரை ஆரோக்கியமாக இருக்கிறேன்.

**கேள்வி : தவிர்க்க வேண்டிய உணவு கள் எவை?**

**பதில் :** பர்கர், பீட்சா முதலிய ஃபாஸ்ட் ஃபுட் என்று சொல்லக் கூடிய துரித உணவுகள், டப்பாக் களில், பாக்கெட்டுகளில் அடைத்து விற்கப்படும் பொருள்கள், சாக்லெட் பொருள்கள், எண்ணெயில் பொரித்து விற்கப்படும் பொருள்கள் முதலியன தவிர்க்கப்பட வேண்டியவை. இவற் றில் பல புற்றுநோயை உண்டாக்கக் கூடியவையாக இருப்பதை ஆய்வாளர் கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

காய்கள், பழங்கள், பழச்சாறுகள், கீரைகளை அதிகம் சேர்த்துக்கொள்ள வேண்டும். முருங்கைக்கீரை எல்லா இடங்களிலும் எளிதாகக் கிடைக் கிறது. இதனை சூப் வைத்துக் குடிக்க லாம். எலும்புகள் பலப்படும். ஆவாரை இலை 10 எடுத்து நீரில் காய்ச்சித் தேநீர் போலக் குடிக்கலாம். இதனால் நீரிழிவு கட்டுப்படும். பாகற்காய் சிறிதளவு சேர்த்தால்கூட நல்ல பலன் தரும்.

**கேள்வி : உண்ணா நோன்பு நல்லதா? எத்தனை நாட்களுக்கு ஒரு முறை உண்ணா நோன்பு இருக்க வேண்டும்? பயன்கள் என்னென்ன?**

**பதில் :** உண்ணா நோன்பு வாரத்தில் ஒருமுறை இருக்கலாம். இது உடலுக்கு மிக மிக நல்லது. இதனால், ஜீரண உறுப்புகளுக்கு நல்ல ஓய்வு கிடைக் கிறது. செரிமானம் நன்கு ஆகும். கழிவுகள் வெளியேறும். குடல் தூய் மையாகும், எந்தத் தொற்றும் இருக் காது. மூன்று வேளையும் உண்

ணாமல், வெறும் பழச்சாறுகள், தண்ணீர் குடிக்கலாம். இதற்காகத்தான் நம் முன்னோர்கள் ஏகாதசி, சிவராத்திரி, பிரதோசம், சனிக்கிழமை, முதலிய நோன்புகளைக் கடைப்பிடித்தனர்.

உடலிலுள்ள சூட்டினை அகற்றிக் குளிர்ச்சியாக்க நம் உடலிலுள்ள செல்கள் ஒன்று சேர்ந்து போராடும்போது புற்று நோயாக ஆகிறது. உடலைக் குளிர்ச்சியாக வைத்திருக்க அத்திப் பட்டை, துத்தி மற்றும் குளிர்ச்சி தரும் உணவுகளைச் சேர்த்து வருவதால் புற்றுநோய் தாக்காதிருக்கும். நாங்கள் இதற்கு மருந்து கொடுத்துச் சரி செய்து வருகிறோம்.

**கேள்வி : உங்களிடம் யோகா பயின்றவர்களில் எத்தனை பேர் யோகா ஆசிரியராக உள்ளனர்? வெளிநாடுகளில் உள்ளனரா?**

**பதில் :** நாங்கள் இங்கே யோகாசன டிப்ளமோ வகுப்பே நடத்துகிறோம். இந்த ஆண்டு வரை 1500 பேர்களுக்கு மேல் யோகா ஆசிரியர்கள் ஆகிவிட்டனர். தமிழகத்தில் பல பள்ளிகளில் இவர்கள் யோகாசனம் கற்பிக்கிறார்கள். இங்கே கற்றவர்கள் நிறையப்பேர் சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, ஜப்பான், சீனா, ஸ்ரீலங்கா, கனடா, கென்யா ஆகிய வெளிநாடுகளிலும், அந்தமானிலும் யோகா ஆசிரியர்களாக உள்ளனர்.

**கேள்வி : 'பத்மஸ்ரீ' விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது எப்படி? விருது பெற்றபோது உங்கள் மனநிலை எப்படி இருந்தது?**

**பதில் :** நாங்கள் யோகாசனத்தை அடித்தட்டு மக்களிலிருந்து, மேல்தட்டு மக்கள் வரை கொண்டு போய்க் கொண்டிருந்தோம். நிறையப் பேருக்குக் கற்றுத் தந்ததால், என்னைப் பற்றித் தெரிந்தவர்கள் யாரோ தந்த தகவலின் பேரில் 'பத்மஸ்ரீ' விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம். எப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டேன், யாரால் என்பது எனக்குத் தெரியாது. அறிவிப்பு வந்த பின்தான் தெரியும். விருது பெற்றதில் மிகவும் மகிழ்ச்சி. இது யோகாவிற்கான அங்கீகாரமாகக் கருதுகிறேன்.



'பத்மஸ்ரீ' விருதுபெற்ற போது...

**கேள்வி : நீங்கள் பெற்ற பிற விருதுகள் என்னென்ன?**

**பதில் :** முதலில் கர்நாடக மாநில அரசின் சார்பில் முன்னாள் பிரதமர் மற்றும் கர்நாடக முன்னாள் முதல்வர் திரு. தேவகவுடா அவர்களிடம் 'யோக ரத்னா' விருது பெற்றேன். பின்னர் 2017–இல் 'பெண் சக்தி' விருது மேதகு முன்னாள் குடியரசுத்தலைவர் பிரணாப் முகர்ஜி அவர்களிடம் பெற்றேன். 2018–இல் பத்மஸ்ரீ விருது இன்றைய குடியரசுத்தலைவர் மேதகு ராம்நாத் கோவிந்த் அவர்களிடம் பெற்றேன்.

**கேள்வி : ஆனந்தம் யோகா இயற்கை மருத்துவ மையத்தில் என்னென்ன பணிகள் செய்கிறீர்கள்?**

**பதில் :** ஆனந்தம் யோகா இயற்கை மருத்துவ மையத்தில் இயற்கை மருத்துவம், பச்சிலை மருத்துவம், அக்குபஞ்ச்சர், வாழையிலைக்குளியல், மண் குளியல், நீராவிக் குளியல், எண்ணெய் மசாஜ், மூலிகைப்பொடிக்குளியல் எனப் பல வகைச் சிகிச்சை முறைகளைச் செய்து வருகிறோம். எல்லா நோய்களுக்கும் மருத்துவம் செய்கிறோம்.

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

# வாழும் வள்ளுவம்




**ஆ**ங்கிலேயர்களுக்கு மகாகவி சேக்ஸ்பியர்தான் அடையாளம். 500 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த அம்மகாகவியே ஆங்கிலேயர்களுக்கு முக விலாசம் கொடுத்தவர் என அவர் கொண்டாடப்படுகிறார்.

சேக்ஸ்பியர் காலத்து ஆங்கில மொழி, அரைகுறை ஆங்கில மொழியாகவே இருந்தது. அக்கவிஞன்தான் மொழியையும் மேம்படுத்தி, இலக்கியங்களால் ஆங்கில மொழிக்கு அழகும் சேர்த்தார்.

தமிழர்களுக்கு மகாஞானி திருவள்ளுவர்தான். திருவள்ளுவரே நமக்குச் சாதி, மதம், இனம், வர்க்கம், வர்ணம் என எல்லாம் அவரே எனலாம். ஏனெனில், நாம் அவ்வாறு பிளவுபட்டு – பிரிவு பட்டுக் கிடக்கிறோம்.

முதலில் தமிழர்கள் திருவள்ளுவரால் ஒன்றாக்கப்பட வேண்டும். தமிழன் தன்னைத் திருவள்ளுவ சாதி என்றும், திருவள்ளுவ மதம் என்றும், திருவள்ளுவ இனம் என்றும் மார்தட்டிக் கொள்ள வேண்டும்.

அதற்கான முழு முயற்சியில் ஈடுபட்டுள்ள முனைவர் கு. மோகனராசு பற்றி அறியாத தமிழர்கள் அறிந்து கொள்ள வேண்டும். அவருடைய திருக்குறள் பற்றினைப் பாராட்டிக் கொண்டாட வேண்டும் எனும் நோக்கில், அவரைப் பற்றிய ஒரு சின்னச் சித்தரிப்பு:–

**செ**ன்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வுப் பகுதியில் 36 ஆண்டுக் காலம் பணியாற்றிய இவர், கடந்த 45 ஆண்டுக் காலம் திருக்குறளையே தம் ஆய்வாகவும், வாழ்வாகவும், தொழிலாகவும், தொண்டாகவும், தொழுகையாகவும் கொண்டு வாழ்ந்து வருகின்றார்.

உலகின் முதல் தலைமைத் தூதர், உலகின் முதல் திருக்குறள் மாமுனிவர், உலகின் முதல் திருக்குறள் தூயர் என்னும் பெருமிதங்கள் பெற்றுள்ளார்.

100–க்கும் மேற்பட்ட நாடுகளிலும், 1200–க்கும் மேற்பட்ட ஆய்வரங்குகளிலும் பங்கேற்று, 1000–க்கு மேற்பட்ட தலைப்புகளில் திருக்குறள் ஆய்வுரைகள் வழங்கியுள்ளார்.




இவருடைய ஆய்வுகள் 100–க்கு மேற்பட்ட நூல்களாக வெளிவந்துள்ளன. இந்த ஆய்வுகளின் வழி, 1000–க்கும் மேற்பட்ட புதிய ஆய்வு முடிவுகளையும், 1000–க்கு மேற்பட்ட புதிய ஆய்வுக் குறிப்புகளையும் வழங்கித் திருக்குறள் ஆய்வு வளர்ச்சி வரலாற்றில் 1000–க்கு மேற்பட்ட புதிய ஆய்வு முடிவுகளை வழங்கிய முதல் தமிழன் என்

னும் பெருமிதம் பெற்றுள்ளார்.

உலகத் திருக்குறள் மையத்தின் நிறுவனரான இவர், 100–க்கு மேற்பட்ட கோணங்களில் திருக்குறளைப் பரப்பியுள்ளார். 100–க்கு மேற்பட்ட மாநாடுகள், 1200–க்கு மேற்பட்ட ஆய்வரங்குகள் நடத்தியுள்ளார்.

தற்போது வள்ளுவர் கோட்டத்தில் கடந்த 18 ஆண்டுகளாகச் சனிக்கிழமை தோறும் திருக்குறள் உயர் ஆய்வரங்குகளைப் பொறுப்பேற்று நடத்தி வருகின்றார்.

பிறப்பு முதல் இறப்பு வரையிலான தம் இல்ல நிகழ்வுகள் அனைத்தையும் திருக்குறள் வழியில் நடத்திச் சாதனை படைத்துள்ளார். அவ்வகையில், உலகிற்கே எடுத்துக்காட்டானவராக விளங்கி வருகிறார்.

திருக்குறளைப் பரப்பல், திருக்குறளை வாழ்வியலாக்கல், திருக்குறள் ஆய்வு செய்தல் என்னும் மூன்று நிலைகளிலும் உலகில் முதல்வராக விளங்கி வருகின்றார்.

முனைவர் கு. மோகனராசு அவர்கள், தம் இல்லத்தில் திருக்குறளுக்கெனப் பெரிய நூலகமும், திருவள்ளுவர் அமைதித் திருக்கோயிலும் அமைத்துள்ளார். புகழ் பெற்ற ‘வாழும் வள்ளுவம்’ இதழாசிரியராகவும் உள்ளார்.

**– ந.நி.**

## துணிச்சல் மிக்க பெண்மணி!

**ம**லேசியத் தலைநகர் கோலாலம்பூரில் உள்ள பாலர் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றும் திருமதி இந்திராகாந்தியின் மூன்று பிள்ளைகளும் அவரது விருப்பமின்றி, அவர் கண் முன்னாலேயே கணவரின் தூண்டுதலால் இஸ்லாம் மதத்திற்கு மதம் மாற்றப்பட்டனர்.


ஆசிரியை திருமதி இந்திராகாந்தி

அதை எதிர்த்து அப்பெண்மணி அந்நாட்டு நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார். அந்த வழக்கு, எட்டு ஆண்டுகள் நடந்தது. கடந்த ஜனவரி 2018–இல் நீதிமன்றம் அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கியது.

அந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க தீர்ப்பில், “முஸ்லிம் அல்லாத பிள்ளைகள் இஸ்லாத்திற்கு மதமாற்றம் செய்வதற்குப் பெற்றோர்களின் சம்மதம் கண்டிப்பாகப் பெறப்பட வேண்டும்” என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அமெரிக்க நாட்டின் செயலராகப் பணியாற்றிய காண்டலிசா ரைஸ் துணிச்சல் மிக்க பெண்களை உலகறியச் செய்ய வேண்டும் என ஒரு விருதை ஏற்படுத்தினார்.

அந்த விருதுக்காக ஒவ்வோராண்டும் உலகின் பல்வேறு நாடுகளில் பலதரப்பட்ட இன்னல்களுக்கிடையே பலருக்காகத் துணிச்சலுடன் பணிபுரியும் பெண்களை அமெரிக்க அரசு தேர்ந்தெடுக்கிறது. பாலர் பள்ளி ஆசிரியையான திருமதி இந்திராகாந்தி, “அனைத்துலகத் துணிச்சல் மிகு பெண்” என்ற அமெரிக்காவின் விருதுக்குத் தேர்வு செய்யப்பட்டார். கோலாலம்பூரில் உள்ள அமெரிக்கத் தூதர் மாளிகையில் அவருக்கு அந்த விருது வழங்கப்பட்டது.

தகவல் : **என். ஆர். ஜெயசந்திரன்**, காவேரிப்பட்டணம்

ஆன்மிகம்

# திருவண்ணாமலை

“நினைக்க முக்தி தரும்” திருவண்ணாமலை, மகிமைகள் பல பொருந்திய திருத்தலமாகும். பஞ்ச பூதங்களில் அக்கினிக்கு உரியதாகக் கருதப்படும் இத்திருத் தலத்தில்தான் சிவபெருமான் ஜோதிவடிவாகக் காட்சி அளித் துள்ளார். ஒவ்வொரு வருடமும் கார்த்திகை தீபத் திருவிழா மிக விமரிசையாக இங்குக் கொண் டாடப்படுகிறது.




சுமார் பதினான்கு கி.மீ. சுற்றள வுள்ள இம்மலையைச் சுற்றிலும் ஒவ்வொரு பௌர்ணமியன்றும் இலட்சக்கணக்கான பக்தர்கள் கிரிவலம் வருகின்றனர். மேலும் கிரிவலப் பாதையில் இப்புனித மலையின் எட்டுத் திசைகளிலும் அமைந்துள்ள சிறிய திருக் கோயில்களில் அருள்பாலிக்கும்

# மூக்குப்பொடிச் சித்தர்

கார்த்திகை தீபத்தன்று மாலையில் ஸ்ரீ அண்ணாமலையார் திருக்கோயிலில் மஹாதீபம் ஏற்றப்பட்ட உடனே திருக்கோயிலின் பின்புலத்திலுள்ள சுமார் 2700 அடி உயரமுள்ள திருவண்ணாமலையின் மீது வைக்கப்பட்டுள்ள பெரிய கொப் பரையில் மிகப் பெரிய தீபம் ஏற்றப் படும். நீண்ட நாட்கள் அணையாமல் எரியும் அந்தத் தீபம் சிவபெருமானின் ஜோதி வடிவ தரிசனத்தை உணர்த்துவ தாகும்.



எஸ். ஸ்ரீதுரை

இந்திர லிங்கம், அக்கினிலிங்கம், யம லிங்கம், நிருதி லிங்கம், வருண லிங்கம், வாயு லிங்கம், குபேர லிங்கம், மற்றும் ஈசானிய லிங்கம் ஆகிய சிவலிங்கத் திருமேனி களையும், திரு அண்ணாமலையார் திருக்கோயிலுக்கு நேர் பின்புறம் அமைந்துள்ள அடி அண்ணாமலையார் திருக்கோயிலையும் வணங்கிய பின்பு கடைசியாகப் பிரம்மாண்டமான திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலை அம்மன் உடனுறையும்


மூக்குப்பொடிச் சித்தர்

அண்ணாமலையாரையும் வழிபட்டு அருள்பெற்றுப் பரவசமடைகின்றனர்.

முருகப்பெருமான் அருணகிரியாருக்குத் திருக்காட்சியளித்து உபதேசம் செய்த இத்திருத் தலம் சித்தர்களுக்கும் தவசீலர்களுக்கும் அடைக் கலம் வழங்கும் முக்தித் தலமாகவும் விளங்கு கின்றது.

பல்லாயிரம் வருடங்களாக சித்தர் பெரு மக்கள் பலரும் இத்திருவண்ணாமலையில் தங்கி, தவ வாழ்வு மேற்கொண்டு, அண்ணாமலை யாரைப் பூசித்து வருகிறார்கள் என்றும், கிரிவலப் பாதையில் அமைந்துள்ள மலைக்குகைகள் சில வற்றில் இன்றும் கூடச் சித்தர்கள் தங்கியிருப்பதா கவும் நம்பப்படுகிறது. கிரிவலம் செல்லும் அன்பர் களின் கண்களுக்குத் திடீரென்று சில சித்தர்கள் காட்சி தந்து மறைந்து விடுவதாகவும் கூறப்படு கிறது.

ரமண மகரிஷிகள், சேஷாத்திரி சுவாமிகள், தவத்திரு விசிறி சாமியார் முதலிய உலகப் புகழ் பெற்ற தவசீலர்கள் இத்திருத்தலத்தில் தங்கி யிருந்து, தவமியற்றி, பக்தர்கள் பலரையும் தமது உபதேசங்களின் மூலம் நெறிப்படுத்தி, இறுதியில் இத்திருத்தலத்திலேயே முக்தியும் அடைந்துள்ளார் கள். அவர்களின் பூத உடல்கள் மறைந்துவிட்டா லும், அவர்களுடைய திருச்சமாதியிலிருந்து கொண்டு சூட்சும வடிவில் இன்றும் அவர்கள் தமது சீடர்களுக்கு அருளாசி வழங்கி வரு கிறார்கள்.

இந்துமதத் தத்துவங்களை அறிந்துகொள்ள விரும்பும் வெளிநாட்டவர்கள் பலரும் நாள்தோறும் விஜயம் செய்யும் திருவண்ணாமலையின் தெருக் களில் சதா தெய்வீகச் சிந்தனையில் மூழ்கி யிருக்கும் புனிதர்களை இன்றும் காணலாம். அவர்களையும் சித்தர்கள் என்றே அழைத்து மதிப்பளித்து வணங்கி வரும் திருவண்ணாமலை பக்தகோடிகள் அவர்களது பார்வை பட்டாலே நன்மைகள் பல விளைவதாகக் கருதுகின்றார்கள்.

அப்படிப்பட்ட ஒரு புனிதர்தாம் திருவண்ணா மலை மூக்குப்பொடிச் சித்தர் என்று அறியப்பட்ட மகான்.

திருவண்ணாமலைவாழ் பக்தர்கள் மட்டு மின்றி, தமிழகமெங்கிலும் உள்ள பல பிரபல அரசியல்வாதிகள் மற்றும் திரைத்துறைப் பிரபலங் கள் யாவரும் தேடிவந்து வணங்கிச் சென்ற மூக்குப்பொடிச் சித்தர், விழுப்புரம் மாவட்டம் சின்னசேலம் அருகே உள்ள ராஜபாளையத்தைச் சேர்ந்த மொட்டைய கவுண்டர் என்ற இயற் பெயரைக் கொண்டவர் ஆவார்.

தம்மை வணங்கி அருளாசி பெற வருகின்ற பக்தர்களிடம் மூக்குப்பொடியை மட்டுமே காணிக் கையாகப் பெற்றுக் கொண்டதால், இவருக்கு மூக்குப்பொடிச் சித்தர் என்ற பெயரே நிலைத்துவிட்டது.

சுமார் நாற்பது வருடங்களுக்கு முன்பு தமது மனைவி மறைந்த பின்பு ஆன்மீக நாட்டம் கொண்ட இச்சித்தர், கடலூர், சிதம்பரம் உள்ளிட்ட நகரங்களில் தங்கியபின்பு தமது இறுதிக் காலத் தைப் பெரும்பாலும் திருவண்ணாமலையிலேயே கழித்திருக்கிறார்.

திருவண்ணாமலையில் நகரத்தார் சமூகத் தினர் நிறுவிய சாதுக்கள் மடத்தில் சிறிது காலம் தங்கியிருந்த பின்னர், மகான் சேஷாத்திரி சுவாமி களின் திருமட வளாகத்திலேயே தமது இறுதிக் காலம் வரையிலும் தங்கியிருந்தார் மூக்குப்பொடிச் சித்தர்.

எதிலும் பற்றின்றி, யாரிடமும் எதுவும் பேசாமல், அவ்வப்போது மூக்குப்பொடியை மட்டும் போட்டுக் கொள்ளும் இச்சித்தர், நீண்ட நாட்கள் எதுவுமே சாப்பிடாமல் இருப்பாராம். பின்னர் திடீ ரென்று ஏதாவது ஓர் உணவகத்துக்குச் சென்று அவர்கள் அளிக்கும் உணவை உட்கொள்வாராம்.

அவரது பார்வை பட்டாலே பாக்கியம் என்று நினைக்கும் உணவக உரிமையாளர்கள், அவர் தங்களது உணவகத்தில் ஒரு நாளாவது சாப்பிட மாட்டாரா என்று காத்திருப்பார்களாம். அவர்

உணவு அருந்தும் உணவகத்தின் உரிமையாளர்கள் பலவித நலன் களையும் பெறுவார்கள் என்று கூறப்படுகின்றது.

திடீரென்று எதாவது ஒரு வியாபார நிறுவனத்திற்குள் மூக்குப்பொடிச் சித்தர் நுழைந்து அங்குள்ள கல்லாப் பெட்டியிலிருந்து கொத்தாகப் பணத்தை எடுத்துக் கொண்டு வெளியே வந்து ஏழை எளியவர்களுக்கு விநியோகித்துவிட்டு மீதிப் பணத்தை இறைத்து விடு வாராம். அவ்வாறு எந்தக் கடையிலிருந்து அவர் பணத்தை எடுத்து அள்ளி வீசுகிறாரோ, அந்தக் கடை உரிமையாளருக்கு அன்று முதல் வியாபாரத்தில் பெரிய அளவில் லாபம் கிடைக்கத் தொடங்கும் என்பதால் யாரும் அவர் பணத்தை எடுத்ததைத் தடுத்ததே இல்லை.



சேஷாத்திரி சுவாமிகள்

திடீரென்று ஒருமுறை மின்சாரக் கம்பத்தில் ஏறி மின்சார ஒயர்களின் மீது மூக்குப்பொடிச் சித்தர் நடந்ததா கவும் கூறப்படுகிறது. உயர் அழுத்த மின்சாரம் அவர் திருவுடலில் பட்டபோதும் அவருக்கு எந்தவொரு பாதிப்பும் இல்லை யாம். இதுபோன்று மூக்குப்பொடிச் சித்தர் தொடர்பான பல அதிசய நிகழ்வுகளைத் திரு வண்ணாமலையில் வாழும் பக்தர்கள் சொல்லிச் சொல்லி மெய் சிலிர்க்கின்றார்கள்.

நம் நாட்டில் நடைபெற இருக்கும் முக்கிய நிகழ்வுகளை முன்கூட்டியே உணர்ந்து சூசக மாகத் தெரிவிப்பது மூக்குப்பொடிச் சித்தரின் தனிச் சிறப்பு ஆகும்.

தானே புயல் வருதற்குச் சில நாட்கள் முன்பு கடலூர் கடற்கரைக்குச் சென்றார் மூக்குப்பொடிச் சித்தர். அங்கு ‘‘அம்மா தாயே, எதுக்கும்மா நீ கோபப்படறே’’ என்று கடலன்னையிடம் இவர் பேசி விட்டுச் சென்ற சில நாட்களில் புயல் வந்ததாம்.

இதே போன்று கடந்த 2016 ஆம் ஆண்டு, ஒரு பக்தர் தமக்குக் காணிக்கையாக அளித்த அன்றைய ஐந்நூறு ரூபாய் மற்றும் ஆயிரம் ரூபாய் நோட்டுகளை மூக்குப்பொடிச் சித்தர் தூக்கி எறிந்துள்ளாராம். அதற்குச் சில தினங்கள் கழித்து மத்திய அரசின் ரூபாய் நோட்டு மதிப் பிழப்பு நடவடிக்கை அறிவிக்கப் பட்டது.

மூக்குப்பொடிச் சித்தரின் அனுமதியின்றி யாரொரு வரும் அவரைத் தரிசிக் கவும் இயலாதாம். யாருட னும் நெருங்கிப் பழகா மலும், உலகப் பற்று களையெல்லாம் துறந்தவரா கவும் இருந்த போதிலும் தம்மை நம்பிய உண்மை பக்தர்களைத் தமது அருட்பார்வையாலும், மௌன உபதேசங்களாலும் அவர் வழி நடத்தியுள்ளார்.



பக்தர்கள் பலருக்கு ஆன்மிக குருவாக விளங்கிய மூக்குப்பொடிச் சித்தர் தமது எண்பத் தைந்தாவது வயதில் தாம் நீண்ட காலம் தங்கியிருந்த சேஷாத்திரி சுவாமிகளின் திருமட வளாகத்தில், கடந்த வருடம், 09.12.2018 அன்று சித்தியடைந்தார்.

அதிசயங்களுக்குக் குறைவில்லாத திரு வண்ணாமலைத் திருத்தலம் இன்னும் எத்தனை தவசீலர்களையும் சித்தர்களையும் தன்னகத்தே அடைகாத்து வருகிறதோ! ●

# சுயமரியாதை வேண்டும்! 3

ஒரு நாள் புவனேசுவரி தேவி தம் மகன் நரேந்திரனிடம், "மகனே! நீ என்றும் தூயவனாக இரு. சுயமரியாதையுடன் இரு. அதே சமயத்தில் மற்றவர்களின் சுயமரியாதைக்கு மதிப்புக் கொடுத்து வாழவும் கற்றுக்கொள். மென்மையானவனாகவும், சமநிலை குலையாதவனாகவும் இரு; ஆனால் தேவை ஏற்படும்போது, உன் இதயத்தை இரும்பாக்கிக் கொள்ளவும் தயங்காதே!" என்று கூறினார்.

தம் தாய் கூறிய இந்த அறிவுரைகளை, நரேந்திரர் துறவறம் மேற்கொண்டு சுவாமி விவேகானந்தர் ஆனபிறகும் மறவாமல் பின்பற்றினார்.

தன்மானம், சுயமரியாதை உணர்வு விவேகானந்தரிடம் முழுமையாக இருந்தது. தம்மைப் போலவே இந்திய மக்களும் தன்மானத்துடன், இணையற்ற பெருமைக்குரிய தங்கள் பாரம்பரியங்களை அறிந்தவர்களாக வாழ வேண்டும் என்று அவர் விரும்பினார்.

இது தொடர்புடைய ஒரு நிகழ்ச்சியை இங்கு இப்போது நாம் பார்க்கப் போகிறோம்.

ஒருமுறை விவேகானந்தரும் மற்றோர் அன்பரும் ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள்.

அப்போது டிக்கெட் பரிசோதகர் அங்கு வந்தார். அவர் வெள்ளைக்காரர்.

அவர் அன்பரிடம், "நீங்கள் இந்தப் பெட்டியில் பயணம் செய்ய முடியாது!" என்று முரட்டுத்தனமாகக் கூறி, அன்பரை அந்தப் பெட்டியிலிருந்து வெளியேறும்படி வற்புறுத்தினார். மேலும் அந்த வெள்ளைக்காரர், தமக்குச் சாதகமாக ஏதோ ஒரு ரயில்வே சட்டத்தையும் கூறினார்.

அன்பரும் ரயில்வேயில் பணிபுரியும் ஒருவர்தாம். அன்பர் டிக்கெட் பரிசோதகரிடம், "நீங்கள் கூறுவதுபோல் ரயில்வேயில் அப்படி ஒரு சட்டம் இல்லை"





என்று கூறி, அந்த ரயில் பெட்டியிலிருந்து வெளியேற மறுத்தார்.

இவ்விதம் தம்மை ஓர் இந்தியன் எதிர்ப்பதைப் பார்த்து, அந்த வெள்ளைக்காரருக்குக் கோபம் தலைக்கேறியது.

கடைசியில் இந்தப் பிரச்னையில் விவேகானந்தர் தலையிட்டார். அதுவும் வெள்ளைக்காரரின் கோபத்தைத் தணிக்கவில்லை. அவர் கோபத்துடன் கடுமையான குரலில் விவேகானந்தரிடம் இந்தியில் பேசினார்.

**வெள்ளைக்காரர்** : *"நீ ஏன் இதில் தலையிடுகிறாய்?"*

**விவேகானந்தர்** : *"முதல் வகுப்பில் பயணம் செய்யும் ஒருவரை 'நீ' என்று நீங்கள் மரியாதை இல்லாமல் அழைக்கிறீர்களே! முதலில் நீங்கள் மற்றவர்களிடம் மரியாதையாகப் பழகுவதற்குக் கற்றுக் கொள்ளுங்கள்."*

**வெள்ளைக்காரர்** : *"தவறுதான், பொறுத்துக் கொள்ளுங்கள். எனக்கு இந்தி சரியாகத் தெரியாது. இவன் (This man) ..."*

**விவேகானந்தர் (குறுக்கிட்டு)** : *"உங்களுக்கு இந்தி சரியாகத் தெரியாது என்று சொல்கிறீர்கள்! ஆனால் இப்போது உங்களுக்கு உங்கள் தாய்மொழியான ஆங்கிலமும் சரியாகத் தெரியாது என்று தெரிகிறது. 'இவன்' (This man) என்று அல்ல, 'இவர்' (This Gentleman) என்று சொல்ல வேண்டும்."*

தமது தவறை உணர்ந்த பரிசோதகர், பெட்டியைவிட்டு வெளியேறினார்.

பின்னர் ஒரு சமயம் விவேகானந்தர், கேத்ரி மன்னரின் தனிச் செயலாளர் ஜக்மோகனிடம் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவர் மேற்கூறிய நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு கூறினார்:

*"வெள்ளைக்காரர்களுடன் பழகும்போது நாம் நமது சுயமரியாதையை விட்டுக் கொடுக்கக் கூடாது. உரியவருக்கு உரிய மரியாதைக் கொடுத்துப் பழகாததால்தான் வெள்ளைக்காரர்கள் நம்மை அவமதிக்கிறார்கள். நமக்குச் சுயமரியாதை வேண்டும், பிறருக்கும் நாம் மரியாதை கொடுக்க வேண்டும்."*

●

# ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்

மதிப்பிற்குரிய வாடிக்கையாளர்களின் தொடர்ந்த நல் ஆதரவினால்
பொன்விழா ஆண்டை கடந்து சேவை செய்வதில்
பெருமிதமும் மகிழ்ச்சியும் கொள்கிறோம்

மேலும் தங்களது தொடர்ந்த ஆதரவினை எப்பொழுதும் போல் கொடுத்து
ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

உழைப்பு! தரம்! சிக்கனம்! இவற்றின் சின்னம்




டிரக்குகள், இலகுரக வாகனங்கள் மற்றும் கார் ஆகியவற்றின் டயர்களை
MRF ப்ரீக்யூர்ட் முறையில் ரிட்ரெடிங் செய்வதில் நாங்கள் வெற்றிநடை
போட்டு முன்னணியில் திகழ்கின்றோம்.

மேலும் கன்வென்சனல் முறையில் டிரேக்டர் உட்பட எல்ல வகையான டயர்களையும்
ரிட்ரெடிங் செய்வதற்கும், ரேடியல் டயர்களை ரிட்ரெடிங் செய்வதற்கும் தேவையான
அனைத்துச் சிறப்பு திறனையும் எங்களது நிறுவனங்கள் பெற்றுள்ளன.

பதிவு அலுவலகம் :

**ஏஆர்சி ரிட்ரெடிங் கம்பெனி (பி) லிமிடெட்**

(ஏபிடி – சக்தி குரூப்)

64, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயமுத்தூர் – 18

தொலைபேசி : 0422-2234500, 2234600

கிளை அலுவலகம் :

10-ஏ/1, திருவனந்தபுரம் ஹைரோடு, திருநெல்வேலி – 627 002

போன் : 2502403



ஜெ. கமலநாதன்

# நிழலின் பெருமை...

எம்.எல்.ஏ.வின் தொகுதி நிதி
ரூபாய் இரண்டு இலட்சத்தில் கட்டப்பட்ட
பேருந்து நிறுத்த நிழற்குடை
சிதிலமடைந்து கிடக்கிறது
என் கிராமத்தை ஒட்டிச் செல்லும்
நெடுஞ்சாலையில்.

அறுபது ஆண்டுகளான
ஆலமரம் ஒன்று
அதனருகில் தன் கிளை பரப்பி இலைபரப்பி
ஐம்பது பேர் நிற்கவும் குளிர் நிழல் தந்து
நிம்மதி தருகிறது.

இயற்கை அன்னையின் கருணை மனம்
விசாலமானது.
ஆனால், மரத்தின்கீழே பெயர்ப்பலகை
ஏதுமில்லை.

எம்.எல்.ஏ. கட்டிய
பேருந்து நிறுத்த நிழற்குடையில்
பெயர்ப்பலகை இருக்கிறது.
நிழல் இல்லை.





சமையல்

# மங்களூர் இட்லி

**தேவையான பொருட்கள் :**

*ரவை : 2 கப், உளுந்து : 3/4 கப், புளி : நெல்லிக்காய் அளவு, மிளகாய் வற்றல் : 4, புளித்த கெட்டித் தயிர் : 1 கப், உப்பு : தேவைக்கேற்ப.*

செய்முறை :

1. *உளுந்தை ஊறவைத்து உப்பு, மிளகாய் வற்றல், புளி சேர்த்து அரைக்கவும்.*
2. *இத்துடன் ரவை, தயிர் சேர்த்துக் கலக்கவும். (தேவையானால் தண்ணீர் சேர்க்கவும்.)*
3. *இட்லித் தட்டில் எண்ணெய் தடவி, இட்லியாக ஊற்றவும்.*
4. *7 நிமிடங்களில் எடுத்துச் சூடாகப் பரிமாறவும்.*

*இது அரைத்தவுடனே செய்யலாம். தொட்டுக்கொள்ள எதுவும் தேவையில்லை. சுவையாக இருக்கும்.*

*– ர. **கிருஷ்ணவேணி,***
*சென்னை.*


# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 37 மார்ச் 2019 இதழ் : 2

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**
ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**
*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **த. ராஜ்குமார்**
*Printer* : **T. RAJKUMAR,**
**Rukmani Offset Press**
ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ ஆசிரியருக்கு உரிமை உண்டு.

'ஓம் சக்தி'யில் பிரசுரமாகும் படைப்புகளின் கருத்துகள் அவற்றின் எழுத்தாளர்களுக்கு உரியவையே தவிர, பத்திரிகை அவற்றிற்குப் பொறுப்பேற்காது.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :
**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**
E-mail : omsakthieditorial@gmail.com

சிறுகதை

கமலவேலன்

# மற்றும் ஓர் உயிர்

ஆயிரக்கணக்கான மரங்களை அழித்து, நூற்றுக்கணக்கான வீடு களைத் தரைமட்டமாக்கி, உருவாக்கப்பட்ட அந்தத் தேசிய நெடுஞ் சாலைகள் "மனிதகுல உயர்வுக்கு"த் துணைபுரிகின்றன என்று விளம்பரங்கள் சொல்லுகின்றன.



அந்தச் சாலைகள்தாம் அவ்வப்போது விபத்துகள் என்ற பெயரில் மனித உயிர் களைப் பறிக்கும் கொலைக் களமாகவும் விளங்குகின்றன.

வாகன ஓட்டிகள் தங் களையும் அறியாமல் சற்றே கண் அயர்ந்தால் அவ்வளவு தான். ஒரு நிமிடம் அல்லது அதற்கும் குறைவான விநாடி களில் விபத்து அரங்கேறி விடுகிறது!

அப்படி ஒரு விபத்து –

அந்த அதிகாலை நேரத் தில் கொடைரோடு – பாண்டியராஜபுரத்திற்கு இடையே நிகழ்ந்துவிட்டது!

ஆள் நடமாட்டம் கிடை யாது.

முன்னால் சென்று கொண்டிருந்த இனோவா மீது, அதனைப் பின் தொடர்ந்து கொண் டிருந்த பழைய மாடல் அம்பாஸிடர் கார் ஒன்று கண் இமைக்கும் பொழுதில் இடித்துவிட்டது!

இனோவா நிலை தடுமாறி மைல் கல்லில் மோதிப் பள்ளத்தில் உருண்டு விழுந்துவிட்டது.

அம்பாஸிடர் தடுப்புச் சுவரில் மோதி முகப்புக் கண்ணாடி சிதைய... நின்றுவிட்டது...

அடிபட்டு உயிருக்காகப் போராடுபவர்களின் அலறல்... மரண ஓலம்...

"ஐயோ... அம்மா..."

"காப்பாத்துங்க..." காற்றில் கரைந்த கதறல்கள்...

கோர விபத்துப் பற்றி யாரோ ஒருவர் 'கொடை ரோடு' 'டோல்கேட்டிற்கு'த் தகவல் கொடுத்திருக்கக் கூடும்.

பத்து நிமிடங்களில் 108 ஆம்புலன்ஸ் 'சைரன்' ஒலி எழுப்பிக் கொண்டே விபத்து நடந்த பகுதிக்கு வந்து சேர்ந்தது.



"ஹைவேய்ல... ஆடு, மாடு மேய விடறதே சட்டப்படி குற்றம்... ரொம்பப் பேசினால் உங்க பெரியாத்தா மேலதான் நடவடிக்கை எடுக்க வேண்டி வரும்..." எரிந்து விழுந்தார் இன்ஸ்பெக்டர்.

இனோவாவில் நடுத்தர வயதுக் காரர் ஒருவர்; நடுத்தர வயதுப் பெண் ஒருத்தி; அவர் மனைவியாக இருக்க வேண்டும். ஓட்டுநருக்கு முன்நெற்றி, இடதுகையில் பலத்த அடி. அம்பாஸிடர் ஓட்டுநருக்கு வலதுகண் ஓரம் அடி.

108 ஆம்புலன்ஸ் இவர்களை ஏற்றிக் கொண்டு திண்டுக்கல் அரசு மருத்துவமனையை நோக்கி அதிவேகமாய்ப் புறப்பட்டது.

ஆம்புலன்ஸ் சென்ற சில நொடி களில் அம்மையநாயக்கனூர் காவல் நிலையத்தினின்று, காவல்துறை அதிகாரிகள் 'பொலேரா'வில் வந்து இறங்கினர்.

விபத்து நடந்த இடத்தை ஆய்வு செய்தனர். இனோவாவையும், அம்பா ஸிடரையும் சுற்றிச் சுற்றி வந்து பார்த்தார்கள்.

எங்கிருந்தோ இரு சக்கர வாகனத் தில் ஃபோட்டோ கிராஃபர் வந்து சேர்ந்தார். ஃப்ளாஸ் மின்னி... நான்கைந்து படங்கள் எடுத்தார்.

இந்தச் சடங்கு, சம்பிரதாயங்கள் முடியவும் பொழுது விடியவும் சரி யாக இருந்தது.

விபத்து நடந்த பகுதிக்கு அருகேயுள்ள வீடுகளுக்கு எப்படியோ செய்தி எட்டிவிட்டது.

ஆணும் பெண்ணுமாய் பத்துப் பதினைந்து பேர்கள் கூடிவிட் டார்கள்.

கூட்டத்தில் ஐம்பது வயதைக் கடந்த பெண்மணி ஒருத்தி திடீரென பெருங்குரல் எடுத்து அழத் தொடங்கினாள்...

"ஐய்யய்யோ.... என் பிழைப்பே... நாசமாப் போச்சே... தாயி... மக மாயி... என்ன இப்படி நட்டாத்திலே விட்டுட்டியே..."

"பெரியாத்தா... என்னாச்சு... ஏன் இப்படி ஒப்பாரி வைச்சு... ஊரைக் கூட்டறே...?" கூட்டத்தில் நின்றிருந்த இளைஞன் குழப்பத்துடன் கேட் டான்.

"அங்கே பாரு ராசப்பா...அதோ பள்ளத்துல... பசுமாடு... என் வீட்டு மாடுடா... பின்னங்கால் ரெண்டும் அடிபட்டு ரத்தம் சொட்டச் சொட்ட... உயிருக்குப் போராடிக் கிட்டு இருக்குது பாருடா... ஐயோ... நான் இனிமேல் எப்படி வாழப் போறேன்?"

ராசப்பாவும் மற்றவர்களும் அந்தப் பள்ளத்தைப் பார்த்தார்கள். பசுமாடு உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தது...

"பெரியாத்தா, அழாதே... உன் மாட்டைக் காப்பாத்திடலாம்..." என்று சொன்ன ராசப்பா, உடனே இன்ஸ்பெக்டரைத் திரும்பிப் பார்த்தான்.

"சார்... ஒரு நிமிஷம்..."

"சொல்லுப்பா..."

"பெரியாத்தாவுக்கு இன்னி தேதிக்குக் கஞ்சி ஊத்தறதே அந்தப் பசுமாடுதான்...!"

கண்கள் விரிய ராஜப்பாவைப் பார்த்தார் இன்ஸ்பெக்டர்.

"இன்ஸ்பெக்டர் சார்... நான் சொல்றதைப் பொறுமையாக் கேளுங்க... பெரியாத்தாவுக்குச் சொந் தம்னு சொல்லிக்கறதுக்கு ஊர்ல வேறு யாரும் கிடையாது. ஒரே மகன் தான். அவனும் வேலை தேடித் திருப்பூர் போய்விட்டான்..."

"ஏய்... ராஜப்பா... காலைப் பொழுதுல எங்க பொறுமையைச் சோதிக்காதே... கதையெல்லாம் வேண்டாம்... என்ன வேணும்? அதைச் சுருக்கமாகச் சொல்லு..."

அங்கு நின்றிருந்தவர்கள் முகங் களில் பேரமைதி.



“தினமும் ரெண்டு வேளையும் இருபது லிட்டர் பால் தர்ற காமதேனு சார் அந்த மாடு! அந்தப் பாலை வித்துத்தான் பெரியாத்தா வாழ்க்கையே ஓடுது... அந்த மாட்டை எப்படியாவது காப்பாத்திக் கொடுங்க சார்...” ராசப்பா கெஞ்சினான்.

“முட்டாள்... மாட்டை நான் எப்படிக் காப்பாற்ற முடியும்? நான் என்ன வெட்டர்னரி டாக்டரா?” இன்ஸ்பெக்டர் பொறுமையிழந்து கத்தினார்.

“கோபப்படாதீங்க சார். நீங்க ஃபோன் பண்ணினால் அம்மையநாயக்கனூர்ல இருக்கற மாட்டு டாக்டர்

உடனே வந்துடுவாரு. அவர் வந்து முதலுதவி செய்யட்டும்... அப்புறமா டெம்ப்போவில் அந்த மாட்டை அம்மையநாயக்கனூருக்கே ஏற்றிச் சென்று வைத்தியம் பார்க்கலாம்...”

“போகாத ஊருக்கு நீ வழி சொல்றே ராசப்பா. வெட்டர்னரி டாக்டர் ஊர்ல இருக்காரா? அல்லது அவர் நிலைக்கோட்டையில இருந்து வர்றாரா? இந்த விவரமெல்லாம் எனக்குத் தெரியாது. இதெல்லாம் என் வேலையும் இல்லை. வழியை விடு...”

“ஐயா... சாமி... அப்படிச் சொல்லாதீங்க... நீங்கதான் இதுக்கும் ஒரு வழியைக் காட்டணும்...” பெரியாத்தாவின் பரிதவிப்பு.

“ராசப்பா... நான் இப்போ விபத்து நடந்தது பற்றிய ரிப்போர்ட்’டை எழுதிக் கொடுக்கணும். அப்புறம் ஆர்.டி.ஓ. ஆபிசுக்குத் தகவல் கொடுக்கணும். அவங்க வந்து பார்த்துத்தான் இந்த ஆக்ஸிடெண்ட் எப்படி நடந்ததுன்னு முடிவு பண்ணுவாங்க... அதை வைச்சுத்தான் கோர்ட்டுல இன்ஸ்யூரன்ஸ் கிளைம் பண்ண முடியும். இவ்வளவு ஃபார்மாலிட்டிஸ் இருக்குது. படிச்சவன் நீ. நீயே இப்படிப் பேசினால் எப்படி?”

“ஊர்ல உள்ள யாராவது ஒரு பெரியவரைப் பார்த்து மாட்டுக்கு வைத்தியம் செய்யற வழியைப் பாரு. டிரைவர் வண்டியை எடு...”

“வண்டியை எடுக்க விடமாட்டோம்...” ராசப்பா உறுதியாய் இரும்புத்தூண் போல் நிமிர்ந்து நின்றான்.

இன்ஸ்பெக்டர் இதை எதிர்பார்க்கவில்லை.

“ஹைவேய்ல... ஆடு, மாடு மேய விடறதே சட்டப்படி குற்றம்... ரொம்பப் பேசினால் உங்க பெரியாத்தா மேலதான் நடவடிக்கை எடுக்க வேண்டி வரும்...” எரிந்து விழுந்தார் இன்ஸ்பெக்டர்.

ராசப்பா கூட்டத்தைச் சுற்றிலும் நோட்டம்விட்டான். அவன் வயதை ஒத்த வாலிபர்கள் ஆறுபேர் நின்றிருந்தார்கள்.

“ஹைவேய்ல... ஆடு, மாடு மேயக் கூடாதுதான்... மாட்டுக்கு அதெல்லாம் தெரியாதே! எப்படியோ வந்திடுச்சு! காப்பாத்த வேண்டியது நம்ம கடமைதானே சார்...” ராசப்பா நிதானமாகப் பேசினான்.

“இப்போ... நான் என்ன செய்யணுங்கறே...?” பொறுமையிழந்து கேட்டார் இன்ஸ்பெக்டர்.

“மனுஷன் உயிரைப் போல மாட்டோட உயிரும் விலை மதிப்பில்லாததுதான்... பெரியாத்தாவின் வாழ்வாதாரமே அந்தப் பசுமாடுதான்! வெட்டர்னரி டாக்டர் இப்போ இங்கே வரணும். அவர் இல்லேன்னா அவரோட உதவியாளர் வரணும்... வந்து அந்த மாட்டுக்கு வைத்தியம் பார்க்கணும்...”

“சரி... ஏற்பாடு செய்யறேன்... டிரைவர் வண்டியை எடு...”

“சார்... இங்கே இருந்தபடியே டாக்டருக்கு செல்ஃபோன்ல பேசுங்க... அவர் வரணும்...”

சொல்லிக் கொண்டே ராசப்பவும் அவனது சகாக்களும் ‘பொலேராவின்’ முன் சம்மணம் இட்டு உட்கார்ந்து விட்டார்கள்!

இன்ஸ்பெக்டர் அலைபேசியைக் கையில் எடுத்தார்; பேசினார்.

பத்து நிமிடங்கள் கடந்தன.

தூரத்தே ஓர் ஆட்டோ வந்து கொண்டிருந்தது! அந்த ஆட்டோவில் ஒருவேளை வெட்டர்னரி டாக்டர் வரலாம்!

ராசப்பாவும் அவனது கூட்டாளிகளும் இன்னும் உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை...

பெரியாத்தாவின் அழுகுரல் நின்றபாடில்லை...

பசுமாடு...?

விதியிருந்தால் பிழைக்கும்... ●

# இம்மாதராசி பலன்

**“என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!”**

**1.3.2019 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| புதன் | செவ்வாய் | | |
| சூரியன் | 06.3.2019 ராகு–மிதுனம்<br>06.3.2019 கேது–தனுசு<br>14.3.2019 சூரியன்–மீனம்<br>15.3.2019 புதன்–கும்பம்<br>21.3.2019 சுக்கிரன்–கும்பம்<br>22.3.2019 செவ்.– ரிஷபம்<br>29.3.2019 குரு – தனுசு | | ராகு |
| சுக்கிரன் கேது | | | |
| சனி சந்திரன் | குரு | | |

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**




**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் தொழில், உத்தியோகத் துறைகளில் ஓரளவு நன்மையையும், தன வரவையும், பொருள் வரவையும், அரசாங்கக் காரியங்களில் அனுகூலத்தையும் ஏற்படுத்தக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் செலவு, விரயம், அலைச்சல் முதலியவற்றை அடைய நேரிடும். செவ்வாய் 22–ஆம் தேதி வரை கோபதாபத்தை ஏற்படுத்தலாம். பின்னர் தண்டச் செலவை உண்டாக்கக்கூடும். தடித்த வார்த்தை பேசுவீர்கள். புதன் 14–ஆம் தேதி வரை உறவினர்கள் வகையில் பிரச்சனைகள், மனக்கசப்பு முதலியவற்றை ஏற்படுத்தக்கூடும். பின்னர் மாதக் கடைசி வரை உறவினர்கள் மூலம் நன்மையை ஏற்படுத்தும் வாய்ப்புண்டு.

குரு 8–இல் சஞ்சரிப்பதால், உடல் ஆரோக்கியத்திலும், பொருளாதார விஷயங்களிலும் கவனம் வேண்டும். சனி 9–இல் சஞ்சரிப்பதால் தகப்பன் வழியில் சண்டை, சச்சரவுகளை ஏற்படுத்தும் வாய்ப்புண்டு. சுக்கிரன் 10–இல் சஞ்சரிப்பதால், 21–ஆம் தேதி வரை பெண்களால் ஏதேனும் பிரச்சனைகள், தடைகள் ஏற்படலாம். ராகு 6–ஆம் தேதி முதல் 3–இல் சஞ்சரிப்பதால், தைரியம், தன்னம்பிக்கை கூடும். கேது 6–ஆம் தேதி முதல் 9–இல் சனியுடன் சஞ்சரிப்பதால், அறங்காவல் துறை, ஆசிரமம் நடத்துபவர்கள் நன்மை அடைவர். சுப காரியங்கள் பலன் கொடுக்காது.




**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 10, 11–ஆமிடங்களில் சஞ்சரிப்பதால், பல வகையிலும் அனுகூலம் ஏற்படும். தொழில், பண வருவாய் கூடும். பொருள் வாங்கும் யோகமுண்டு. நண்பர்களால் ஆதாயம் ஏற்படும். தொழில்வழிப் பயணங்கள் வெற்றியாகும். பொறியியல் துறை சார்ந்தவர்களுக்கும், ஒப்பந்தக் கால அடிப்படையில் பணி செய்பவர்களுக்கும் மாதத்தின் பிற்பாதி யோகமானது. குரு இம்மாதம் செவ்வாயின் பார்வையை 22–ஆம் தேதிக்குப் பின்னர் அடைவதால், ஒரு சிலருக்குப் பூமி விற்கிரயங்களில் நன்மை ஏற்படும் வாய்ப்புண்டு.

செவ்வாய் ராசி மீது சஞ்சரிப்பதால், கோபதாபங்கள் ஏற்படலாம். பொறுமை அவசியம். 6–ஆம் தேதி முதல் ராகு வாக்குஸ்தானத்தில் சஞ்சரிக்க இருப்பதால், முதலீடுகள் செய்வதில் கவனம் வேண்டும். கேது 8–இல் சஞ்சரிப்பதால், பெரியோர்களுக்கு ஏதேனும் உபாதைகள் அடுத்த ஒன்றரை ஆண்டுக்காலத்திற்குள் ஏற்பட வாய்ப்புண்டு. மின்சார சாதனங்களைக் கையாள்வதில் போதிய கவனம் வேண்டும். சுப காரியங்களில்

29–ஆம் தேதி வரை ஈடுபடலாம். பின்னர் தடைகள் ஏற்படும். சனி 8–இல் சஞ்சரிப்பதால், ஒரு சிலர் தங்கள் வேலையை விட்டுவிட நேர லாம். அதுபோல் உடல் உபாதைகளும் ஏற்பட வாய்ப்புண்டு.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் காரியத் தடைகளை ஏற்படுத்தக்கூடும். இருப்பினும் மாதத்தின் பிற்பாதியில் நினைத்த காரியம் நிறைவேறும். தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலம் ஏற்படும். பணம், பொருள் லாபமாகும். தொழில்வழிப் பயணங்கள் மேற்கொள்ளலாம். செவ்வாய் 21–ஆம் தேதிவரை லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், அதிகாரிகள் மற்றும் பிரபலமானவர்களால் உதவிகள் சிலருக்குக் கிட்டும். சிலர் கடன்கள் கிடைக்கப் பெறுவர். எதிரியாலும் நன்மை ஏற்படும். குரு 29–ஆம் தேதி வரை உபத்திரவங்களை ஏற்படுத்தினாலும், பின்னர் புதிய மாற்றங்களை ஏற்படுத்தக்கூடும். சுக்கிரன் 21–ஆம் தேதி வரை 8–இல் சஞ்சரிப்பதால் குழந்தைகளால் செலவுண்டு.

ராகு 6–ஆம் தேதி முதல் உங்கள் ராசி மீது சஞ்சரிக்க இருப்பதால் ஒரு சிலர் உடல் ரீதியான பிரச்சனைகளைச் சந்திப்பர். ஒரு சிலர் மனக் குழப்பத்திற்கு ஆளாகக்கூடும். 7–இல் சனி சஞ்சரிப்பதால், கூட்டுத்தொழில் செய்பவர்கள் கருத்து வேற்றுமைகள் ஏற்படாதவாறு எல்லாப் பிரச்சனைகளிலும் விட்டுக்கொடுத்துச் செல்ல வேண்டும். குரு 29–ஆம் தேதி முதல் 7–இல் சஞ்சரிக்க இருப்பதால் ஒரு சிலருக்கு எதிர்பாராமல் திருமண யோகம் கிட்டும். 22–ஆம் தேதி முதல் செவ்வாய் 12–இல் சஞ்சரிப்பதால் தீயவர்கள் உங்கள் பொருளை அபகரிக்க வாய்ப்புண்டு, கவனம் தேவை.




**க**டக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் செலவினமும், உடல் நலிவுகளும், எதிர்பாராத நிகழ்ச்சிகளும் ஏற்படக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், காரியத்தடைகள் ஏற்படும். ஒன்றுக்கு மேற்பட்ட முயற்சிகள் நற்பலன் கொடுக்கும். செவ்வாய் 22–ஆம் தேதி வரை தொழில் துறையில் கலக்கத்தைக் கொடுத்தாலும், பின்னர் தொழில் ரீதியான லாபத்தையும், உயர்வையும் கொடுக்கும். அரசியல் தொடர்புடையவர்கள் நன்மை அடைவர்.

ராசி மீது அமர்ந்து தொந்தரவுகளைக் கொடுத்துவந்த ராகு, 6–ஆம் தேதி முதல் 12–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், உங்களின் தோற்றம், செயல்களில் மாற்றம் உண்டாகும். ராகு 12–இல் மறைவது யோகமாகும். மறைந்த ராகு நிறைந்த பலனைக் கொடுப்பார் என்பது சித்தாந்தமாகும். 5–இல் குரு அமர்ந்திருப்பதால், புத்திர வர்க்கத்தார் மூலம் அனுகூலம் ஏற்படும். அரசாங்கக் காரியங்களும் வெற்றியாகும். சனி 6–இல் சஞ்சரிப்பதால் சொத்து, சுகம் வாங்க, விற்க ஏற்ற காலமாகும். 6–இல் கேது – சனி சேர்க்கை ஏற்படுவதால், சகல காரியங்களும் கைகூடிவரும். 21–ஆம் தேதி வரை பெண்களால் பகைமை சிலருக்கு ஏற்படும்.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 7, 8–ஆமிடங்களில் சஞ்சரிப்பதால், குடும்பப் பிரச்சனைகள் கவலை கொடுக்கும். எதிர்பாராத செலவுகளும், சம்பவங்களும் இம்மாதம் பிற்பாதியில் ஏற்படக்கூடும். வயதானவர்களாக இருப்பின் உடல் நலனில் அதிக அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். 22–ஆம் தேதி வரை செவ்வாய் வீண் பயத்தை ஏற்படுத்தக்கூடும். பின்னர் தொழில் ரீதியான கலக்கத்தை ஏற்படுத்தக்கூடும். மேலும் பூமி லாபமும் சிலருக்குச் சித்தியாகும் வாய்ப்புண்டு.

ராகு 11–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், சிம்ம ராசி அன்பர்களுக்கு, அடுத்த ஒன்றரை ஆண்டுகளில் பலதரப்பட்ட நன்மைகளும், உதவிகளும், மாற்று மதத்தவர்களின் நட்பும் கிட்டும். 5–ஆம் வீட்டில் சனி – கேது சஞ்சரிப்பதால், புத்திர வர்க்கத்தாரைப் பற்றி அதிகம் அக்கறை காட்டுவீர்கள். ஒரு சிலர் பழமையான விஷயங்களிலும் ஆன்மிக விஷயங்களிலும் நாட்டம் கொள்வர். 21–ஆம் தேதி வரை சுக்கிரன் உங்களை ஸ்பரிச உணர்வுகளுக்கு ஆட்படுத்தக்கூடும். சர்க்கரை நோய் உள்ளவர்கள் பாதிக்கப்படுவர். 22–ஆம் தேதி முதல் பெண்களால் எதிர்ப்பை அடைய நேரிடும். சுப காரியங்களில் 29 தேதிக்குள் முயற்சி செய்தால் வெற்றியாகும்.

**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் தொழில் துறையில் பொருளாதார ரீதியான நன்மைகளை ஏற்படுத்தும். மாதத்தின் பிற்பாதியில் வாழ்க்கைத் துணைவர் வழியில் பிரச்சனைகளையும், செலவினங்

## கன்னி



களையும் ஏற்படத்தக்கூடும். செவ்வாய் 22–ஆம் தேதி வரை வீண் கோபதாபங்களையும் சச்சரவுகளையும் குடும்பத்தில் ஏற்படுத்தக்கூடும். பின்னர் 9–இல் செவ்வாய் சஞ்சரிப்பதல் வீண் வம்பு தேடி வரும்.

குரு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் கெட்ட பெயர் உங்களுக்கு ஏற்படலாம். ஒரு சிலர் உணர்ச்சிவசப்பட்டுத் தவறுகளைச் செய்துவிட்டு வருந்துவர். சனி 4–ஆம் வீட்டில் கேதுவுடன் சேர்க்கை பெற்று வரும் ஒன்றரை ஆண்டுக்காலம் சஞ்சரிக்க இருப்பதால், குடும்பத்தில் வயதானவர்களுக்குப் பாதிப்புகள் வரலாம். கூட்டுக்குடும்பமாக இருப்பவர்கள் அபிப்பிராய பேதங்களால் பிரிய நேரிடும். ராகு 6–ஆம் தேதி முதல் 10–இல் சஞ்சரிப்பதால் தொழில், வீடு முதலியவற்றில் மாற்றம் செய்ய எண்ணம் வரும். சுக்கிரன் 5–இல் சஞ்சரிப்பதால் ஏதேனும் அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரும். எதிர்பாராமல் தனப் பிராப்தி ஏற்படும். திருமண வாய்ப்பு இந்த ராசிக்காரர்களுக்குக் குறைவு.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், மனதில் சஞ்சலம் ஏற்படும். ஸ்திரமாக முடிவெடுத்துச் செயல்படுவது நல்லது. மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 6–இல் சஞ்சரிப்பதால், எடுத்த காரியம் வெற்றியாகும். தொழில் வழியிலும் பொருளாதார விஷயங்களிலும் ஆதாயம் உண்டாகும். 22–ஆம் தேதி வரை 7–இல் செவ்வாய் சஞ்சரிப்பதால் கோபதாபங்கள், விவாதங்களை வீட்டில் ஏற்படுத்திக்கொள்ள வேண்டாம். மாதத்தின் பிற்பாதியில் செவ்வாய் 8–இல் சஞ்சரிப்பதால், போர்க்குணம் ஏற்படும்.

சனி 3–இல் கேதுவுடன் இணைவு பெற்று அடுத்த ஒன்றரை வருடங்கள் சஞ்சரிப்பதால், உங்களின் வசதி வாய்ப்புகள் அதிகரிக்கும். ஒரு வீரனைப் போலச் செயல்படுவீர்கள். குரு இம்மாதம் இரண்டில் சஞ்சரிப்பதால், பணப்புழக்கம் இருந்து வரும். பின்னர் குரு 3–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், உங்களது அபிலாஷைகளைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். ராகு 9–ஆம் வீட்டில் 6–ஆம் தேதி முதல் சஞ்சரிப்பதால், தொலை தூரத்தில் உள்ளவர்களால் நன்மை ஏற்படும் அல்லது உங்களுக்கு வெளியூர் செல்ல வாய்ப்பு வரும்.

## விருச்சிகம்



**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், அலைச்சல் அதிகப்படும். தேக நலிவுகள் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 5–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், புத்தி சலனம், குழப்பம் ஏற்படும். சுப காரிய முயற்சிகள் ஈடேற வாய்ப்பில்லை. தொழில், உத்தியோகத் துறைகளில் அற்ப ஆதாயம் கிடைக்கும். செவ்வாய் 22–ஆம் தேதி வரை எதிர்ப்புகளைச் சமாளிக்க உதவும். மாதத்தின் பிற்பாதியில் தம்பதியிடையே வாக்குவாதம், வீண் விவாதத்தால் பிரச்சனைகள் உருவாகும்.

சனி 2–இல் சஞ்சரிப்பதால், வருமானம் வரும். தகுந்த செலவுகளும் இணையாக வரும். ராசிமீது குரு சஞ்சரிப்பதால், உடல் நலனில் தொடர்ந்து கவனம் செலுத்திவர வேண்டும். எதார்த்தமான பேச்சு, செயல்களால் நன்மை அடையலாம். கேது 2–இல் 6–ஆம் தேதி முதல் சஞ்சரிப்பதால் காசு, பணத்தைச் செலவிடுவதில் கவனம் வேண்டும். கேது பணத்தேவையை அதிகரிக்கும். ராகு 8–இல் சஞ்சரிப்பதால், எதிர்பாராத திருப்பங்கள் அடுத்த ஒன்றரை ஆண்டுகளில் ஏற்படும். ஒரு சிலர் விருப்பமற்ற இடத்தில் இக்கட்டான சூழ்நிலையில் பணி செய்ய நேரிடலாம்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் சகல காரியங்களிலும் அனுகூலத்தை ஏற்படுத்தும். தொழில், உத்தியோகத்துறைகளில் திருப்திகரமான சூழ்நிலை நிலவும். மாதத்தின் பிற்பாதியில் அலைச்சல் உண்டு. ஒரு சிலருக்கு உடல் நலம் பாதிக்கப்படும். செவ்வாய் 22–ஆம் தேதி வரை 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், நிலையாக முடிவெடுத்து எதிலும் செயல்பட மாட்டீர்கள். 22–ஆம் தேதிக்குப் பின்னர் 6–ஆம் வீட்டில் செவ்வாய் சஞ்சரிப்பதால் வழக்கு, வியாஜ்யங்கள் தொடங்க விருப்பம் உடையவர்கள் அவ்வாறான காரியங்களை மேற்கொள்ளலாம், வெற்றி உண்டாகும்.

சனி ஜென்ம ராசியில் சஞ்சரிக்கும் காலம் என்பதால், பெரிய எதிர்பார்ப்புகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டாம். கஷ்ட நஷ்டங்கள் சில காலம் தொடரும். சுக்கிரன் 22–ஆம் தேதி முதல் 4–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், குடும்பத்தில் சண்டை, சச்சரவு, அமைதிக்குறைவு, வீண்

மனஸ்தாபங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. கேது 6–ஆம் தேதி முதல் உங்கள் ராசியில் சனி சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், பெரியவர்களுக்குப் பாதிப்புகள் வரக்கூடும். தெய்வ வழிபாடு நல்லது. உஷ்ணம் சம்பந்தப்பட்ட நோய்கள் உங்களுக்கு ஏற்படக்கூடும். 7–இல் இராகு சஞ்சரிப்பதால், விதவைப் பெண்கள் உங்கள் வாழ்க்கையில் குறுக்கிடுவார்கள், கவனம் தேவை.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் பணத் தேவையை ஏற்படுத்தக்கூடும். ஒரு சிலருக்குக் கண்களில் உபாதைகள் ஏற்படக்கூடும். லஞ்சம் கொடுப்பதும், வாங்குவதும் இக்காலம் கூடாது. மாதத்தின் பிற்பாதியில் 3–இல் சூரியன் சஞ்சரிப்பதால், தொழில் துறையில் நன்மை ஏற்படும். மனதில் தன்னம்பிக்கை கூடும். உடல் ஆரோக்கியம் கூடும். நினைத்த காரியங்கள் வெற்றி பெறும். புதிய முயற்சிகளில் இறங்கலாம். குரு 29–ஆம் தேதி வரை லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், சுப காரிய முயற்சிகளில் இறங்கலாம்.

செவ்வாய் 22–ஆம் தேதி வரை 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பெரியோர் யோசனையைக் கேட்டு நடப்பது இளைஞர்களுக்கு நல்லது. உங்களது நடவடிக்கைகளில் கண்ணியம் இருப்பது நல்லது. 22–ஆம் தேதி முதல் செவ்வாய் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், புத்திர வர்க்கத்தாரால் கவலையும், குழப்பமும் ஏற்படும். சனி 12–இல் கேது சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால் வயதானவர்கள் ஆசிரமங்களுக்குச் சென்று வரக்கூடும் அல்லது தங்க வேண்டி வரலாம். இது அடுத்த ஒன்றரை ஆண்டுகளில் நடைபெறக்கூடும். ராகு 6–இல் சஞ்சரிப்பதால், பிறரது சொத்து, சுகங்களைச் சிலர் பராமரிக்கும் சூழ்நிலை வரலாம். அடுத்த மாதம் புதிய அந்தஸ்து சிலருக்கு ஏற்படும்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் ராசி மீது சஞ்சரிப்பதால் உஷ்ண ரோகம், சிரசு வலி, சலன மனப்போக்கு உங்களிடம் காணப்படும். மாதத்தின் பிற்பாதியில் இரண்டில் சூரியன் சஞ்சரிப்பதால் வாழ்க்கைத் துணைவரால் சிலர் நன்மை அடைவர். இருப்பினும் பணத்தேவையை நிறைவேற்றிக்கொள்ளப் பிறர் உதவியை நாடலாம். செவ்வாய் 22–ஆம் தேதி வரை எதிலும் தன்னம்பிக்கையுடன் செயல்பட்டு வெற்றியடையச் செய்யும் நிலையில் சஞ்சரிப்பது அனுகூலமே. 22–ஆம் தேதிக்குப் பின்னர் குடும்பத்தில் மூத்த உறுப்பினர்கள் சொல் கேட்டு நடப்பது நல்லது.

11–இல் கேது – சனி சேர்ந்து சஞ்சரிக்க இருப்பதால், பெரியோர் நட்புக் கிடைக்கப் பெறுவீர்கள். ராகு 5–ஆம் வீட்டில் அடுத்த ஒன்றரை ஆண்டுக்காலம் சஞ்சரிக்க இருப்பதால், தொழில் துறையில் விஞ்ஞான யுக்திகளைக் கையாள முயற்சிப்பீர்கள். மருத்துவம் தொடர்பான கல்வி பயில விரும்புவோர் வெற்றி பெறலாம். இந்த ராசியில் பிறந்த குழந்தைகளுக்குத் தொண்டைப் பகுதியிலோ, கைகளிலோ பாதிப்புகள் ஏற்படலாம், கவனம் தேவை. கல்யாணக் காரியங்கள் 29–ஆம் தேதிக்குப் பின்னர் எதிர்பாராமல் ஒரு சிலருக்குக் கூடிவரும்.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் விரயஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் அரசாங்கப்பீடை, விரயம், அலைச்சல் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் ராசி மீது சஞ்சரிப்பதால், வழக்கு விவகாரம், உடல் நலிவு, சட்டச்சிக்கல் முதலியவை ஏற்படக்கூடும். 22–ஆம் தேதி வரை செவ்வாய் 2–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வாய் வார்த்தையில் கவனம் வேண்டும். 22 தேதி முதல் 3–ஆம் வீட்டில் செவ்வாய் சஞ்சரிப்பதால் உத்தியோக லாபம், உயர்வு, தைரியம், சகோதர வழி நன்மை, சகல காரிய அனுகூலம் ஏற்படும்.

9–இல் குரு 29–ஆம் தேதி வரை சஞ்சரிப்பதால், தனம், பொருள் லாபம், சுப காரிய முயற்சி பலிதம் ஏற்படும். சனி – கேது 10–இல் சஞ்சரிப்பதால் தொழில் துறையில் பாதிப்புகள் ஏற்படக்கூடும். அடுத்த ஒன்றரை ஆண்டுகள் உங்களது அந்தஸ்து தாழ்ந்து போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்பதால், போக்குவரத்துகளில் கவனம் வேண்டும். சுக்கிரன் 21–ஆம் தேதி வரை பெண்கள் வழியில் நன்மை, தீமைகளை ஏற்படுத்தலாம். இளவயதுக்காரர்கள் மூலம் அவை ஏற்படும். திருமணம் முதலிய சுப காரியங்கள் இம்மாதக் கடைசிக்குள் ஒரு சிலருக்கு நடைபெற வாய்ப்புள்ளது. இல்லையெனில், சிறிது தாமதமாகும். 29 தேதிக்குப்பின் குரு 10–இல் சஞ்சரிக்க இருப்பதால் அவசரப்பட்டு வேலையை விட்டுவிட வேண்டாம்.

உங்களுக்கு ஏற்பட்ட விபத்துக் குறித்த செய்தியைப் பத்திரிகைகளில் பார்த்த பிறகு, இயன்றவரை விமானப் பிரயாணத்தைத் தவிர்ப்பது என்று நான் முடிவு செய்திருந்தேன். அதற்குக் காரணம் மரணம் பற்றிய, விபத்துப் பற்றிய பயம் அல்ல.




ஒரு விமானம் பறக்கிற சப்தத்தைத் தரையிலிருந்து கேட்கிற பொழுதுகூட நான் இப்பொழுதெல்லாம் உங்களைப் பற்றி நினைவு கொள்கிறேன். அந்த நினைவு உங்களுக்கு ஏற்பட்ட விபத்தை ஒரு கற்பனையாக என்னை அனுபவிக்க வைக்கிறது. என்னென்ன நேர்ந்திருக்கும்? அதை நீங்கள் எப்படி முதலில் உணர்ந்திருப்பீர்கள்? எதையும் உணர்வதற்கு முன்பாக எல்லாமே நடந்துவிடுகிறதா? விபத்தில் பிழைத்தவர்கள்கூட இது குறித்துத் தெளிவாக எதுவும் சொல்லத் தெரியாதவர்களாக இருக்கிறார்கள்.

காலமாக நிறுத்திக் கொண்டு விட்டேன். நான் இரண்டு முறை காரோட்டிக் கொண்டு போய்க் 'குட்டிக்கரணம்' அடித்திருக்கிறேன். நாலு ரவுண்டு தலைகீழாகச் சுற்றியிருக்கிறேன். அப்போதெல்லாம் நான் கொஞ்சமும் பயந்ததில்லை. ஆனால் மிகவும் அவமானப் பட்டிருக்கிறேன். அதுவும் ஓட்டுகிறவன் நானாகவே இருந்ததால்

# காம்ரேட் பாலன்

## 4

அநேகமாக எல்லோருமே மூர்ச்சையுற்றுப் போகிறார்கள். பிரக்ஞை தெளிந்த பிறகு மருத்துவமனையிலேயே கண் விழிக்கிறார்கள். ஏன் அப்படி? மரணத்தை அவர்கள் அங்கீகரித்தும் மரணம் அவர்களை அங்கீகரிக்கவில்லை என்றுதானே பொருள்? அது எவ்வளவு அவக்கேடான விஷயம்! அவர்கள் பயந்து போன குழந்தைகள் மாதிரி பிதற்றுகிறார்கள். அவர்கள்மீது மக்கள் அனாவசியமாக அனுதாபம் காட்டுகிறார்கள். அவர்களது உறவினர்கள் அதற்காக நஷ்டஈடு கேட்கிறார்கள். அல்லது கேட்காமலேயே பெறுகிறார்கள். இதெல்லாம் எனக்கு மிகவும் மோசமான விஷயமாகப் படுகிறது.



நான் விபத்துக்களோடு விளையாடிப் பழகியவன். ஆனால், அப்படி விளையாடுவதைச் சமீப

போலீஸ்காரன் ஏதோ குற்றவாளியைக் கேள்வி கேட்கிற மாதிரி விசாரிக்கிறான்.

மக்கள் மிகக் கேவலமான உணர்ச்சியோடு வேடிக்கை பார்க்கிறார்கள். இதையெல்லாம் உங்கள் விபத்துக்குப் பிறகு நடந்த விசாரணையில் அந்தப் பைலட்டுகள் அனுபவிக்க நேர்ந்தது. விபத்தில் சிக்கியவர்களுக்கு உதவி செய்வதற்குச் சிலர் பேரம் பேசுகிறார்கள். விபத்துக்கு ஆளாகி வேதனையிலிருப்பவன் வெற்று விமர்சனங்களால் சித்திரவதை செய்யப்படுகிறான்.

அங்குச் சிதறியவற்றில் எவற்றையாவது எடுத்துக் கொண்டு போகலாமா என்று பாமர

ஏழைகள் அலைகிற பொழுது, இவையெல்லாம் என்னிடம் எதற்காக இருக்கின்றன என்று நான் மனம் புழுங்குகின்றேன். எனக்கு மரணம் பற்றியோ, உடல் ஊனம் பற்றியோ துளிக்கூட வருத்தமில்லை. இதுபற்றி இவர்களுடைய அனுதாபங்கள் பெருத்த அவமானமாய் எனக்கு உறுத்தல் தருகின்றன.

அதுவுமில்லாமல் விமானத்தில் ஏறினால் எப்போதுமே உங்களைப் பற்றிக் கவர்ச்சிகரமாய் நினைப்பதற்கு மாறாக ஒரு விபத்தோடும், மரணத் தோடும், அதன் பிறகு ஒரு மனித ஆத்மாவுக்கு இந்தப் பொய்யர்களால் ஏற்படுகிற அவமானங் களோடும் சேர்ந்து நான் உங்களை நினைக்க நேருகிறது. அதில் எனக்கு மகிழ்ச்சியில்லை. உங்களுக்குத் தெரியும் : விமானத்தில் பறப்பது எவ்வளவு மகிழ்ச்சிகரமான விஷயம் என்று! அந்த மகிழ்ச்சியைக் கெடுத்துக் கொண்டு அவசியம் ஏதுமில்லாமல், நான் எதற்கு விமானப் பயணம் செய்ய வேண்டும்? அப்படி அவசர அவசரமாக நானே ஓடி அணைக்க வேண்டிய நெருப்பு எங்கும் பற்றிக் கொண்டு எரியவில்லை. நான் எல்லா வற்றையும் நிதானமாக அனுபவிக்கிறவன்.

சென்னையிலிருந்து புறப்படுகிற எனது கார் சில சமயங்களில் இரண்டு நாள் கழித்து திருச்சியை அடைகிறது. பிரயாண அனுபவம் ஆனந்தமாக இருந்தால் நான் போகிற இடத்தையும் கலந்து கொள்கிற நிகழ்ச்சியையும் கூட மறந்து விடுகிறேன். பல மணி நேரங்கள் ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டு பொழுது கழிக்கிற சோம்பேறி மாதிரி நான் காட்சி யளிக்கிறேன்.

தேசத்தின் தலைவிதியை நிர்ணயிக்கிற எந்தக் காரியத்திலும் நேரிடையான பங்கு எனக் கில்லை. வெறும் ஆடம்பரத்துக்காகவும், என்னால் முடிகிறது என்பதற்காகவும், எப்படி இரைச்சல் இட்டுக் கொண்டு தெருவில் வேகமாக ஓட முடியாதோ அது போலவே விமானத்தில் பறந்து திரிந்து பெருமையோ, புகழோ, நான் தேட வேண்டுவதில்லை. அவசியம் ஒன்று கருதியே வாழ்க்கையில் நான் அவசரம் காட்ட வேண்டும்.

எனவே பம்பாய் தமிழ்ச் சங்கத்திற்குப் போய் பாரதி விழாவில் கலந்துகொள்ள நான் விமானத் தில் போக வேண்டியதில்லை என்று கருதினேன். இது ஒரு விரதமோ, கொள்கையோ இல்லை. இதற்கு ஒரு மனோநிலை என்று மட்டுமே பெயர்.

இதை பம்பாய் தமிழ்ச் சங்கத் தலைவரிடம் நான் சொன்ன பொழுது அவர் என்ன நினைத் திருப்பாரோ? அதனை அவர் சரியாகத்தான் புரிந்து கொண்டார் என்பது எனக்குப் பின்னால் தெரிந்தது. ஆனாலும் இப்படி ஓர் எண்ணத்தைப் பகிரங்கப்படுத்தினால் அது எவ்வளவு தூரம் சற்றும் சரியில்லாதபடி புரிந்து கொள்ளப்படும் என்று என்னை எச்சரிப்பதுபோல் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

ஒரு பிரபல வாரப் பத்திரிகையிலிருந்து எனக்கு ஃபோன் வந்தது. உதவி ஆசிரியர்களில் ஒருவர் பேசினார் :

“சார், உங்களைப் பத்தி ஒரு நியூஸ் வந்திருக்குது; அதைப் பிரசுரிப்பதற்கு முன்னால் ஒரு வார்த்தை உங்களைக் கேட்டுக் கொள்ளலாம் என்று ஃபோன் செய்தேன்” என்று ஆரம்பித்து அவர் விஷயத்தைச் சொன்னார் :

“பாலதண்டாயுதத்திற்கு விமான விபத்து ஏற்பட்டதன் விளைவாய் நீங்கள் விமானப் பிரயா ணமே செய்வதில்லை என்று விரதம் எடுத்துக் கொண்டு விட்டீர்களாமே? அப்படி ஒரு தகவல் வந்திருக்கிறது... ஒரு தகவல் எழுத்தாளர் அனுப்பியிருக்கிறார்; உண்மைதானா?”

“எனது நல்ல காலமே! நல்ல வேளையாக நீங்கள் என்னிடம் கேட்டுவிட்டீர்கள். நன்றி. நான் பேசுவதெல்லாம் பிரசுரத்துக்காக அல்ல; பிரசுரத்திக்காக எனில் நான் தெளிவாகப் பிசிறு இல்லாமல் எதையும் பேசிவிடுவேன். உங்களுக்கு வந்துள்ள அந்தத் தகவல் முற்றிலும் பொய் அல்ல; ஆயினும் அதை ஒரு செய்தி ஆக்காதீர்கள்... அது என்னைப் பொய்யனாக்கிவிடும்” என்று அவரை நயந்து அந்தத் தகவலை அச்சு யந்திரம் நசுக்காமல் நான் காப்பாற்றினேன்.

பம்பாய் தமிழ்ச் சங்கத் தலைவரிடம் ரயில் டிக்கெட் வாங்கித் தந்தால் போதும் என்று சொல்லியிருந்தேன். அவரும் ஒப்புக் கொண்டு போனார். விழா அழைப்பிதழ், நிகழ்ச்சி நிரல் எல்லாம் தயார். ஆனால் சென்னையிலிருந்து பம்பாய் போக ரயில்கள் ஏதும் தயாராக இல்லை. போன ரயில்கள் பாதி வழியில் திருப்பி அனுப்பப் பட்டன. ஒரு மாதம் முழுவதும் பம்பாய்க்கும் சென் னைக்கும் ரயில் போக்குவரத்து முற்றாக நின்றிருந்தது.

தொழிலாளர் பிரச்சினை ஏதுமில்லை. எந்த ஸ்டேஷனை எந்தப் பிராந்திய ரயில்வேயோடு சேர்ப்பது என்ற இந்தச் சமூகத்தைப் பிடித்த ‘நோய் அரசிய’லின் விளைவு அந்த ஸ்டிரைக்!




அந்தத் தகவல் எழுத்தாளர் நினைத்த மாதிரி அச்சத்தாலோ, மூடத் தனத்தாலோ நான் விமானத்தில் போவதில்லை என்று விரதம் எடுத்திருப்பேனேயாகில், மிகக் கோழைத்தனமாக ஏதாவது சாக்குப் போக்குக் கூறி பம்பாய் பிரயா ணத்தை ரத்து செய்திருக்கலாம். ஆனால், நான் அவ்விதம் செய்யவில்லை. ஏனெனில் நான் கோ ழை அல்ல. அவசியம் வந்ததால் நான் அவசரம் கொண்டேன்.

சென்ற மாதம் அந்த நிகழ்ச்சிக்காக நான் விமானத்தில் போய் விமானத்திலேயே திரும்பி வந்தேன். விமானப் பயணம் மகிழ்ச்சியாய்த்தான் இருந்தது. ஆனால், அப்பொழுதுகூட நான் எண் ணியது போல் உங்களைப் பற்றிய விரும்பத்தகாத நினைவுகளை அந்த விமானப் பயணம் கிளர்த் தியது உண்மையே!

இதிலேயிருந்து நான் விஞ்ஞான, யந்திர சாதனைகளுக்கு எதிரான பழைமைவாதத்தைத் தழுவிக் கொண்டவன் என்று கருதிவிடாதீர்கள். எவரும் எதையும் அநேகமாகத் தவறாகவே அர்த்தம் செய்து கொள்கிற கீழ்நிலையில் இந்த எச்சரிக்கை எவரிடத்தும் அவசியம் ஆகிறது.

'நாடுகள் என்று பிரிந்து கிடக்கும் நந்த வனங்களில் எத்தனையோ வண்ணங்களில் மலர்ந்து செழிக்கும் மனிதகுல வாழ்க்கை என்னும் மலர்களில் ஊறித் ததும்பும் ஜீவ மதுவின் சுவை நாடி ரீங்கரிக்கும் ஒரு வண்டுபோல் இசை பாடிப் பறந்து வந்தது அந்த விமானம்' என்று 'பாரீசுக்குப் போ' நாவலின் முதல் வரியாக நான் புகழ்கிறேனே, அந்தப் புகழுணர்ச்சியே இப்பொழுதும் ஒரு விமானத்தைப் பார்க்கிற பொழுது எனக்கு ஏற்படு கிறது என்பது பொய் அல்ல.

'விஞ்ஞானமும், யந்திர நாகரிகமும் மனித நாகரிகத்துக்குத் தருவது வெறும் விபத்துக்களே' என்கிற சித்தாந்தத்துக்கு நான் ஒரு போதும் ஒருப்படேன். பாதுகாப்புக்காகக் கட்டிக் கொண்ட வீட்டின் கூரையே சரிந்துகூட மனித வாழ்க் கையில் விபத்து நேரிடுகிறது. விஞ்ஞானமும் யந்திரமும் மனிதரை நோயிலிருந்தும், அவலங் களிலிருந்தும், விபத்துக்களிலிருந்தும், ஆன்மீக இருட்டிருந்தும்கூடக் காப்பாற்றி வாழ்விக்கிறது. விஞ்ஞானம் என்பது மனிதனின் சாதனை மட்டும் அல்ல; கடவுளின் அருளும் கூட.

விஞ்ஞானத்தின் மீதும், விஞ்ஞானிகளின் மீதும் மகாத்மா காந்தியடிகள் கூட நீங்கா பக்தி கொண்டிருந்தார். விஞ்ஞானம் வியாபாரம் ஆகிற பொழுது யந்திரங்கள் மனிதர்களைக் கொல்லும் ஆயுதங்களைச் செய்து குவிக்கின்றன. அது ஆடம்பரத்துக்காக விரயம் செய்யப்படுகிற பொழுது கடவுளின் அருளான விஞ்ஞானத்தைச் சாத்தான் சுவீகாரம் கொண்டு விடுகிறான். கார்ல் மார்க்ஸ் யந்திரங்கள் வருகிற பொழுதெல்லாம் பாரதியார் மாதிரி புகழ்பாடிக் குதிக்கிறார். ஆனால், அணுசக்தி கண்டுபிடித்ததற்கு மகிழ் வது போல் அணுகுண்டுகள் கண்டுபிடித்ததற்காக அவர் ஆனந்தப்பட்டிருக்க முடியுமா? இன்றும்கூட சோவியத் யூனியன் அணு ஆயுதங்களை வைத் திருந்த போதும் அதற்காக அது மகிழ்ச்சியடைய வில்லை. அது ஒர் அணு ஆயுத அழிவில் மனித குலம் சிக்குறாமல் இருக்கும் பொருட்டுத் தனது வலிமையினால் யுத்தத்தைத் தடுத்து வைத்திருக் கிறது என்றெல்லாம் நாம் பேசிக் கொண் டிருந்ததில்லையா?

விஞ்ஞானம் பெருகட்டும், விண்வெளியில் மனிதர்கள் கந்தர்வர்கள் போல் திரியட்டும். நேரமும் தூரமும் கடந்து மனிதர்கள் நேசமுற்று நெருக்கமுறட்டும். ஆனால், யாராவது சிலர் அமைதியாக நம்மோடு உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருக்கட்டும். இவற்றோடு என்னுடைய சம்பந்தம் என்ன? என்று நினைக்கிற பொழுது – எங்கோ ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு

மனத்தாலும், அறிவாலும், எழுத்தாலும், பேச்சாலும் இந்த வாழ்வைத் தழுவிக் கொள்வது ஒன்றுதான் என்று நான் கருதுகிறேன். எனது மகனோ, சகோ தரனோ, 'நான் ஒரு விமான ஓட்டியாகிறேன்' என் றால் நான் அவர்களை; பயமுறுத்தி ஒருபோதும் தடுக்க மாட்டேன். ஆனால், அவ்விதமான ஆசைக்கு நான் ஆட்பட மாட்டேன். இதற்குக் கார ணம் அச்சம் என்பீர்களா?

உங்கள் விமான விபத்துச் சம்பவத்தை அடுத்துச் சில தினங்களுக்குள்ளாக ஒரு சோவியத் விமானமும் பாரீஸ் நகரத்தில் விபத்துக் குள்ளாகியது. உங்கள் விமான விபத்திலாவது சிலர் பிழைத்தார்கள். அந்த விமான விபத்தில் அனைவரும் உயிரிழந்தார்கள். அந்த வாரம் பூராவும் தமிழகத்துப் பத்திரிகைகள் அனைத்தும் 'விமான விபத்து விசேஷ மலரே' வெளியிட் டார்கள் என்று சொல்லலாம். அந்த அளவுக்குச் செய்திகள்; வர்ணனைகள்; படங்கள், விபத்துப் படங்கள், பிரேதங்களின் குரூரமான படங்கள். இப்படியாக அது பற்றி இங்கு மனதை உறுத்துகிற அளவுக்கு வெளிச்சம் போடப்பட்டது. ஆனால், சோவியத் யூனியனில் அவர்களுடைய அந்த விமான விபத்துச் செய்தி இருட்டடிப்புச் செய் யப்பட்டது.

இந்தியப் பத்திரிகைகள் அனைத்தும் அதை ஒரு குற்றச்சாட்டாகவே குறித்துத் தலைப்பிட்டு அந்தச் செய்தியைத் தந்தன. சோவியத் யூனிய னில் உள்ள பத்திரிகைச் சுதந்திரத்தை இவர்கள் பரிகசித்து விட்டதாக நான் அதனைக் கொள்ள முடியாது. இவர்களுடைய குற்றசாட்டிலிருந்தே 'ஒரு கம்யூனிஸ்ட் ஒரு விபத்து விஷயத்தில் எவ் வளவு கவனம் செலுத்துவான்? என்ன மாதிரி யான பார்வை செலுத்துவான்? அது குறித்து அவனது உணர்ச்சி என்ன?' என்பதற்கு அந்த 'இருட்டடிப்பு' ஒரு விளக்கமாகவே அமைந்தது.

உங்கள் மரணத்தைக் குறித்த செய்தியை உங்களது தோழர்கள் உங்கள் மனைவியிடத்தில் தெரிவிப்பதற்கு முன்னால் எவ்வளவு தயங்கி நின்று இருப்பார்கள்? எவ்வளவு பொய் சொல்லி இருப்பார்கள்? இதற்குப் பொருள் உங்களுக்கு நேர்ந்தது பற்றி, உங்கள் மனைவிக்குத் தெரிய வேண்டிய உரிமையை மறுப்பதோ அவர்களை ஏமாற்றுவதோ ஆகுமா?

நான் முதலில் உங்கள் மனைவியாரைப் போய்ச் சந்திக்க மிகவும் தயங்கினேன். வேண் டாம் என்றுகூட நினைத்தேன். ஆனால் என் தாயார், உங்கள் துணைவியைப் பார்த்துவிட்டு வர வேண்டும்; அது நமது மரபு என்றார்கள். என் மனைவிக்கு அது பேறு காலமாய் இருந்ததால், நானும் அம்மாவும் மட்டும் போய் வந்தோம். அன்று நான் ஒரு ரஜபுத்திர விதவையைக் கண்டேன்.

ஒரு விபத்தை விடவும், அதனால் விளைகிற இழப்புகளை விடவும் அதன்மீது செய்யப்படும் வியாபாரம் குரூரமானது. அதை ஒரு வேடிக்கைச் சம்பவமாக ஆர்வத்தோடு ரசிப்பது அநாகரிக மானது. மனிதாபிமானமற்ற ஒரு சமூகமே இதைப் 'பத்திரிகை சுதந்திரம்' என்று பிதற்றுகிறது. விபத் தில் இறந்தவர்களுக்கு நஷ்டஈடு தருகிறார்களாம். அதையும் விளம்பரப் படுத்துகிறார்கள். அவர் களுக்கு நீங்களோ, உங்கள் மனைவியாரோ அதற்காக நன்றி சொல்ல முடியுமா? நஷ்டஈடு ஒரு விருது ஆகுமா? எந்த நஷ்டத்தை எது ஈடு செய்யும்?

உங்கள் மனைவிக்கு ஜீவனாம்சம் தருகிறார் களாம். இதையெல்லாம் நான் விமர்சனம் செய்ய மாட்டேன். ஆனால், இதை ஒரு செய்தியாக ஆக்குவது யாருக்கு ஆறுதல் தரும் பொருட்டு? பன்னிரண்டு ஆண்டுகள் சிறையில் இருந் தீர்களே? அப்பொழுது இது மாதிரி ஏதேனும் செய்தி வெளியிட்டு உங்களுக்கு எவரேனும் உதவிகள் செய்ததற்கு விளம்பரம் தேடியதுண்டா? ஆறுதல் தருவதும், அன்பு காட்டுவதும், உதவிகள் செய்வதும் விளம்பரத்தின் பொருட்டுச் செய்யப் படுவது எந்த வர்க்கத்தின் பண்பு? இதெல்லாம் யாருக்கு நடக்கிறது? என்று நினைக்கையில் உங்களுடைய உண்மையான 'ஸ்பிரிட்' என்னுள் உங்களுடன் இப்படிப் பேசுகிறது :

'காம்ரேட் பாலன், உங்கள் பெயரால், எனது வாழ்க்கைச் சாசனத்தின் (உயில்) ஒரு பாராவை இப்பொழுது பகிரங்கப்படுத்துகிறேன். விதிவசமாய் உங்களுக்கு நேர்ந்த விதமாகவோ, அல்லது வேறு விதமாகவோ எனக்கு இப்படி ஒரு விபத்து நேரிட்டால், (கடவுள் தவிர்க்கட்டும்!) அதில் நான் மறைய நேர்ந்தால், என் பொருட்டு ஏற்பட்ட நஷ்டத்தை யாருக்கும் யாரும் ஈடுசெய்ய வேண்டாம். அது இறைவனால் ஈடு செய்யப் படட்டும். எனக்கு ஏதாவது விலையிருக்கிற தென்று இவர்கள் நம்புகிறார்கள் எனில், அதை நான் இருக்கும்போதே என்னிடம் கொடுக்கட்டும். என் சாவின் பொருட்டு எனக்குச் சன்மானம் தேவையில்லை. என்னைச் சேர்ந்த மனிதர்க்கும், எல்லா மனிதர்க்கும் உண்மையான தேவை

கார்ல் மார்க்ஸ்





காந்திஜி

பாரதியார்



எதுவோ அதை நான் நிறையச் சம்பாதித்து வைத்திருக்கிறேன்.

உங்களுக்கு அனுதாபம் காட்டிவிட்டு, அதையும் விளம்பரம் செய்துவிட்டு, உங்கள் தொகுதியில் இடைத்தேர்தல் எப்பொழுது? என்று அப்பொழுதே இவர்கள் யோசித்தார்கள். உங்கள் லட்சியங்களின் மீதும், உங்கள் வாழ்க்கை நெறிகளின், உங்கள் சித்தாந்தத்தின் மீதும் நம்பிக்கையோ, விசுவாசமோ இல்லாதவர்கள் உங்கள் பேரால் தங்கள் சௌகரியத்திற்கேற்பக் காட்டுகிற வெற்று அனுதாபங்கள் உங்களுக்கு எப்படி உகக்கும்? அல்லது எனக்குத்தான் எப்படி உகக்கும்?

நான் உங்கள் கட்சியில் அங்கத்தினனாக இருந்தால், கம்யூனிஸ்டுக் கட்சி இந்நிலையில் இந்தத் தொகுதியில் நடக்கும் இடைத்தேர்தலை உங்கள் பெயரால் பகிஷ்கரிக்க வேண்டும் என்று கோருவேன்! அதன் விளைவு எவ்வளவு மகத்தானதாக இருக்கும்!

**உ**ங்களோடு பேசுகிற எனது மானசீகமான மொழிகளைப் பகிரங்கப்படுத்திக் கொள்கிற இந்தக் கட்டுரைத் தொடரை சில காரணங்களை முன்னிட்டு நான் தற்காலிகமாக இப்போது நிறுத்திக் கொள்கிறேன்.

இந்தக் கட்டுரைத் தொடர் அப்படியொரு எல்லையை வந்து தொட்டு நிற்கிறது. எனது எழுத்துக்கள் உடனடியான தேர்தல், அரசியல் சாதக பாதகங்களுக்கு உட்படுவது – தவிர்க்க முடியாதெனினும் – நான் விரும்பாத ஒன்று.

தேர்தல்கள் குறித்து, அதில் கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கிடைக்கிற வெற்றி தோல்விகள் இந்தச் சமூகத்தில் எந்த விதமான முக்கியத்துவத்தையும் பெறமாட்டா என்பதே எனது அபிப்பிராயம். ஆனால் உங்களைப் போன்ற உத்தமமான பொது வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் அதிகாரத்துக்கும், பதவிக்கும் போவது எந்த ஒரு சமூகத்துக்கும் பயனுடையதாகும். அதனால் 71 இடைத்தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் வெற்றிக்காக நான் கூட்டங்களில் பேசிக் கொண்டிருந்த போதிலும், உங்கள் தொகுதியில் உங்களை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ் அபேட்சகரின் தேர்தல் அலுவலகத்தை மட்டும் திறந்துவைத்த நான், பாலனை எதிர்த்துப் பிரச்சாரம் செய்வதற்கு என்னை அழைக்க வேண்டாம் என்று காங்கிரஸ் அன்பர்களை வேண்டிக் கொண்டேன்.

உங்கள் மறைவிற்குப் பிறகு உங்கள் தொகுதியை அரசியல் கண்கொண்டு பார்க்காமல், அரசியல் நாகரிகக் கண்கொண்டு எல்லா அரசியல் கட்சிக்காரர்களும் ஒரு புதிய சமூக ஆரோக்கியத்தை மேற்கொள்ள வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். அந்த என் கருத்தை நான் பகிரங்கமாக வெளியிட்டேன். அந்தக் கருத்துப் பற்றி விவாதம் செய்பவர்களோடு எந்தவிதப் பிரதிபலிப்பும் காட்டாமல் நான் மௌனமாய் இருந்தேன். அந்த எனது மௌனம் மறைந்த தோழர்கள் பாலனுக்கும், மோகனுக்கும் செய்கிற அஞ்சலி மட்டும் அல்ல; நமது அரசியல் நாகரிகத்துக்கும் நான் செலுத்துகிற அஞ்சலியாகும் என்று நான் எழுதியிருந்தேன்.

திரு. மோகனைப் பொறுத்தவரை காங்கிரஸ் ஒன்றுபட்டுவிட்டதால், நான் விரும்பிய நாகரிகத்துக்குப் புறம்பானவர்களை எதிர்த்துக் காங்கிரஸ் அங்கு நிற்பதால் எனக்கு அதில் வருத்தமில்லை. உங்கள் தொகுதி விவகாரம் அப்படிப்பட்டதல்ல. காங்கிரசும் – கம்யூனிஸ்ட் கட்சியும் உங்கள் தொகுதியில் ஒன்றுபட்டிருந்தால்...

இந்தச் சூழ்நிலையில் இது விஷயமாக எனது மானசீகமான மொழிகளைப் பகிரங்கப் படுத்துவது அவற்றின் புனிதத்துக்குப் பங்கம் ஏற்படுத்தும் என்று அஞ்சுகிறேன். பாலன் என்கிற ஒரு ஸ்பிரிட்டுக்கு ஓர் அர்த்தம் உண்டு என்று நான் நம்புகிறேன். இது காரணம் பற்றியே இக்கட்டுரைத் தொடர் என்னளவில் இப்போது தற்காலிகமாய்த் தடைபடுகிறது.

– முற்றும் –

# மறுப்புக் கட்டுரை

*பொறியாளர் க.சி. அகமுடை நம்பி அவர்கள், 'சர்வோதயம் மலர்கிறது' ஜனவரி 2019 மாத இதழில், நவீன நீர்வழிச் சாலையால் இந்தியாவுக்கு நன்மை இல்லை என்று கட்டுரையை எழுதி உள்ளார்.*

*அந்தக் கட்டுரையில் பல தகவல்கள், உண்மைக்குப் புறம்பாக உள் ளன. அதற்கான விளக்கமே இந்த மடல். கட்டுரையில், நதிநீர் அனைத் தையும் தடுத்து நீர்வழிச்சாலை அமைக்கப்படுவதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.*

## பொறியாளர் ஏ.சி.காமராஜ்



ஆனால் கடலில் சென்று கலக்கும் 1800 BCM தண்ணீரில், 15% தண்ணீர் மட்டுமே நீர்வழிச் சாலையில் பயன்படுத்தப்படுகிறது. மீதி 85% தண்ணீர் எப்பொழுதும் போல் கடலுக்கே செல்கிறது.

**நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் :** சென்னை மாநகரில் ஏற் பட்ட வெள்ளம் போன்ற சம்பவங் களைக் கட்டுப்படுத்தும். கே.எல். ராவ் திட்டம், மாலைக் கால்வாய் திட்டம் முதலிய திட்டங்களில் உள்ள குறைபாடுகளை எல்லாம் சரி செய்து உருவாக்கப்பட்ட செம்மையான திட்டமே நவீன நீர்வழிச்சாலைத் திட்டமாகும். இந்தத் திட்டத்தினால் தீமைகள் குறைவு. நன்மைகளே அதிகம்.

நீர்வழிச்சாலை அமைக்கப்பட்டால் 40 லட்சம் ஏக்கர் வனப் பகுதி உருவாகும் என்பதே உண்மை. ஆனால் கட்டுரையில் 40 லட்சம் ஏக்கர் வனப் பகுதி அழிக்கப்படுவதாகத் தவறாகக் குறிப் பிடப்பட்டுள்ளது. சுற்றுச்சூழல் மேம்படும், உலக வெப்பமயமாதல் குறையும். மழை சீராகப் பெய்யும். பரம்பிக்குளம் ஆழியார் திட்டமே இதற்குச் சான்று.

கட்டுரையில், பல தட்பவெப்ப நிலைகளில் நீரியல் உயிரிகள் பாதிப்புப் பற்றியும் வினா எழுப்பப்பட்டது. சீனா, கனடா, அமெரிக்கா முதலிய நாடுகளில் பல்லாயிரம் கிலோ மீட்டர் தூரத்திற்கு நீர்வழிச் சாலைகள், எந்தப் பாதிப்பும் இல்லாமல் போடப்பட்டுள்ளன. சீனாவில் மட்டும் சென்ற 10 ஆண்டுகளில் சுமார் 1,20,000 கி.மீ. தூரம் நீர்வழிச்சாலைகள் அமைத்திருக்கிறார்கள். எந்தப் பாதிப்பும் இல்லை; பலன்களே அதிகம் மேலும் இதனால் எண் ணெய் இறக்குமதி வெகுவாகக் குறைந்துள்ளது.

நீர்வழிச்சாலைகள் மூலம் முறை சார் ஏரிகளுக்குத் தண்ணீர் அனுப்பப்படும். தற்போதுள்ள பாசனப் பகுதிகளுக்குத் தண்ணீர் கிடைப்பது போக, லட்சக்கணக்கான புதிய நிலங் களுக்குப் பாசன வசதி ஏற்படுத்தப்படும்.

பிரபல சூழலிய ஆர்வலர் வந்தனா சிவா கூறுபவை, நதிநீர் இணைப்புப் பற்றிய கருத்துகள். அந்தத் திட்டத்தை மாநிலங்கள் ஏற்றுக் கொள்ள வில்லை. ஒரே கட்சி ஆளும் மாநிலங்களான உத்திரப்பிரதேசம் மற்றும் மத்தியப்பிரதேசம், இந்தத் திட்டத்திற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் நீர்வழிச்சாலைத் திட்டம் நதிகள் பிணைப்புத் திட்டமாகும். நதிகள் இணைப்பு வேறு, நதிகள் பிணைப்பு வேறு. அனைத்து மாநிலங் களும் இந்தத் திட்டத்தை ஏற்றுக் கொள்கின்றன. ஏனெனில் அவர்களுக்கு ஏராளமான பலன்கள்.

மழையற்ற நாட்களில் நீர்வழிச்சாலையில் நீரோட்டம் இருக்காது என்ற ஐயம் எழுப்பப்பட்டது. மழையற்ற நாட்களிலும் நீர்வழிச்சாலையில் நீரோட்டம் இருக்கும்.

நதிநீர் இணைப்புகளுக்காக ஆறு லட்சம் மக்கள் வெளியேற்றப்படுவார்கள் எனக் கட்டு ரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. நதிநீர் இணைப் பையும் நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தையும் ஒன்றாகவே கருதுவதாகத் தெரிகிறது. இரண்டும் வேறு வேறு திட்டங்கள். நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தில் மக்கள் வெளியேற்றப்பட மாட்டார்கள்.

நதிநீர் மடைமாற்றத்தால் வற்றிப்போன ஏரல் கடலைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. நீர்வழிச் சாலைத் திட்டத்தால் ஆறுகளின் போக்கு மாறாது. வெள்ள நீரில் 15% மட்டுமே நீர்வழிச்சாலையில் பயன்படுத்தப்படுகிறது. ஆகவே, கடலுக்கும் ஏராளமான தண்ணீர் போகும். அது நமக்குத் தேவையில்லை.

கட்டுரையில், நதிநீர் இணைப்புத் திட்டம் செயல்படுத்த ஆகும் செலவாக ரூபாய் 30 லட்சம் கோடி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நீர்வழிச் சாலைத் திட்டத்திற்கு இதற்கும் குறைவாக ரூபாய் 15 லட்சம் கோடியே செலவாகும்.

இதன்மூலம் நாட்டின் அனைத்துப் பகுதி களுக்கும் தண்ணீர் கொண்டு செல்ல முடியும். இதன்மூலம் போக்குவரத்து, மின்சாரம், தொழில் வளர்ச்சி, வேலைவாய்ப்பு மற்றும் ஏராளமான பயன்கள் கிடைக்கும். ஆகையால் ஆண்டு ஒன்றிற்குத் திட்டத்தின் மூலம் ரூபாய் 4 லட்சம் கோடி வருமானம் கிடைக்கும். மேலும் எண்ணெய் இறக்குமதி ரூபாய் 4 லட்சம் கோடி மிச்சமாகும்.

நதிநீர் இணைப்புத் திட்டத்தில் குறைகள் இருந்ததால் அதற்கு மாற்றுத்திட்டம், இந்தியா முழுவதும் கோரப்பட்டது. ஏராளமான திட்டங்கள் வந்தன. அவற்றை ஐ.ஐ.டி. தொழில்நுட்பக் கல்லூரிப் பேராசிரியர் குழு ஆய்வு செய்ததில், நீர்வழிச்சாலைத் திட்டமே சிறந்த மாற்றாக அறிவிக்கப்பட்டது.

புவி வெப்பமயமாதல், காலநிலை மாற்றம் முதலிய பிரச்சனைகளுக்குத் தீர்வாக அமையப் பெற்றதுதான் நவீன நீர்வழிச்சாலைத் திட்டம். இது மிகப் பெரும் மழைநீர் சேமிப்புத் திட்டமாகும். பனிமலைகள் உருகுவதால் இந்தத் திட்டம் பாதிப் படையாது.

நதிநீர் இணைப்புத் திட்டத்திற்குப் பல மாநிலங்கள் மற்றும் மக்கள் எதிர்ப்புத் தெரிவிக் கிறார்கள். ஆனால் நீர்வழிச்சாலைத் திட்டத்தை மக்களோ, மாநிலங்களோ எதிர்க்கவில்லை. நீர்வழிச்சாலைத் திட்டத்தில் யாரும், யாரிடமும் கையேந்த வேண்டிய சூழல் வராது.

இந்தத் திட்டத்தில் எங்குமே பம்பிங் கிடை யாது. இதில் ஒரே மட்டத்தில் உள்ள ஆற்றின் கிளைகளைப் பிணைப்பதாகும். இதன்மூலம் 60000 மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். நீர்வழிச்சாலை முற்றிலும் கான்கிரீட் கட்டமைப்பில் உருவாக்கப்படுவது அல்ல. நீர் நிலத்தடியில் கசிந்து நிலத்தடி நீரைப் பெருக்கும். இதன் மூலம் 40000 மெகாவாட் மின்சாரம் பம்ப்பிங் செய்வது குறைக்கப்படும்.

நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தில் மின்சார உற்பத்தியில் மட்டுமே தனியார் ஈடுபடுவார்கள். தண்ணீர் முழுவதும் மாநில அரசின் கட்டுப்பாட்டிலேயே இருக்கும். எனவே தண்ணீர் தனியார்மயமாகிவிடும் என்ற பயம் தேவையற்றது.

நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தின் மூலம் நாட்டின் 15 கோடி ஏக்கர் நிலம் புதிதாக நீர்ப் பாசனம் பெறும். நம் நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெறும். இதன்மூலம் கிராமப்புற வளர்ச்சி மற்றும் பெண்கள் வளர்ச்சி மேம்படும். இந்தத் திட்டம் தமிழ் நாட்டுக்கு அதிகப் பலன் களைத் தரும். தமிழ்நாடு பாலைவனமாக மாறு வதை இந்தத் திட்டம் தடுக்கும். தற்கொலைக்குத் தள்ளப்படும் விவசாயிகளையும் தடுக்கும். ●

## வள்ளலாரின் மருத்துவப் புலமை!

*வள்ளலார் மருத்துவப் புலமை மிக்கவர். தமது அருட்பாவில் 464 மூலி கைகளின் குணங்களை விளக்கியுள் ளார். நாகபஸ்பம் உள்ளிட்ட ஏழு மருத் துவக் குறிப்புகளை அளித்துள்ளார். மனித உடல் அமைப்புப் பற்றிய செய்தி களைச் 'சத்திய பெரு விண்ணப்பத்தில்' குறிப்பிட்டுள்ளார்.*

*– நெ. இராமன், சென்னை.*

## விவாதம்

# முழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்போம்



**கா**ஷ்மீர் மாநிலத் தலைநகர் ஸ்ரீநகருக்கும், ஜம்முவுக்குமான நெடுஞ்சாலையில் மத்திய ரிசர்வ் போலீசார் பாதுகாப்புப் பணிகளுக்காக ஜம்முவிலிருந்து காஷ்மீருக்கு 2500 துணை ராணுவத்தினர் 78 வாகனங்களில் தளவாடங்களை ஏற்றிக்கொண்டு 15.2.2019 அன்று சென்று கொண்டிருந்தனர்.

அப்போது புல்வாமா என்ற இடத்தில் 20 வயதுள்ள காஷ்மீர் இளைஞன் **ஆதில் அகமது தாரா** என்பவன் 350 கிலோ ஆர்.டி.எக்ஸ். வெடி மருந்தை ஒரு காரில் ஏற்றிக்கொண்டு வரிசையாக வந்த ராணுவ வாகனம் ஒன்றின்மீது மோதினான்.

அதனால் அந்த வாகனத்திலிருந்த 40 ராணுவ வீரர்களின் சதைகள் பிய்த்துக் கொண்டு எலும்புகளை நொறுக்கி அவர்கள் அனைவரும் சிதறடிக்கப்பட்டனர். விநாடிப் பொழுதில் இக்கோர சம்பவம் நடந்துவிட்டது.

இந்தத் தாக்குதலை நமது ராணுவ நுண்ணறிவுப் பிரிவினர் (Intelligence squads) கூட யூகிக்க முடியவில்லை. துணை ராணுவத்தின் 40 வீரர்களும் பாரதத்தின் பல்வேறு மாநிலங்களில் நடந்த ராணுவத் தேர்வில் தகுதி பெற்றுப் பணிக்குச் சேர்ந்தவர்கள். நமது தமிழ்நாடு மாநிலத்தைச் சார்ந்த ராணுவ வீரர்கள் சுப்பிரமணியம், சிவச்சந்திரன் இருவரும் 30 வயதுகூட நிறையாத இளை ஞர்கள். திருமணமாகித் தங்கள் மனைவியரைப் பார்த்துவிட்டுத் தேசப் பாதுகாப்புக்குப் பணிக்குத் திரும்பியவர்கள்.

காஷ்மீரை மையமாக வைத்து இந்தப் போர் தேசப்பிரிவினைக்குப் பிறகு சென்ற 70 ஆண்டுகளாக நடந்து வருகிறது.

காஷ்மீர் சமஸ்தானம் ஹரிசிங் ராஜாவின் காலத்திலிருந்து இப்போரை இந்தியா சந்தித்து வருகிறது. ராஜா ஹரிசிங் பாகிஸ்தான் ராணுவத்தின் படையெடுப்புக்கு அஞ்சி 1947–இல் இந்திய ராணுவத்தின் உதவியைக் கேட்டார். அப்போதைய துணைப் பிரதமர் படேல், இந்தியாவுடன் மற்ற சமஸ்தானங்களைப் போலக் காஷ்மீரும் இணைவதாக முன்வந்தால்தான், ராணுவ உதவியை இந்தியா செய்ய முடியும் என்று கூறினார்.

அதன்படியே ஹரிசிங் இந்தியாவுடன் இணைந்




தார். இந்திய ராணுவம் அங்கு பிர வேசித்தது. பல சமஸ்தானங்களைச் சாதுர்யமாக இந்தியாவோடு இணைப் பதில் வெற்றிபெற்ற சர்தார் வல்லபபாய் படேலுக்கு இதில் குறுக்கீடு இல்லா மல் இருந்திருக்குமானால், மொத்தக் காஷ்மீரும் இந்தியா வோடு அப்போதே இணைந்து 70 ஆண்டுகள் ஆகியிருக்கும்.




அன்றைய பிரதமர் நேருவின் பூர்வீகம் காஷ் மீர். அதனால் இப்பிரச் சனையை ஐ.நா. சபைக்குக் கொண்டு சென்று வெளியுறவு அமைச்சர் கிருஷ்ணமேனன் மூல மாகப் பேச வைத்தார். இந்தியப் பிரச் சனையாக இருந்த காஷ்மீர், சர்வதேசப் பிரச்சனையாக உருவாகிவிட்டது. அதன் காரண மாக இப்பிரச்சனையில் பைசல்கள், பஞ்சாயத் துகள், சமரசங்கள் எல்லைக்கோடு வரையறைகள் என உருவாகின. அவற்றில் அத்துமீறல்களும் ஏற்பட்டு வந்தன.

ஜம்மு – காஷ்மீர் – லடாக் ஆகிய வடமேற்குப் பிரதேசங்களில் ஜம்முவில் ஹிந்துக்கள் அதிகம். லடாக்கில் பௌத்தர்கள் அதிகம். காஷ்மீரில்தான் பாகிஸ்தானியருமல்லாத, இந்தியருமல்லாத காஷ்மீரிகள் எனும் தனித் தேசிய இனம் இருந் தது. அவர்களின் மொழியே காஷ்மீரி மொழி.

இந்தியாவுடன் சேர்ந்த காஷ்மீர்ப் பகுதியில் காஷ்மீர் சட்டசபை உருவாக்கப்பட்டுத் தேர்தல் நடைபெறுகிறது. பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ள காஷ்மீரில் எவ்வித மான மக்கள் பிரதிநிதியின் நிறுவனமும் இல்லை.

பாகிஸ்தானின் ஆசை, தனது தேசத்தை ஒட்டியுள்ள காஷ்மீரைக் கையகப்படுத் திக் கொண்டால், இந்தியா வை அச்சுறுத்த முடியும். காஷ்மீரை இந்தியா வசம் விட்டுவிட்டால் இந்தியா பாகிஸ்தானை மிரட்டும் என்று நினைக்கிறது. பாகிஸ் தான் உருவான காலத்தி லிருந்தே அங்கே ராணுவத்தின் ஆதிக்கம்தான் அதிகம். இந்தியா வில் உள்ள குடிமக்களுக்கு நமது இந்திய ராணுவத்தைப் பற்றிய சிந்தனையே ஏற்படு வதில்லை.

காரணம், நமது மத்திய – மாநில அரசுகள் 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்தல் நடத்தி, மக்கள் பிரதிநிதிகளின் ஆட்சியை நிறுவுகிறது. பாகிஸ்தானில் ஜின்னாவுக்குப் பிறகு பாகிஸ்தான் அதிபர்களாக வந்தவர்கள் ராணுவத்தை அனு சரித்தே ஆட்சி நடத்த வேண்டியவர்களாக இருக் கிறார்கள்.

அங்கு அதிபர்களாக இருந்த பெனாசிர் புட்டோ, நவாஸ் ஷெரீப், இப்போதுள்ள இம்ரான் கான் அனைவரும் ராணுவத்தோடு சமரசம்



செய்து கொண்டவர்களாகத்தான் இருந்துள்ளனர். ராணுவத் தளபதிகளாக இருந்த இஸ் கந்தர் மிஸ்ரா, அயூப்கான், யாகியா கான், ஜியா உல் ஹக், பர்வேஷ் முஸாரப் ஆகியோர் ராணுவ ஆதிக் கத்தின் மூலம் ஜனாதிபதிகளாகி அரசியல் நடத்தி யவர்கள். அங்கே ஜனநாயக நெறிமுறைகள் எப் போதும் போற்றப்பட்டதில்லை.

பாகிஸ்தானின் 20 கோடி மக்கள் இந்தியா வின் 125 கோடி மக்களைப்போல அச்சமில்லாமல் வாழ்பவர்கள் அல்ல. பாகிஸ்தான் அது தோன்றிய போதே மதத்தை முன்னிறுத்தி இசுலாமிய தேசமாகவேதான் உருவானது. உருது மொழிக்கு முதன்மை தந்த தேசமாகத் தான் செயல்பட்டது.

அதன் விளைவுகளாகப் பாகிஸ் தானில் இருந்த சீக்கியர்கள், பண்டிட் டுகள் அச்சுறுத்தப்பட்டு விரட்டப் பட்டுவிட்டனர். உருது பேசும் முஸ் லிம்களுக்கு மட்டுமே அங்கு அங்கீ காரம் உண்டு. இந்தியாவில் சிறு பான்மை இசுலாம் மதத்தைச் சேர்ந்தவர்கள் ஜனாதிபதி களாக இருந்ததைப்போல, பாகிஸ்தானில் ஒரு சீக் கியரோ, பண்டிட்டோ இருந் ததில்லை.

பாகிஸ்தானிடம் உள்ள மற்றுமொரு குறை, மத பயங்கரவாதிகள் பாகிஸ் தான் சென்று பதுங்கி வாழ அரசு உதவுகிறது. பயங்கரவாதி பின்லேடன் பாகிஸ்தானில்தான் சுட்டுக் கொல்லப்பட்டான். பம்பாய் குண்டு வெடிப் பில் ஈடுபட்ட தாவூத் இப்ராஹிம் இன்னும் அங்கு தான் பதுங்கியுள்ளான்.



முகமதுஅலி ஜின்னா

பாகிஸ்தானுக்கு இந்தியாமீது ஒரு வக்கிரம் இருந்துகொண்டே வருகிறது. நேருஜிக்குப் பிறகு லால்பகதூர் சாஸ்திரி 1964–இல் இந்தியப் பிரதம ராகப் பொறுப்பேற்றார். அப்போதும் இதே காஷ் மீர்ப் பிரச்சனைக்காக தாஷ்கண்டில் பேச்சுவார்த் தைக்குப் போனபோது மரணமடைய நேர்ந்து விட்டது. ஆனால், அவர் உயிரோடு இருந்த போது இந்தியாவிடம் வாலாட்டிய பாகிஸ் தானின் வாலை ஒட்ட நறுக்கினார். ஓட ஓட விரட்டினார். இது 1965–இல் நடந்தது. பாகிஸ்தானுக்குக் கிடைத்த முதல் ராணுவத் தோல்வி இதுதான்.



ஜியா உல் ஹக்

நவாஸ் ஷெரீப்

இம்ரான்கான்

பெனாசிர் புட்டோ

பர்வேஷ் முஸாரப்

அதன் பிறகு திருமதி இந்திரா காந்தி பிரதமராக இருந்தபோது, பங் களாதேஷ் யுத்தம் 1971–இல் வெடித் தது. ராணுவ உடையணியாத முக்தி வாஹினி என்ற இந்தியப் படை பங்களாதேசத்திற்குள் சென்று, பாகிஸ்தான் படையை எதிர்த் துப் போரிட்டதால் பாக். ராணுவத்தினர் 98 ஆயிரம் பேர் சரணடைந்தனர். இது இரண்டாம் தோல்வி.

பாரதப் பிரதமராக வாஜ் பாய் இருந்தபோது, கார்கில் பிரதேசத்தில் ராணுவ அத் துமீறல்களைப் பாகிஸ்தான் செய்தது. வாஜ்பாய் அதனை அடக்கி ஒடுக்கி விரட்டினார். இது



மூன்றாவது தோல்வி.

பிரதமர் மோடி ஆட்சியில் உரி எனும் இடத்தில் பாகிஸ்தான் படை வாலாட்டியது. அப்போதும் அது அடிவாங்கித் தப்பித்தது. இது நான்காவது தோல்வி.

இவ்வாறு, இந்தியாவோடு மோதும் பாகிஸ்தான் படை தொடர்ந்து தோல்விகளையே தழுவி வந்தது. அந்த வன்மம் பாகிஸ்தான் ராணுவத்திற்கு உள்ளது.

இப்போது சென்ற பிப்ரவரியில் உலகமே அதிர்ச்சியடையும்படி 40 துணை ராணுவ வீரர்களின் வாகனத்தை வெடி வைத்துத் தகர்த்துள்ளது.

பிரதமர் ''தனது ரத்தம் கொதிக்கிறது'' என்று கூறியதுடன், ''எல்லையில் உள்ள ராணுவத்துக்கு எல்லாச் சுதந்திரத்தையும் மத்திய அரசு வழங்கியுள்ளது. என்ன நடவடிக்கை தேவையோ, அதனை அரசிடமிருந்து அனுமதி பெறாமலேயே எடுக்கலாம்'' என்று அறிவித்து விட்டார்.

இந்த பதிலடியானது, பாகிஸ்தானுக்கு இறுதி அடியாக இருக்க வேண்டும் என்பதுதான் இந்தியர்கள் எல்லோருடைய எதிர்பார்ப்பாக உள்ளது.

இந்தியாவின் எதிர்க்கட்சிகள் குறிப்பாகக் காங்கிரஸ், சமாஜ்வாதி, பகுஜன் சமாஜ், கம்யூனிஸ்ட் கட்சிகள், மாநிலக் கட்சிகள், மதச் சங்கங்கள் அனைத்துமே பிரதமருக்கு ஆதரவுக் கரம் நீட்டியுள்ளன. இந்த ஒற்றுமைதான் இந்திய ஒற்றுமை.

''ஆயிரம் உண்டிங்கு சாதி – இதில் அந்நியர் வந்து புகல் என்ன நீதி'' என்ற பாரதியின் பார்வையில், இந்தியாவில் உள்ள அத்தனை கட்சிகளும் ஒரே குரலில் மட்டுமல்ல, ஒரே உருவத்தில் எழுந்து நிற்கிற காட்சியைக் கண்டு பாகிஸ்தான் பயந்து நடுங்கத் தொடங்கி விட்டது.

எப்பேர்ப்பட்ட தாக்குதல் வரப்போகிறது என்பதைப்பற்றி நினைத்துத் தூக்கமில்லாமல் துடிக்கிறது.

பாகிஸ்தானில் உள்ள **ஜெய்ஷ்–இ–முகமது** என்கிற பயங்கரவாதிகள் அமைப்பு, காஷ்மீரை விடுதலை செய்து அதனைப் பாகிஸ்தானோடு இணைக்க வேண்டும் என்று சதி வேலைகளில் ஈடுபட்டு வருகிறது.

ஜெய்ஷ்–இ–முகமது அமைப்பின் தலைவன் மவுலானா மசூத் அசார் இந்த அமைப்பை 2000–இல் தொடங்கி நடத்தி வருகிறான்.

1994–இல் இவனைக் காஷ்மீர்ப் போலீசார் கைது செய்து காஷ்மீர் சிறையில் அடைத்து வைத்தனர். இவன் தப்பிச் செல்ல முடியாதவாறு பலத்த பாதுகாப்புச் செய்யப்பட்டிருந்தது.


தாக்குதலில் பலியான தமிழக ராணுவவீரர்கள் சுப்ரமணியன்

சிவசந்திரன்

இவனை விடுவிப்பதற்காக 1999–இல் இவனுடைய தம்பியே சிலரைச் சேர்த்துக்கொண்டு போய் இந்திய விமானத்தை டெல்லியிலிருந்து துப்பாக்கி முனையில் பயணிகளோடு கடத்தினான். ஆப்கானிஸ்தானத்தின் காந்தஹார் விமான நிலையத்தில் தரை இறக்கித் தனது அண்ணன் மவுலானா மசூத் அசாரை விடுதலை செய்யச் சொன்னான். தவறினால், விமானத்தில் உள்ள 173 பயணிகளையும் கொன்று விடுவதாகக் கூறினான்.

அப்போதைய வெளியுறவு அமைச்

## நடிகர் கமல்ஹாசனும் காஷ்மீர்ப் பிரச்சனையும்

மக்கள் நீதி மய்யத்தின் நிறுவனர் நடிகர் கமல்ஹாசன் அவர்கள் காஷ்மீர்ப் பிரச்சனைக்கு ஒரு தீர்வு சொல்லியிருக்கிறார்.

காஷ்மீர் மக்கள் பாகிஸ்தானுடனோ, இந்தியாவுடனோ அல்லது தனியாகவோ இருக்கலாம் என ஜனநாயக நெறிப்படி தீர்மானிக்கலாம். அதை எப்படித் தெரிந்து கொள்வது?



Plebiscite எனப்படும் ஒரு பொது வாக்கெடுப்பை நடத்தி, மக்களை இந்த மூன்று வழிகளில் எதை ஆதரிக்கிறீர்கள் என்று தெரிந்து கொள்ள நடவடிக்கை எடுக்கலாம். இது பொதுத் தேர்தலில் வாக்களிப்பது போல அல்ல. ஆனாலும் இது பொது வாக்கெடுப்பு. காஷ்மீர்ப் பிரச்சனைக்கு மட்டுமான வாக்கெடுப்பு.

உலகம் முழுவதும் பல நாடுகளில் இந்தப் பொது வாக்கெடுப்பு முறை நடத்தப் படுகிறது. ஐரோப்பிய யூனியனில், இங்கிலாந்து தேசம் இருக்கலாமா, வேண்டாமா என்று சமீபத்தில் பொது வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. அதேபோல, ஓரினச் சேர்க்கையை ஒத்துக் கொள்ளலாமா, வேண்டாமா என்று பொது வாக்கெடுப்பு நடத்தப்பட்டது.

இப்படி அயோத்தியில் ராமர் கோவில் கட்டலாமா, வேண்டாமா என்றுகூடப் பொது வாக்கெடுப்பு நடத்த லாம். பொது வாக்கெடுப்பு நடத்தப்பட்டால், அதை வைத்து அரசியல் செய்யும் கட்சிகளுக்கு வேலை இருக்காது.

இதையெல்லாம் மனதில் கொண்டோ என்னவோ பிப்ரவரி 18-ஆம் தேதி மக்கள் நீதி மய்யத்தின் நிறுவனர் நடிகர் கமல்ஹாசன் அவர்கள், காஷ்மீர்ப் பிரச்சனைக்கு ஏன் பொது வாக்கெடுப்பு நடத்தப்படாமல் இருக்கிறது? என்ற கேள்வியை எழுப்பியுள்ளார்.

சர் ஜஸ்வந்த் சிங் தளபதி அஜித் தோவல் முதலிய அதிகாரிகளுடன் சென்று மவுலானா மசூரையும் மேலும் இரு பயங்கரவாதிகளையும் தங்களின் விமானத்தில் ஏற்றிக்கொண்டு காந்தஹார் வந்து இறக்கிவிட்டனர்.

அதன்பின்னர் நமது 173 பயணிகளும் மீட்கப் பட்டனர். விடுபட்ட மவுலானா மசூத் அசார் பாகிஸ்தானில் செயல்பட்டு வருகிறான். அவன் தான் 20 வயது இளைஞனை மூளைச் சலவை செய்து நமது 40 வீரர்களைப் பலியாக்கியுள்ளான்.

இப்போது இதற்கான பதிலடி காலதாமதமில் லாமல் விரைவில் நிகழ வேண்டும். அதுமட்டு மல்ல, பதிலடி பலத்த அடியாகவும் இருக்க வேண்டும்.

பாகிஸ்தான் ஆக்கிரமித்து வைத்துள்ள காஷ் மீர்ப் பகுதியை ராணுவ பலத்தின் மூலமாக மீட் டெடுக்க வேண்டும்.

அதற்கான விலையைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. முழுக் காஷ்மீரும் இந்தியாவோடு இணைக்கப்பட வேண்டும். பாகிஸ்தானுக்கு உதவு வதற்காகச் சீனா வருவதாக இருந்தாலும், அதனையும் எதிர்கொள்ள உலக நாடுகளை ஒன்று திரட்ட வேண்டும்.

நேருஜி காலத்தில் ஏற்பட்ட சீன ஆக்கிரமிப்பு நமக்குத் தோல்வி. அதன் பிறகு லால்பகதூர் சாஸ்திரி காலத்தில் ராணுவ வெற்றி பெற்றோம். இந்திராஜி காலத்திலும் ராணுவ வெற்றி பெற் றோம். வாஜ்பாய் ஆட்சியிலும் ராணுவ வெற்றி பெற்றோம். பிரதமர் மோடி ஆட்சியில் பாகிஸ்தான் ஆக்கிரமிப்பிலிருந்து காஷ்மீர் விடுதலை நமக்குக் கிடைத்தாக வேண்டும்.

சர்தார் வல்லபபாய் படேல் செய்திருக்க வேண்டிய பணியாக, அவருக்கான உயரமான சிலையை நிறுவிய திரு. மோடியின் நடவடிக்கை அமைய வேண்டும். அதற்கு எல்லா அரசியல் கட்சிகளும் ஆதரவு தர வேண்டும்.

தேசம் வெற்றி பெற வேண்டும். இது மோடிக் கான வெற்றியல்ல. பயங்கர தேசமான பாகிஸ் தானுக்கான படுதோல்வியாக இது அமைய வேண்டும் என்பது பற்றி வாசகர்களாகிய நீங்கள் என்ன எண்ணுகிறீர்களோ, அதனை மார்ச் 12-க்குள் எழுதி அனுப்புங்கள்.

– பி.சி.

# ☫ சக்தி பைனான்ஸ்

நம்பிக்கையின் நிகரற்ற கட்டமைப்பு

H.O. : கோயமுத்தூர் - 641 018. போன் : 0422-2231471-4

## புதிய மற்றும் பழைய "வாகனங்களுக்கு கடனுதவி திட்டம்"





### உங்கள் வளர்ச்சியே எங்கள் மகிழ்ச்சி





20* வருடங்கள் வரையிலான சிறிய மற்றும் கனரக லாரிகள் JCB, Excavator வாகனங்களுக்கும் கடனுதவி அளிக்கப்படும்.

**எங்கள் சேவைகளைப் பற்றி சில தகவல்கள்**

- ✓ புதிய மற்றும் பழைய வாகனங்களுக்கு கடனுதவி வழங்குதல்
- ✓ மிகப்பழைய மாடல் சரக்கு வாகனங்களுக்கு நிதியுதவி
- ✓ வாகன சீரமைப்பு Tyre, FC, உதிரி பாகங்கள் மற்றும் செலவினங்களுக்கும் கடன் உதவி
- ✓ தேர்டு பார்ட்டி செட்டில்மெண்ட் (Third Party Settlement)
- ✓ பழைய வாகனங்களுக்கும் இன்சூரன்ஸ் சேவையுடன் கூடிய நிதியுதவி
- ✓ வாடிக்கையாளர்களின் தேவைகளை அறிந்து 24 மணி நேர துரித சேவை
- ✓ துரித சேவைக்கு பிரதான இடங்களில் வாடிக்கையாளர் சேவை மையங்கள்
- ✓ எளிய விதிமுறைகள், நம்பிக்கை, நாணயம் மற்றும் கனிவான சேவை.

# புத்தக மதிப்பீடு










## எனது சிந்தனையில் அருட்செல்வர்

வெளியீடு : நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரி, உடுமலை ரோடு, பொள்ளாச்சி – 642 003.

**தொ**ழில், கல்வி, ஆன்மிகம், அரசியல் எனப் பன்முகத் திறன் கொண்டவராகச் சிறந்து விளங்கியவர் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் ஐயா அவர்கள். அவர்தம் தந்தையின் நினைவாக, அவர்தம் பெயரில் பொள்ளாச்சியில் 'நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரியை(1957)த் தொடங்கினார். அக்கல்லூரியின் வைர விழாவினை முன்னிட்டுச் சிறப்பு மலர் ஒன்று வெளியிட்டுச் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

'எனது சிந்தனையில் அருட்செல்வர்' எனும் இச்சிறப்பு மலரில் மடாதிபதிகள், நீதியரசர்கள், துணைவேந்தர்கள், தொழிலதிபர்கள், கல்வியாளர்கள், மருத்துவர்கள், எழுத்தாளர்கள், கலைஞர்கள், அரசியலாளர்கள் உட்படப் பல்வேறு முக்கியப் பிரமுகர்கள் அருட்செல்வரைப் பற்றியும், அவருடனான தங்கள் அனுபவங்கள் பற்றியும் கட்டுரைகள் மூலம் நினைவு கூர்ந்துள்ளனர். இன்றைய இளைய சமுதாயத்திற்கு நல்வழி காட்டும் கையேடாக இம்மலர் உள்ளதென்றால் அது மிகையல்ல.

## பத்மஸ்ரீ முனைவர் ஔவை நடராசனின் பன்முகம்

ஆசிரியர் : பேரா. இரா. மோகன் வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2–ஆம் முதன்மைச்சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம், தரமணி, சென்னை – 113. பக் : 156, விலை ரூ. 100/–, தொலைபேசி : 044 – 22542992.

**நா**வேந்தராய் நன்கு அறியப்பட்ட தமிழ்ப் புலமைசார் பத்மஸ்ரீ ஔவை நடராசன் அவர்களின் தமிழ் ஆளுமைகள் பற்றி – இன்றளவும் 140–க்கும் மேற்பட்ட நூல்களை எழுதிக் குவித்து வரும் பேராசிரியப் பெருந்தகை முனைவர் இரா. மோகன் அவர்களின் பார்வை சற்று வித்தியாசப்பட்ட கருத்தோட்டங்களில் அமைந்துள்ளதை இந்நூலின் வாயிலாக அறிய முடிகிறது. ஔவை நடராசனாரின் நூல்களிலிருந்து உயிர்ப்பான பகுதிகளை இந்நூலில் ஒன்பது கட்டுரைகளாகத் தொகுத்துத் தந்துள்ளார் நூலாசிரியர்.

சங்க இலக்கிய ஆய்வுகள், கம்பர் கவி ஆய்வுகள், வள்ளலாரின் கருத்துமிக்க வரிகளுக்கான விளக்கங்கள், பாரதியாரிடம் காணப்பட்ட பரந்துபட்ட சிந்தனைகள், அண்ணாவின் பன்முகப் பார்வை, திருவெம்பாவைக்கான விளக்கங்கள் என ஔவை நடராசனாரின் பன்முகப் பரிமாணங்களைத் தமிழ்கூறு நல்லுலகிற்கு எழுத்தோவியமாக்கித் தந்திருக்கிறார் நூலாசிரியர் இரா. மோகன்.

## நீதிக்கதைகள் 34

ஆசிரியர் : சுவாமி கமலாத்மானந்தர் வெளியீடு : ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், பெரிய நாயக்கன்பாளையம், கோவை – 641020, பக். : 256, விலை ரூ. 80/–, தொலைபேசி : 0422 – 2692676.

**ந**ல்ல நல்ல கருத்துக்களை மக்கள் மனங்களில் விதைப்பதற்கு உபாயகரமாக இருப்பவை கதைகள். அதிலும் குறிப்பாக நீதிக்கதைகள். அக்கதைகள் மூலம் நல்ல கருத்துக்களைச்சொல்லி, அதன் மூலம் மக்கள் மனங்களைப் பண்படச் செய்து வந்துள்ளனர் நம் ஆன்றோர்களும், சான்றோர்களும். அவ்வகையில், இந்நூலில் 34 நீதிக் கதைகளை வழங்கியிருக்கிறார் சுவாமி கமலாத்மானந்தர். வாழ்க்கை சார்ந்த கதைகளோடு, தெய்வ பக்திக் கதைகளும் இதில் இடம் பெற்றுள்ளன. அனைத்தும் நம் உள்ளத்தையும், வாழ்வையும் வளப்படுத்துவன. சிரிப்புக் கதைகளாக இல்லாமல், சிந்திக்க வைக்கும் கதைகளாக இவை உள்ளன. ஒவ்வொரு கதைக்கும் பொருத்தமான படம். படமே கதை சொல்லும். வரைந்த ஓவியரைப் பாராட்ட வேண்டும். கையடக்கமான அளவில் உள்ள இந்நூலைப் படிக்கவும், பரிசளிக்கவும் செய்யலாம்.

**– எம்.எஸ்.**





# தமிழ் அழகு

**யா**னையைவிட எறும்பு
எத்தனை சிறியது
எறும்பையும்விடச் சிறியதா
சிற்றெறும்பு?

காக்கையைவிடக் குருவி
எத்தனை சிறியது
குருவியையும்விடச் சிறியதா
சிட்டுக்குருவி?

குவளை நீரைவிட நீர்த் துளி
எத்தனை சிறியது
துளியையும்விடச் சிறியதா
சிறுதுளி?

தூணைவிடத் துரும்பு
எத்தனை சிறியது
துரும்பையும்விடச் சிறியதா
சிறுதுரும்பு?

வாழைஇலையைவிடக் கீரை
எத்தனை சிறியது
கீரையையும்விடச் சிறியதா
சிறுகீரை?





**பாஞ்சசன்யா**



# உயர்சாதியினருக்கு இடஒதுக்கீடு

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

உயர் சாதியினருக்குப் பத்து சதவிகிதம் இட ஒதுக்கீடு வழங்கிட மோடி தலைமையிலான பா.ஜ. கட்சி முடிவு செய்து அறிவித்திருப்பது, ஒரு நாடகமாகவே தெரிகிறது. ஆட்சியின் இறுதிக்காலம் நெருங்கி வரும் நிலையில் உயர்சாதியினர் மீது திடீரென்று அக்கறை செலுத்திப் பத்து சதவிகித இட ஒதுக்கீடு செய்து இருப்பது தேர்தல் வெற்றிக்காகவே என்பதுதான். மேலும் இது தேவையே இல்லாத நிலையில், தேவைதான் என்று கூறியிருப்பது துரதிருஷ்டவசமானது.

– **ப. மூர்த்தி,** பெங்களூரு.

உயர் சாதியினருக்குப் பத்து சதவிகித இட ஒதுக்கீடு தரப்பட்டுள்ளது சமூக நீதிக்கானதுதான். பன்னெடுங்காலமாக ஆட்சி செய்தவர்களில் பெரும்பாலானோர் உயர் சாதி வகுப்பினரே. அவர்களுக்கு இதைச் செய்ய வேண்டும் என்று தோன்றவில்லை. மக்களவையிலும் மாநிலங்களவையிலும் இரண்டு பங்கு பெரும்பான்மையான தலித்துக்கள் இருந்திருந்தால் இந்த மசோதா ஒருக்காலும் நிறைவேறியிருக்காது. பிற மதத்தினரும் பயன் பெறும் இந்த இட ஒதுக்கீடு உயர் சாதியில் ஏழ்மை நிறைந்த குடும்பத்தினருக்கு ஒரு வரப்பிசாதமே. மோடி இதுவரை கொண்டு வந்த நலத்திட்டங்களிலேயே ஹைலைட் இந்த இட ஒதுக்கீடுதான்!

– **பே. சண்முகம்,** செங்கோட்டை.

இட ஒதுக்கீடே கூடாது என டெல்லியில் செயற்கையான தீக்குளிப்பை நடத்தி எதிர்ப்புத் தெரிவித்தவர்கள் பா.ஜ.க., ஆர்.எஸ்.எஸ்.–காரர்கள். அவர்கள் இப்போது பொருளாதார அடிப்படையில் முற்பட்டோருக்கு இட ஒதுக்கீடு என்பது இந்திய அரசியல் சட்டத்திற்கே விரோதமாகும். இட ஒதுக்கீடு ஏன் கொடுத்தார்கள் என்ற அடிப்படையே இல்லாமல், புரியாமல் இவர்கள் 10 சதவிகித ஒடுக்கீட்டைக் கொண்டு வந்துள்ளனர். வறுமைக்கோடு என்பதே 1 லட்சத்திற்கும் கீழ்தான். ஆனால், 8 லட்சம் வரை இட ஒதுக்கீடு சலுகையாம். 5 ஏக்கர் வைத்து இருப்பவரும் ஏழையாம். கேலிக்கூத்தான இந்த இட ஒதுக்கீட்டைத் தூக்கி எறிய வேண்டியது உச்சநீதிமன்றத்தின் கடமையாகும்.

– **பா. சீமான்ஜி பாரதி,**
வெள்ளானைக்கோட்டை.

பத்து சதவிகித இட ஒதுக்கீடு ஒரு மிகப்பெரிய மாநிலத்தின் முன்னேறிய வகுப்பினர் வாக்குகளைக் கவர ஏற்படுத்தப்பட்ட அவசரக் கோலம். இது உச்சநீதிமன்றத்தால் அகற்றப்படுவது உறுதி. வோட்டுக்களும் கிடைக்காது. ஏமாறப்போவது மத்திய அரசே.

– **அ. சம்பத்,** சின்ன சேலம்.

இந்தியாவைப் பொறுத்த வரையில் இட ஒதுக்கீட்டுப் பிரச்சனை என்றைக்கோ அரசியலாக்கப்பட்டு விட்டது. சாதி பலத்தாலும், கட்சி பலத்தாலும் தீர்மானிக்கப்பட்டு அரசியல் பார்வையோடுதான் பார்க்கப்படுகிறதே தவிர, சமூகக் கண்ணோட்டத்தோடு அணுகப்படவில்லை. தாழ்த்தப்பட்ட – பிற்படுத்தப்பட்ட – ஒடுக்கப்பட்ட சாதிகளுக்கு எந்த அளவிற்கு இட ஒதுக்கீடு அவசியமோ, அதேபோல முற்பட்ட சாதியினரிடையே உள்ள ஏழைகளுக்கும் இது அவசியமானதே என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்க முடியாது. ஆனால், இச்சட்டத்தை

இப்போது கொண்டு வந்திருப்பதுதான் அரசின் நோக்கத்தைச் சந்தேகிக்க வைக்கிறது. பொதுத்தேர்தல் நடைபெறக் குறுகிய கால இடைவெளியே இருக்கும் போது இதை நிறைவேற்றியிருப்பது பெரிதும் யோசிக்க வைக்கிறது.

– **வெ. பாண்டுரங்கன்,** திருநின்றவூர்.

**உ**யர் சாதியினருக்கு இடஒதுக்கீடு ஓர் உதாரணத்துடன் எழுதுகிறேன். உயர் சாதிகளின் எண்ணிக்கை 79. எனது சாதி நாட்டுக்கோட்டை செட்டியார் 743 என்ற எண் பெறுகிறது. அது எப்படி என்கிறீர்களா? 79 சாதிகளும் 1 முதல் 999 எண் வரை அடக்கம். முற்படுத்தப்பட்ட எங்கள் சாதி மக்கள் எண்ணிக்கை 1,75,000. இதில் 30% அன்றாடம் காய்ச்சிகள். 40 % நடுத்தட்டு. மற்றவர்கள் வசதி மிக்கவர்கள். ஏன் சொல்கிறேன் என்றால், வசதியில் பின்தங்கியவர்களுக்கு 10% இட ஒதுக்கீடு தந்தது பாராட்டுக்கு உரியது என்பதற்காகத்தான்.

– **சுப்ரமண்ய வெங்கடாசலம்,**
திருப்பத்தூர்.

**சு**தந்திரத்திற்கு முன்பிருந்த நிலையைக் கருத்தில் கொண்டே சுதந்திர இந்தியாவில் பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீடு கொண்டுவரப்பட்டது. இந்தச் சலுகையைப் பெற 220 சாதிகள் இதில் இணைந்துவிட்டன. இந்த இட ஒதுக்கீட்டை 1960 – 65 களிலேயே ரத்து செய்திருக்க வேண்டும். இப்போது பிற்படுத்தப்பட்டோருக்கு 50 விழுக்காடு, தாழ்த்தப்பட்டோருக்கு 27 விழுக்காடு என உள்ள நிலையில், முன்னேறிய சாதியினருக்கு 10 விழுக்காடு எனச் சட்டம் வந்துள்ளது. இப்போதுள்ள சமதர்ம நிலையில் இந்த இட ஒதுக்கீடே தேவையற்றது. ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்து இந்த இட ஒதுக்கீட்டு முறையைத் துடைத்தெறிய வேண்டும்.

– **இரா. கல்யாணசுந்தரம்,** மதுரை.

**உ**யர் சாதியினருக்கு இட ஒதுக்கீடு என்பது, அப்பட்டமான சமூக அநீதி என்ற போதிலும், உயர் சாதிகளிலும் வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ளவர்கள் கணிசமான அளவு இருப்பதால், இன்றைய காலகட்டத்திற்கு இந்த இட ஒதுக்கீடு தவிர்க்க இயலாது! என்ன, தடாலடியாகப் 10 சதவீதம் என்பதை 3 சதவீதத்தில் தொடங்கியிருக்கலாம்.

– **இரா. வளையாபதி,**
தோட்டக்குறிச்சி.

**சா**தியில்லை, மதம் இல்லை என்று ஒரு புறம் பேசிவிட்டு, மறுபுறத்தில் இட ஒதுக்கீடு, சாதி அடிப்படையிலேயே வேண்டும் எனக் குரல் கொடுக்கும் அரசியல்வாதிகளை நாம் அறிவோம். தாழ்த்தப்பட்டோர் மற்றும் மிகவும் பிற்படுத்தப்பட்டோர் ஆகியோரிடம் சொத்து சுகம் உள்ளோர்கூட, சாதியின் பெயரால் அரசிடம் கடந்த 70 ஆண்டுகளாகச் சலுகைகள் பல பெற்று அரசாங்கப் பொருளாதாரத்தைப் பாதிப்புக்குள்ளாக்குவது எவ்விதத்தில் நியாயம்? வேதம் ஓதுகின்ற அந்தணர்களில் வறுமையில் வாடுபவர்கள் எத்தனை பேர்? சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்பதை மனுநீதியும், இறைநீதியும் அழுத்தமாகக் கூறி இருப்பதனை மறைத்துவிட்டுப் பேசுவது மனச்சாட்சியை உறங்க வைக்கும் செயலே.

– **த. நாகராஜன்,** சிவகாசி.

**பி**ற்படுத்தப்பட்ட சமூகத்தினருக்கு 50 % சலுகை அளிக்கப்பட்டதை வரவேற்கிறேன். ஆனால், முற்படுத்தப்பட்ட சமூகத்திலும் மிகவும் ஏழைகள் உள்ளார்கள். அவர்களில் கூலி வேலை செய்து, படிக்க வைக்க முடியாமல் குழந்தைகளை வேலைக்கு அனுப்புகிறவர்களும் இருக்கிறார்கள். சாப்பாட்டிற்கு வழி இல்லாதவர்களும் இருக்கிறார்கள். புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். சொன்னபடி, வருமான அடிப்படையில் சலுகைகள் செய்ய வேண்டும் என்பதை வரவேற்கிறேன்.

– **தி. ஈசுவர்மூர்த்தி,** ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**இ**ட ஒதுக்கீடு உருவாக்கப்பட்டதன் காரணமே, சாதி ரீதியிலான ஏற்றத் தாழ்வுகளை ஒழிப்பதே. வருமான ஏற்றத் தாழ்வினை ஒழிக்க அல்ல. நாடு சுதந்திரம் அடைந்தபோது நிலவிய சாதி ஏற்றத்தாழ்வினைச் சரி செய்திட இட ஒதுக்கீடு தேவைப்பட்டது. இட ஒதுக்கீடு மூலம் தாழ்த்தப்பட்ட சாதியினர்

எந்த அளவிற்கு உயர்ந்துள்ளார்கள் என்பதை ஆய்வு செய்து அதனைப் படிப் படியாகக் குறைக்க வேண்டும். அதை விட்டுவிட்டு, உயர் சாதியினருக்கு இட ஒதுக்கீடு என்பது ஏற்கத்தக்கதல்ல. ஆட்சியாளர்கள் இட ஒதுக்கீட்டை வைத்து அரசியல் செய்கிறார்களோ என்ற ஐயம் எழுகிறது.

**– ரவிச்சந்திரன்,** ஆவுடையாள்புரம்.

**பொ**ருளாதாரத்தில் பின்தங்கிய உயர் வகுப்பினருக்கும் இட ஒதுக்கீடு அளிப்பது வரவேற்கத்தக்கது. உயர் இனத்தில் பிறந்தவர் என்ற ஒரு காரணத்தால் கல்வி, வேலைவாய்ப்பு, அரசு சலுகைகளை அளிக்காமல் இருப்பது எப்படிச் சமூக நீதியாகும்? சுதந்திர இந்தியாவுக்கு முன்பு தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்கள் அனைவரும் கூலி வேலை செய்து, பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கி, எந்த அடிப்படை வசதியும் இல்லாமல் கஷ்டப்பட்டார்கள். அவர்களையும் கைதூக்கிவிட வேண்டும் என்று, நம் தலைவர்கள் இட ஒதுக்கீடு அளித்து அவர்கள் உயர்ந்த நிலையில் இருக்கிறார்கள். ஏழ்மை நிலையிலுள்ள உயர்சாதி மக்களையும் வாழ வைக்க அரசு எடுத்த இட ஒதுக்கீடு பாராட்டத்தக்கது.

**– ப. அடைக்கலம்,** ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**இ**ந்தியாவில் முன்பு சாதி, இன, பிற்பட்ட பாமரர் முன்னேற்றத்திற்கு என இட ஒதுக்கீட்டு முறை கொணரப் பட்டது. இத்தருணம் உயர் சாதியைச் சார்ந்தவராக இருந்தாலும், பொருளாதார ரீதியில் பாமரராக இருப்போருக்கும் இட ஒதுக்கீடு அவசியம் என்று அறியப்பட்டுள்ளது. காலம் கடந்து வந்த போதிலும், அது வரவேற்புக்குரியதே, அவசியமானதே.

**– எஸ்.ஜி. இசட்கான்,** திருப்பூர்.

**க**டந்த 70 ஆண்டுகளாகப் பிற்படுத்தப்பட்டவர்களுக்கு இட ஒதுக்கீடு கொடுத்துள்ள காரணத்தால், உயர் சாதியினர் முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்து வந்திருக்கிறது. ஆகவே, ஏழை உயர் சாதியினருக்கு மோடி அரசு வழங்கியுள்ள இட ஒதுக்கீடு வரவேற்கப்பட வேண்டியதே.

**– மு. கணபதி,** பெருந்துறை.

**உ**யர் சாதியினருக்கு இட ஒதுக்கீடு எனத் தலைப்பு அளித்துள்ளார்கள். காந்தி சொன்னார், தாழ்த்தப்பட்டவர்களைக் கடவுளின் குழந்தைகள் என்று. 1947–இல் சுதந்திரமடைந்தபோது, நேரு அமைச்சரவையில் அம்பேத்கார் சட்ட அமைச்சர் ஆவதற்குச் சிபாரிசு செய்தார். இருப்பதைக் கொடுப்போம் இல்லாதவர்களுக்கு.

**– தங்கவேல் பழனிச்சாமி.**

**ம**ருத்துவம், பொறியியல் முதலிய உயர் கல்வியிலும், வேலை வாய்ப்புக்களிலும் இட ஒதுக்கீடு செய்யப்பட்டது நியாயமானதே. பின்தங்கியிருந்த சமூகத்தில் பல ஆண்டுக்காலம் சலுகைகளைப் பெற்று இன்று முன்னேறிவிட்ட ஒரு பகுதியினரும், இன்னும் முன்னேற்றம் காண வேண்டிய பகுதியினரும் இருக்கக் கூடும். அதனைக் கண்டறிந்து இன்னமும் முன்னேற்றம் காண வேண்டியவர்களுக்கு மட்டுமே அரசின் சலுகைகள் தரப்பட வேண்டும்.

**– மேலை தமிழ்க்குமரன்,**
முத்தரசநல்லூர்.

**10** சதவீத இட ஒதுக்கீடு முன்னேறிய சாதியினருக்குத் தரப்பட்டுள்ளது, சமூக நீதிக்கானது அல்ல என்பது நிதர்சனம். வரவிருக்கும் நாடாளுமன்றத் தேர்தலையொட்டித்தான் உயர்சாதி வகுப்பினருக்குச் சலுகை அளித்து, வாக்குச் சேகரிக்கும் முகத்தான் இடஒதுக்கீடு வழங்கப்பட்டுள்ளது என்பதை மறுப்பதற்கில்லை. உயர்சாதி ஏழைகளுக்குரிய வருமான உச்சவரம்பு ரூ. 8 லட்சம் எனில், வருமான வரிக்கான உச்சவரம்பையும் ரூ. 5 லட்சத்திலிருந்து ரூ. 8 லட்சமாக உயர்த்தி இருக்கலாமே. ஏன் இந்த முரண்பாடு?

**– உ.மு.ந. ராசன் கலாமணி,**
கோபிசெட்டிபாளையம்.

**உ**யர் சாதியினருக்கு இட ஒதுக்கீடு என்ற விவாதம் வரும்பொழுது, அதில் பலன் அடைந்தவர்களைவிட, அதன் பலனை இழந்தவர்கள்தான் அதிகம். 10 சதவீத இடஒதுக்கீடு முன்னேறிய சாதியினருக்குத் தரப்பட்டுள்ளது மிக மிகக் குறைவானதே. இதனால், தகுதி உடையவர்களுக்கு வாய்ப்பு மறுக்கப்படுகிறது.

இதை மனதில் கொண்டு உயர் சாதியினருக்கு மேலும் சில சதவிகிதம் கொடுப்பது அவர்களை ஊக்குவித்தது போல இருக்கும். இதைச் சமூக அநீதி என்று சொல்வதைவிட, உயர் சாதியினர் பின்னுக்குத் தள்ளப்படுகிறார்கள் என்ற கண்ணோட்டத்தில் பார்த்து மாற்றங்கள் செய்தால் நிறைவாக இருக்கும்.

– **உஷாமுத்துராமன்,** மதுரை.

**வ**ருடம் எட்டு லட்சம் ரூபாய் வருமானம் இல்லாதவர்கள் ஏழைகள் என்று மோடி சொல்கிறார். அதாவது, நாளுக்கு ரூ. 2200 வருமானம் இல்லாதவர்கள் ஏழைகள். அப்படிப் பார்த்தால், இந்தியாவின் 98% மக்கள் ஏழைகள்தான். விவசாயிகளுக்கு வருடம் 6 ஆயிரம் ரூபாய், அதாவது நாளுக்கு ரூ. 16.50 கொடுத்து அவர்களின் துயரைப் போக்கப் போகிறாராம். இதுதான் மோடியின் பொருளாதாரம்.

பல நூறு ஆண்டுகளாகக் கல்வி அறிவு மறுக்கப்பட்ட சமுதாயம், கடந்த 70 ஆண்டுகளாகக் கொஞ்சம் கல்வி, வேலை வாய்ப்புப் பெற்று முன்னேறி வருகிறது. இதை எப்படியாகிலும் ஒழிக்கப் பார்க்கிறது மோடியின் அரசு. இந்த 10 % ஆரம்பம்தான்... கடைசியில் எல்லா இட ஒதுக்கீடு முறைகளையும் ஒழிக்கப் பார்க்கும் இந்த அரசு. மனு தர்ம சாஸ்திரத்தை அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம்பெறச் செய்வதுதான் மோடியின் திட்டம்.

– **ம.பெ.சுதந்திரகுமார்,** சென்னை.

**பி**ரதமர் மோடி, நாடாளுமன்றத் தேர்தலைச் சந்திக்கக்கூடிய நேரத்தில் இட ஒதுக்கீட்டுச் சட்டத்தை நிறைவேற்றியதை, குறுகிய அரசியல் நோக்கம் எனக் கையில் எடுத்துக் கொண்டது மாபெரும் வருத்தம் அளிக்கிறது. இட ஒதுக்கீடு 10 சதவிகிதம் முன்னேறிய சாதியினருக்கு வழங்கப்படுகின்றது வேதனைப்பட வேண்டிய விஷயம் ஆகும். முந்தைய காலங்களில் சகல வசதிகளையும் அனுபவித்தவர்கள் எனக் கூறலாம். 10 சதவிகித இட ஒதுக்கீடு முன்னேறிய சாதிக்கு வழங்கப்பட்டது சமூக அநீதிக்கானதே ஆகும்.

– **லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.

**இ**ட ஒதுக்கீடு கொண்டு வரப்பட்டதற்கு அடிப்படைக் காரணம் வருவாய் அடிப்படையில் பின்தங்கிய நிலையில் உள்ளவர்களைக் கை தூக்கி விடுவதற்கு அன்று. சமூக அளவில் சாதிகளின் பெயரால் கீழ்ச்சாதி என்று ஒதுக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டும், தாழ்த்தப்பட்டும், ஏளனப்படுத்தப்பட்ட ஒரு பிரிவினரை ஏனைய உயர் சாதியினரைப் போன்று சம அளவில் மதிக்கப்படுவதற்கு அவர்களை உயர்த்துவதற்காக அளிக்கப்பட்ட சலுகைதான் இட ஒதுக்கீடு.

இந்த இட ஒதுக்கீடு சமுதாயத்தில் சம தகுதியைக் கீழ்ச்சாதியினரும் பெற வேண்டும் என்ற நோக்கத்தில்தான் கல்வி, வேலை வாய்ப்புகளில் அளிக்கப்பட்டது. சுதந்திரம் பெற்று எழுபது ஆண்டுகளுக்கு மேல் ஆனபோதும், தாழ்த்தப்பட்ட சாதியினர் கல்வி பெற்றும் உயர்ந்த பதவியில் அமர்ந்தபோதும் இன்னமும் முழுமையான சமூக அங்கீகாரம் கிடைக்கவில்லை. அதற்காகத்தான் அந்த இட ஒதுக்கீடு மேலும் மேலும் நீட்டிக்கப்பட்டு அளிக்கப்பட்டு வருகிறது. எனவே, முன்னேறிய சாதியினருக்குத் தரப்பட்டுள்ள பத்து சதவிகித இட ஒதுக்கீடு மேலும் ஏற்றத் தாழ்வை உருவாக்குமேயன்றி சாதி, சமய மற்ற சமமான சமுதாயத்தை உருவாக்காது.

– **புலவர் கருமலைத் தமிழாழன்,**
ஒசூர்.

**ந**ம் நாட்டில் நிலவும் தற்போதைய சூழ்நிலையில் பிரதமர் மோடி எதைச் செய்தாலும் அதில் குறை காண்பதே எதிர்க்கட்சிகளின் தலையாய கடமையாக உள்ளது. 10 சதவிகித இட ஒதுக்கீடு முன்னேறிய சாதியினருக்குத் தரப்பட்டுள்ளது நியாயமே. உயர் சாதியினர் 100 ஆண்டுகளுக்கு முன்பு பலரைத் தாழ்மையாக நடத்தினர் என்பதற்காக, இப்போது அந்த உயர் சாதியினர் எவ்வித இடஒதுக்கீடும் இல்லாமல் இருப்பது சமுதாய முன்னேற்றத்திற்குச் சரியல்ல.

– **என்.ஆர். ஜெயசந்திரன்,**
காவேரிப்பட்டணம்.

காவாய் கனகத்திரளே போற்றி !

கயிலை மலையானே போற்றி !! போற்றி !!



# SHIVAM GROUP HOLIDAY



சென்ற வருடம் திருக்கயிலாய யாத்திரையில் கலந்துக்கொண்டவர்களுக்கு இல.கணேசன் மற்றும் கிரி டிரேடிங் சார்பாக விருது வழங்கியபோது

திருக்கயிலாய யாத்திரையில்
14 வருட அனுபவமுள்ள நிறுவனம்

## திருக்கயிலாயம் மானஸரோவர்
## முக்திநாத் யாத்ரா 2019

ஔவையாரை விநாயகப் பெருமான் தனது துதிக்கையால் தூக்கி வைத்த இடம் கயிலை மலை. நால்வர்களுள் ஒருவரான அப்பர் உருண்டு, புரண்டு, ஊன்தேய, உடல்தேய பயணம் செய்த மலை கயிலை மலை. காரைக்கால் அம்மையார் தனது காலடி தரையில் படக்கூடாது என்று நினைத்து தலையால் நடந்த இடம் கயிலை மலை. எண்ணற்ற மகான்கள் அருபமாகவும் சொருபமாகவும் நித்தம் நித்தம் பயணம் செய்து கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு அந்த ஆனந்தத்தில் ஜோதியோடு ஜோதியாகும் புனித மலை. இத்தகைய உன்னதமான இத்திருக்கயிலாய மலையில் தினம் தினம் தேவ தேவர்கள் வலம் வந்துக் கொண்டிருக்கிறார்கள். சிவ கணங்கள் வாழ்ந்துக் கொண்டிருக்கிறார்கள். சப்த ரிஷிகள் தவம் செய்துக்கொண்டிருக்கிறார்கள். இப்புனித யாத்திரையை சிவம் யாத்ரா சார்பில் 3000 யாத்திரைகளை அழைத்துச்சென்று கிரிவலம் வந்து மற்றும் மானஸரோவரில் புனித நீராடி மகாதேவனின் அருளைப்பெற்றுள்ளோம். பௌர்ணமி அன்று மானஸரோவரில் நீராடவும் கயிலையை கிரிவலம் வரவும் சிறப்பாக ஏற்பாடு செய்துள்ளோம்.

| சென்னையிலிருந்து காட்மாண்டு சென்று கெருன் வழியாக கயிலாயம் தரிசித்து வர 14 நாட்கள் | லக்னோ வழியாக விமானம் மற்றும் ஹெலிகாப்டர் மூலம் கயிலாயம் தரிசித்து வர 11 நாட்கள் | காட்மாண்டிலிருந்து ஹெலிகாப்டர் மூலம் கயிலாயம் தரிசித்து வர 12 நாட்கள் |
|---|---|---|
| மே 12, ஜூன் 11, ஜூலை 10, ஆக 9, செப் 7, | மே 14, ஜூன் 13, ஜூலை 12, ஆக 11, செப் 9 | மே 13, ஜூன் 12, ஜூலை 11, ஆக 10, செப் 8 |
| புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் | புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் | புத்த பூர்ணிமா சிறப்பு தரிசனம் |

நாங்கள் குறிப்பிட்டுள்ள எங்களது கட்டணத்தில் எந்த மாற்றமும் இருக்காது. யாத்திரைக்கு புறப்படுவதற்கு முன் வேறு எந்த காரணத்திற்காகவும் கூடுதலாக பணம் வாங்க மாட்டோம். இதை மற்ற நிறுவனத்திடம் ஒப்பிட்டு உறுதிப்படுத்திக்கொள்ளவும்.



எங்கள் நிறுவனத்துடன் திருக்கயிலாயம் யாத்திரையில் கலந்து கொண்டவர்களின் ஆலோசனை கேட்டு முன்பதிவு செய்யவும்
இந்தியாவிலேயே மிக உயர்தரமான சேவை வழங்கி நியாயமான கட்டணத்துடன் அழைத்து செல்லும் முதல் நிறுவனம்

முக்திநாத் யாத்ரா — சென்னையிலிருந்து இரயில் வழி 11 நாட்கள் விமானம் வழி 6 நாட்கள் **29,900/-** மட்டுமே
போக்ரா to ஜோம்ஜோம் விமான கட்டணம், உணவு, A/c ரூம், நேபாள் பர்மிட், பஸ் வசதி

**காசி, லும்பினி, போக்ரா, முக்திநாத், காட்மாண்டு இரயில் மூலம் 12 நாட்கள் ரூ. 13,900/-**

### ஸ்ரீலங்கா ராமாயணா யாத்ரா

சிறப்பு தரிசனம் : ராம நவமி, அனுமந் ஜெயந்தி, ராமானுஜ ஜெயந்தி
புறப்படும் நாள் : ஏப்ரல் 14, ஏப்ரல் 19, மே 9

முனீஸ்வரன் கோயில், மனவாரி கோயில், சீதா குகை, கண்டி கதிர்காமம் முருகன் கோயில், சீதா தேவி, முனீஸ்வரன் கோயில், திவுரும்பேலா கோயில், அசோகவனம், பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில், கொழும்பு, நெகெம்போ, கண்டி, நுவராஎலியா, திருகோணேஸ்வரம்

மாதம் ஒரு குழு புறப்படும் நாள் : பிப் 21, மார் 21, ஏப் 25, மே 9, ஜூன் 13, ஜூலை 11, ஆக 22, செப் 19
சன் டி.வி. புகழ் ஜீவநாடி ஜோதிடர் நல்லநேரம் திரு. நாகராஜன் அவர்கள் தலைமையில்
7 நாட்கள் ரூ.44,900/-

### காசி, புத்தகயா பிரயாக்ராஜ்

இரயில் மூலம் புறப்படும் நாள்
சிறப்பு தரிசனம்
தை அமாவாசை பிப் 2, மஹாசிவராத்ரி மார்ச் 1, சித்ரா பௌர்ணமி ஏப் 16
மே 1,31, ஜூலை 28, ஆக 27

விமானம் மூலம் புறப்படும் நாள்
பிப் 3, மார்ச் 2, ஏப் 17, மே 2, ஜூன் 1 ஜூலை 29, ஆக 28,
இரயில் மூலம் 9 நாட்கள்
விமானம் மூலம் 6 நாட்கள்
ரூ.10,900/-
இரயில் / விமானம் கட்டணம் தனி

### ஜார்தாம் யாத்ரா

கேதார்நாத், பத்ரிநாத், கங்கோத்ரி, யமுனோத்ரி

ஹரித்வார், மாயா என்னும் மோட்சபுரி, ரிஷிகேஷ், ராம்ஜூலா, லக்ஷ்மன் ஜூலா தொங்கு பாலங்கள், கேதார்நாத் ஜோதிர்லிங்கம், மந்தாகினி நதி, பத்ரிநாத் திவ்யதேசம், ஜோஷிமட், அலக்நந்தா நதி, தேவபிரயாகை, விஷ்ணு பிரயாகை திவ்யதேசம், கங்கோத்ரி, யமுனோத்ரி

| இரயில் மூலம் புறப்படும் நாள் | விமானம் மூலம் புறப்படும் நாள் |
|---|---|
| மே 8,22, ஜூன் 12, செப் 11, 25, அக் 2, | மே 10,24 ஜூன் 14, செப் 13, 27, அக் 4 |

இரயில் மூலம் 16 நாட்கள் - விமானம் மூலம் 12 நாட்கள்
ரூ.27,900/- சென்னை to டெல்லி போக வர விமான மற்றும் இரயில் கட்டணம் தனி

சிவம் குருப் நேபால் தலைமையிடமாக கொண்டு செயல்படும் நிறுவனம், திபெத் நேபாள் அங்கீகாரம் பெற்ற நிறுவனம்

கிரி — இந்திய கலாச்சாரம் மற்றும் பாரம்பரியத்திற்கு

SHIVAM GROUP HOLIDAY 9884111414 044-24629878

yatra@giri.in | shivamyatra@gmail.com | www.shivamyatra.com | www.shivamholiday.com

# வாசகர் கடிதங்கள்

***2019*** பிப்ரவரி மாத 'ஓம் சக்தி'யில் சுரங்கம் பகுதியில் வெளியாகியிருந்த 'இட ஒதுக்கீடும் கிரீமி லேயரும்' எனும் அருட்செல்வரின் கட்டுரை, அரசியல்வாதிகள் சிந்தித்துச் செயல்படுமாறு உள்ள கட்டுரையாகும். வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு அவர் விளக்கியிருப்பது வரவேற்கத்தக்கதாகும்.

– ***ஏ. பாஸ்கர்,*** சேலம்.

**ம**காத்மா காந்தியின் 150–ஆவது ஆண்டு நிறைவு விழாவில் அவருடைய பேத்தி இலா காந்தி பங்கேற்றுச் சிறப்பித்த நிகழ்ச்சியைப் படித்து இன்புற்றோம்.

– ***ஆர்.கே. லிங்கேசன்,*** மேலகிருஷ்ணன்புதூர்.

"**வி**வேகானந்தர் ஒரு சாதாரணத் துறவியல்ல" என்ற சுவாமி கமலாத்மானந்தரின் புகழாரம் உலகில் உள்ள எத்துறவிகளாலும் மறுக்க முடியாத பேருண்மை எனில் மிகையிரா!

– ***எஸ். ஜி. இசட்கான்,*** திருப்பூர்.

பிப்ரவரி மாத 'ஓம் சக்தி' "பூரி ஜெகநாதர் மகராஜ் கோயில்" முகப்பு அட்டைப்படம் மிக அருமை. அதன் தேர்த்திருவிழா நிகழ்ச்சி பற்றிய செய்தி வாசகர்களுக்கு மிகவும் பயனுள்ளதாகும்.

– ***லிங்கம் சின்னசாமி,*** தாராபுரம்.

"**த**மிழரின் தொன்மைக்கு இடப்பெயர் ஆய்வு" தலைப்பிலான கட்டுரை மிக மிக அற்புதமான தகவல்களைத் தந்தது. கட்டுரையாளர் முனைவர் பால கிருஷ்ணன் மேலும் இதுபோலப் பலப்பல பயனுள்ள கட்டுரைகளை 'ஓம் சக்தி'யில் எழுத வேண்டும்.

– ***ப. மூர்த்தி,*** பெங்களூரு.

***2019*** பிப்ரவரி 'ஓம் சக்தி' இதழில் 'பழகிப் பார்த்ததில் இவர்கள்' பகுதியில் குன்றக்குடி அடிகளார் பற்றி மரபின் மைந்தன் முத்தையா எழுதியிருந்த செய்திகள் வித்தியாசமானவை, பயனுள்ளவை.

– ***புலவர் ப. வெள்ளை,*** திருவில்லிப்புத்தூர்.

**தி**ருமதி. வி.ஆர். செம்பகக்குட்டியின் "இன்னாருக்கென விதிக்கப்பட்டவர்கள்" எனும் சிறுகதை, நிறைவேறாத – நம்பிக்கை தளர்ந்தவர்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதாகவும், கூட்டுவதாகவும் இருந்தது.

– ***மு. கணபதி,*** பெருந்துறை.

"**கா**ணிப்பாக்கம் கருணை விநாயகர் ஆலயம்" பற்றிய ஆன்மிகக் கட்டுரை மிகவும் அருமை. கோயிலின் அமைவிடம், அருள்பாலிக்கும் நிகழ்வுகள் ஆகியவற்றோடு ஒன்றிக் கலந்து உயிர்க்கலப்பு பெற்ற உணர்வு பெற்றேன்.

– ***த. நாகராசன்,*** சிவகாசி.

'**பி**த்தன்' கவிதை, வரிக்கு வரி அருமையான, பொருள் பொதிந்த, மனதை நிறைய வைத்த கவிதை. வாழ்க்கையில் ஏமாற்றம் வரக்கூடாது என்றால் "எதிர் பார்ப்பு" இருக்கக்கூடாது என்று வழி காட்டிய கவிஞருக்குப் பாராட்டுகள்!

– ***உஷா முத்துராமன்,*** மதுரை.

'**எ**ப்போ வருவாரோ' ஆன்மிக விழாப் பற்றிய கட்டுரை மிகவும் சுவையாக இருந்தது. அதில் ஆன்றோர்களின் சிறப்புகள், சான்றோர்களின் உரைகள் மனதைத் தொட்டன.

– ***ஜெயா ராஜாமணி,*** மதுரை.

"**ப**ழனியில் பாரம்பரிய மிக்க சித்த வைத்தியசாலைகள்" கட்டுரை, தெரியாத பல தகவல்களைத் தந்தது. கட்டுரையாசிரியருக்குப் பாராட்டுகள்!

– ***அ. பொருநைபாலு,*** திருநெல்வேலி.

**பெ**.சு மணி எழுதியிருந்த "ராம ஜென்மபூமி அயோத்தியில் கணிகையர் கூட்டம்" கட்டுரை உயரிய செயல்பாடுகளின் மூலம் சாதனைகள் புரிய முடியும் என்பதை நன்கு விளக்கியது.

– ***என்.ஆர். ஜெயசந்திரன்,*** காவேரிப்பட்டணம்.

**பெ**ண்மையின் பண்பு நலன்களையும், பெண்ணுலக மாண்புகளையும் இலக்கிய நயத்தோடு எடுத்துக்காட்டிய புலவர் அடியன் மணிவாசகனுக்குப் பாராட்டுகள் உரித்தாகுக!

– ***கே. சுப்பிரமணியம்,*** மதுராந்தகம்.

# ‘தமிழ்க்கடல்’ முரு. பழ. இரத்தினம் செட்டியார்

கல்லூரியில் படித்த காலத்தில் செட்டிநாட்டுப் பகுதிகள் சிலவற்றில் தொடர்ந்து பேசும் வாய்ப்புகள் அமைந்தன. அப்படி ஒருமுறை அழைக்கப்பட்டபோது, ஒரு பெரும் அறிஞருடன் மேடையைப் பகிர்ந்து கொள்ளப் போகிறீர்கள் என்று நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்த பேராசிரியர் ஒருவர் குறிப்பிட்டார். அந்தப் பேராசிரியர் பெயர் பால சுப்பிரமணியன்.

அந்த அழைப்பிழில் நான் முதன் முதலாகப் பார்த்த பெயர்தான் ‘தமிழ்க்கடல்’ முரு.பழ. இரத்தினம் செட்டியார்.

இதற்கு முன்னர் ‘தமிழ்க்கடல்’ எனும் பட்டப்பெயருடன் புகழ்பெற்று விளங்கியவர் ராய. சொக்கலிங்கம் அவர்கள். செட்டிநாட்டில் அவரு டைய வீட்டிற்கு ஒருமுறை மகாத்மா காந்தியடிகள் வந்தார். அவரை வர வேற்க வீட்டுமுகப்பில் என்ன வாசகம் எழுதலாம் எனச் சிந்தித்து வில்லி பாரதத்தில் வரக்கூடிய ஒரு வரியைத் தேர்வு செய்தார்.

அஸ்தினாபுரத்தில் தன்னுடைய குடிலில் தங்க கண்ணன் இசைந்த போது விதுரன் கூற்றாக வரக்கூடிய பாடலில் அந்த அரிதான வரி இடம்பெற்றது. “என்ன மாதவம் செய்தது இச்சிறு குடில்?” என்பதாகும்.

அவருக்குப் பிறகு தமிழ்க் கடலென்ற அடைமொழி யுடன் நான் அறிந்து கொண்டது முரு.பழ. இரத்தினம் செட்டியார் அவர்களைத்தான். அவர் மலேசியா வில் வட்டிக்கடை நடத்திக் கொண்டி ருப்பவர் என்றார்கள். தமிழிலக்கியங் களை எழுத்தெண்ணிப் படித்திருந் தார். குறிப்பாகச் சைவ சித்தாந்தத்தில் கரை கண்டவர்.

முதலில் நான் கந்தரனுபூதி பற்றிப் பேச, அடுத்து ஐயா அவர்கள் திருமுரு காற்றுப்படை பற்றிப் பேசினார். அபாரமான உரை. அதன்பின் சில மாதங்களிலேயே கோவைக்கு அவர் வருவதாக ஓர் அறிவிப்பு வெளி யானது.

கோவை கம்பன் கழகத்தின் தலை வரான தொழிலதிபர் ஜி.கே. சுந்தரம் அவர்கள் ஒவ்வொரு பவுர்ணமி நாளி லும் தேர்ந்தெடுத்த சிலரை அவை யினராக அழைத்து ஓர் அறிஞரை கம்பன் குறித்துப் பேசச் செய்வார். இரவு உணவுடன் நிகழ்வு நிறை வடையும்.

‘நிலாமுற்றம்’ என்ற பெயரில் நிகழும் அந்த அமைப்பில் ஒரு பவுர்ணமி நாளில் முரு.பழ.இரத்தினம் செட்டியார் வருகிறார் என்ற றிந்து மிகவும் மகிழ்ந்தேன். அவர் கொடுத்திருந்த தலைப்பு “கம்பனில் சைவத் தின் சாயல்” என்பதாகும்.



மரபின்மைந்தன் முத்தையா

அந்தப் பயணத்தின்போது இரண்டு மூன்று நாட்கள் அவர் கோவையில் இருக்கிறார் என்ற தகவல் கிடைத்தது. அப்போது நான் பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி யில் முதுகலை தகவல் தொடர்பியல் பயின்று கொண்டிருந்தேன். என் றாலும் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ஈ.கோ. பாஸ்கரதாஸ் அவர்களுக்கு நான் செல்லப்பிள்ளை. இத்தனைக்கும் நான் ஒரு மாதக் காலம் முதுகலை தமிழ்த் துறையில் இருந்துவிட்டுத் தகவல் தொடர்பியல் துறைக்கு மாற்றிக் கொண்டிருந்தேன்

அதில் பாஸ்கரதாஸ் அவர் களுக்குச் சிறிது வருத்தம் என்றாலும், அப்போது பாரதியார் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த கவிஞர் சிற்பி அவர்கள் பாஸ்கரதாஸ் அவர்களிடம் “முத்தை யாவுக்கு இயல்பாகவே தமிழார்வம், வாசிப்பு எல்லாம் உண்டு. வேறு துறையில் படித்தாலும் அவர் தமிழ் இலக்கியத்தை விட்டுச் செல்ல மாட்டார்” என்று சொல்லிச் சமாதானம் செய்ததாகப் பின்னர் அறிந்து கொண் டேன்

எனவே பேராசிரியர் பாஸ்கரதாஸ் அவரிடம் “தமிழ்த்துறை சார்பில் இயங்கி வந்த ‘முதுகலைத் தமிழ்ஆய்வு மன்றம்’ என்னும் அமைப்பின் சார்பில் இரத் தினம் செட்டியார் அவர் களைப் பேச அழைக்கலாம்” என்றேன். “நீங்களே அதற் கான ஏற்பாடுகளைச் செய்து விடுங்கள்” என்றார் பேராசிரியர்.

மாலையில் கம்பன் கழகத் தின் நிலாமுற்றத்தில் முரு.பழ. இரத்தினம் செட்டியார் பேசினார். கம்பராமாயணம் வைணவக் காப்பியம்தான் என்பதை ஒப்புக்கொண்டு அதேநேரம் அதில் சைவத்தின் சாயல் எப்படி எல்லாம் இருக்கிறது என்று மிகவும் விரிவாக விளக்கினார். அவரைச் சந்தித்து வணங்கினேன். அவருக்கு என்னை அடையாளம் தெரிந்தது. "என்ன முத்தையா சாமிகள்" எனச் சிரித்துக் கொண்டே தோளில் தட்டினார். அவ ரிடம் "எங்கள் கல்லூரிக்கு நீங்கள் வரவேண்டும்; கம்பனின் கவிநயம் என்று பேச வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டேன்.

"நாளை மதியம் ஓய்வாகத்தான் இருக்கிறேன். வருகிறேன்" என்று ஒப்புக் கொண்டார்.

கோவை சன்மார்க்க சங்கத்தின் துணைத் தலைவராகவும் கண்ண தாசன் அமைப்புகளில் புரவலராகவும் இருந்த சோமு அவர்கள் இல்லத் தில்தான் தங்கியிருந்தார்.


ஜி.கே. சுந்தரம்


கவிஞர் சிற்பி

சோமு தன்னுடைய காரில் கல் லூரிக்கு அழைத்து வந்து விட்டார். மேடைக்குப் போகும்போது பேராசிரியர் பாஸ்கரதாஸ் அவர்களுக்கு என்ன தோன்றியதோ அவரிடம் "ஐயா, கம்பன் கவிநயம் பற்றிப் பலரும் பேசி இருக்கிறார்கள். தாங்கள் ‘கம்பனில் புதுமை’ என்ற தலைப்பில் பேசினால் நன் றாக இருக்கும்" எனக் கேட் டுக் கொண்டார். "அதற்கு என்ன, பேசலாமே" என்று சொல்லித் தன் உரையைத் தொடங்கினார்.

“சீதை வனத்தில் இருந்த போது தண்ணீர் தாகம் எடுத் தது. நிறைய நீரை அவள் அப்படியே பருக வெட்கப் பட்டாள். உடனே இராமன்,

ஒரு மலரின் தண்டை ஒடித்துக் கொடுத்து அதன் வழி உறிஞ்சிக் குடிக்கச் செய்தான். கம்பராமா யணத்திலே ஸ்டிரா பற்றிய குறிப்பு இருக்கிறது" என்று தொடங்கினார்.

"சீதையை ராவணன் கடத்திச் சென்றபோது எப்படி வந்தான், எதிலே போனான் என்று இராம இலக்குவருக்குத் தெரியவில்லை. சிறிது தூரம் ஓர் ஊர்தி ஓடிய தடம் பதிந்து இருந்தது. பிறகு காணாமல் போனது. நெடுந் தொலைவு ஓடி மேலே போகக் கூடியது விமானம். குறுகிய தொலைவு ஓடி மேலெழும்பக் கூடியது ஏர்பஸ். எனவே ராவணன் வந்தது ஏர்பஸ்" என்று ஒரு மணி நேரத்திற்கும் மேலாக கம்பனில் இருக்கும் பல் வேறு புதுமைகளை விளக்கிப் பேசினார். பேராசி ரியர்களும், தமிழ்த் துறை மாணவர்களும் பெரிதும் ரசித்து மகிழ்ந்தார்கள்.


காந்திஜி


ம.பொ.சி.

மேடையை விட்டு இறங்கும்போது என் தோளில் தட்டி "என்ன முத்தையா சாமிகள், சரியா இருந்ததா" எனக் கேட்டுக் கொண்டே அவர் நடந்த சித்திரம் இன்னும் மனதில் பசுமையாக இருக்கிறது.

அன்று மாலை கோவை ஆர்.எஸ். புரம் பகுதியில் உள்ள அருள்மிகு இரத்தின விநாயகர் ஆலயத்தில் இரத்தினம் செட்டியார் அவர்கள் 'திருமுறைகள்' பற்றிப் பேசினார். அப்படிப் பேசுகிறபோது ஒருமுறை சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அவர் களின் ஏற்பாட்டின்படி, காரைக்கால் அம்மையார் பற்றிச் சென்னையில் பேசிய சம்பவத்தை நினைவுகூர்ந்தார். அந்த மேடையில் பேசிக் கொண் டிருந்தவர் திடீரென்று "காரைக்கால் அம்மை போல எனக்கும் இன்று மாம்பழம் கிடைக்கப் போகிறது" என்று சொல்லியிருக் கிறார்.

அவையில் இருந்தவர் களுக்குப் புரியவில்லை. ம.பொ.சி. மட்டும் சிரித் திருக்கிறார். விஷய மென்னவென்றால், தனக்கு மாம்பழங்கள் வேண்டும் என்று ம.பொ.சி.–யிடம் அவர் கேட்டிருக்கிறார். ம.பொ.சி. நல்ல பழங்கள் வாங்கி வருமாறு தன் மனைவியை அனுப்பி இருக்கிறார். செட்டியார் பேசிக் கொண்டிருந்த போதே அந்த அம் மையார் அரங்குக்குள் நுழைந்து அமர்ந்த தையும் மேடையிலிருந்து ம.பொ.சி. குறிப்பாக வினவியதையும் அதற்கு அந்த அம்மையார், 'பழம் வாங்கி விட்டேன்' எனும் பொருள் படத் தலையசைத்ததையும் செட்டியார் கவனித்து "எனக்கு மாம் பழம் கிடைக்கப் போகிறது" என்றா ராம்.

அதன் பின்னர் அவரை மதுரை திருவள்ளுவர் கழகத்தில் நடந்த திரு வள்ளுவர் மாநாட்டில் சந்தித்தேன். அவருடைய சொற்பொழிவுக்குப் பிறகு நடந்த கவியரங்கத்தில் நான் பங்கேற்கச் சென்றிருந்தேன். அவர் அன்று திருவள்ளுவர் மாநாட்டில் "திருக்குறள் சைவ நூலே" எனும் தலைப்பில் பேசினார்.

கோவையில் கம்பன் நிலா முற்றத்தில் பேசும்போது கம்பனின் காவியம் வைணவக் காவியம். அதில் சைவத்தின் சாயல்தான் இருக்கிறது என்று ஒப்புக் கொண்டு பேசியவர், திருக்குறள் சைவ நூல் என்று தன் உரையில் மிகவும் ஆணித்தரமாக நிறுவினார்.

அந்த உரைக்குப் பிறகு அவர் முன் வரிசையில் அமர்ந்து இருக்கக் கவியரங்கம் தொடங்கியது.

நான் கவிதை பாடும்போது

"சித்தாந்த வித்தகா! செம்மாந்த தத்துவா!

தமிழ்க்கடல் ரத்தினமே!

சொற்பெருக்கு ஆற்றிட கோவை வந்த கால்

சந்தித்து மகிழ்ந்தனமே

எட்டுத் திசையிலும் சுற்றி வருகிறீர்

உடல்நலம் பத்திரமே"

என்று அப்போது எழுதி வாசித்தேன். அவர் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்.

மேடையில் தனக்கு ஒவ்வாத கருத்துக்களை யாரேனும் சொன்னால் சண்டமாருதமாகப் பொங்கிச் சண்டையிடுவார் என்று நாவுக்கரசர் சத்தியசீலன் அவர்கள் இரத்தினம் செட்டியார் அவர்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்.

ஆனால், நான் சந்தித்த போதெல் லாம் அறிவின் ஆழத்தில் இருந்து கிளர்ந்தெழும் ஆனந்தத் தென்றலாய், மேடையில் வீசுகிற மெல்லியப் பூங்காற்றாய் அவரைக் கண்ட அனுப வமே நெஞ்சில் நிறைந்திருக்கிறது.

சென்னைக் கம்பன் கழகமும் ஏவி.எம் அறக்கட்டளையும் ஒவ்வோர் ஆண்டும் இணைந்து நிகழ்த்தும் அறக்கட்டளைச் சொற்பொழிவில் அவர் "கம்பன் உணர்த்தும் பரம் பொருள்" என்ற தலைப்பில் நிகழ்த்திய உரை வானதி பதிப்பகம் சார்பில் நூலாக வெளிவந்தது

அந்த நூலை வாசித்த பிறகு நாமும் ஒரு காலத்தில் கம்பன் அறக் கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்த வேண்டும் என்னும் லட்சியம் என் இளமைப் பருவத்தில் இதயத்தில் பதிந்தது. அது இரண்டு ஆண்டு களுக்கு முன்னர் நிறைவேறியது.

பல நூல்களை அந்தப் பெருமகன் எழுதியிருந்தாலும், அவருடைய 'சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்' என்னும் நூல் உமா பதிப்பகம் சார்பிலும் 'கடவுளால் முடியாத செயல் கள்' என்கிற கட்டுரை நூல் விஜயா பதிப்பகம் சார்பிலும் வெளி வந்து இப்போதும் எளிதில் கிடைக் கின்றன.

அவர் போன்ற அறிஞர்கள் அபூர்வ ராகங்கள். கலைமகள் வீணையில் இருந்து எழுந்த கந்தர்வ கானங்கள்.

●

## அறிவு இருக்கும் இடம்!



"கல்வியால் அறிவு வருமா?" என்று ஒருவர் வாரியார் சுவாமிகளிடம் கேட்டார். அதற்கு வாரியார், 'வராது' என்றார். பின்னர் விளக்கினார் :

"அறிவு ஆத்மாவில் இருக்கிறது. அதை மாயை மறைக்கிறது. கல்வியால் மாயையைத் தேய்த்து அகற்றினால், அறிவு வெளிப்படும். சோப்புக் கட்டியினால் சட்டை வெள்ளையாவதில்லை. சட்டை ஏற்கனவே வெள்ளைதான். அதன் மேலிருக்கும் அழுக் கைப் போக்கும்போது சட்டைக்கே உரிய வெள்ளை வெளிப்படுகிறது" என்றார் வாரியார்.

– ம.செ.மயில், திருநெல்வேலி



எழுதிச் சமகாலத் தமிழ்ப் படைப்பு இலக்கிய உலகில் தனக்கென ஓர் இடத்தை ஏற்படுத்திக் கொண்டவர் ஏ.எம். சாலன்.

வேலை நிமித்தமாக சாலன் எர்ணாகுளத்தில் குடிபுகுந்தார். இயற்பெயர் மதி எனக் கொண்ட இவர், பானு என்னும் உறவுக்காரப் பெண்ணைக் காதலித்துச் சீதனம் வாங்காமல் திருமணம் செய்து கொண்டார். பானு சாலனுடைய மனைவி மட்டுமல்ல; அவரை உற்சாகப்படுத்தி எழுத வைத்த சகத் தோழியாகவும் அமைந்தார்.

இலக்கியம், சமுதாயம், வரலாறு முதலியன தொடர்பாகச் சாலன் களப் பணிக்குப் போகும்போது, மிகப் பெரும் பான்மையும் பானுவும் உடன் சென்று ஒத்துழைப்புக் கொடுத்தார். குமரி மாவட்டக் கலை இலக்கியப் பெருமன்ற அமைப்பில் இது வேறு எந்தக் குடும்பத்திலும் இல்லாத சிறப்புப் பண்பு.

# மறைந்தாரே!

## எழுத்தாளர் ஏ.எம்.சாலன்

குமரி மாவட்டம் ஆரல்வாய்மொழியைச் சார்ந்தவர் ஏ.எம்.சாலன். நான் ஆரல்வாய் மொழியில் ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில் என்னிடம் பயின்றவர்களில் ஒருவர் அவர்.

அன்று குமரி மாவட்ட மாணவர் பெருமன்றம் நடத்திய ஒரு மாநாட்டில் ராமு என்ற இளம் தோழரின் வழியாக எனக்கு அறிமுகமானவர் எஸ்.கே. கங்கா. தோவாளை ஊரைச் சார்ந்த அவர், ஆரல்வாய்மொழியில் கல்வி வட்டம் என்னும் அமைப்பை உருவாக்கினார். அது கம்யூனிஸ்ட் கட்சி, ஏ.ஐ.டி.யூ.சி., கலை இலக்கியப் பெருமன்றம் என மூன்று கிளைகளாக, சில அம்சங்களில் ஒன்றையொன்று சார்ந்தும், வேறு சில அம்சங்களில் தனித்தும் சிறப்பாக வளர்ந்தன.

கலை இலக்கியப் பெருமன்றக் கிளையில் வளர்ந்தவர்தான் ஏ.எம்.சாலன். அந்தக் காலத்தில் ஆரல்வாய்மொழி கிளையில் ஒரு கையெழுத்து இதழ்கூட நடத்தப்பட்டது என்று எனக்கு நினைவு. பலர் அன்று அதில் எழுதினார்கள். தொடர்ந்து

காலம் முழுதும் அவர்கள் அபூர்வக் காதலர்களாகவே வாழ்ந்தார்கள். அவர்களுக்கு வாரிசுகளாக ஒரு மகனும், ஒரு மகளும் வாய்த்துள்ளார்கள். இருவரும் திருமணமாகிக் குழந்தை குட்டிகளோடு சிறப்பாக வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். சாலனின் மருமகள் அய்ந்து மொழிகளில் தேர்ச்சியுள்ள ஓர் அருமையான பெண்.

### பொன்னீலன்

ஏ.எம்.சாலனுடைய சிறுகதைகளை 'வட்டத்தை மீறிய விரிவுகள்', 'அழுக்கு', 'ஒதுக்கப் பட்டவர்கள்' ஆகிய தொகுப்புகளாக நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் வெளியிட்டது. பல அமைப்புகளின் பரிசுகளையும் பாராட்டுகளையும் அவை பெற்று வருகின்றன.

'ஓம் சக்தி' இதழ் ஆசிரியர் கவிஞர் பெ.சிதம்பரநாதன் ஏ.எம்.சாலனின் படைப்புகளை விரும்பி வெளியிட்டுவருபவர். ஓம் சக்திக்காக

எழுத்தாளர் ஏ.எம். சாலன், 'ஓம் சக்தி' பத்திரிகையில் நியமிக்கப்படாத ஓர் உறுப்பினராக இருந்தார் என்பதே உண்மை. அவருடைய குடும்பத்தார் அனைவரும் 'ஓம் சக்தி' பத்திரிகை அலுவலகத்தோடு பாசமும், நேசமும் உள்ளவர்கள்.

என்னைவிட 20 ஆண்டுகள் வயது குறைந்த சாலன், இப்படி 59 வயதில் அகால மரணமடைந்தது சகித்துக்கொள்ள முடியாத ஒன்று.

மலையாள – தமிழ் இலக்கியங்களுக்குப் பாலமாக விளங்கினார். படைப்பாளியாக விளங்கினார். முற்போக்குச் சிந்தனையாளர். ஆனாலும், அவருக்கு அந்த முற்போக்கின்மீது விமர்சனங்கள் இருந்தன. அடிக்கடி விவாதிப்பார். எழுத்தாளர் பொன்னீலனுக்கு உடன்பிறவாச் சகோதரர்.

அவருடைய அகால மரணத்தை கோவை எழுத்தாளர் ஆட்டனத்தியின் மூலமாகவும், எழுத்தாளர் சரோஜினி உன்னித்தான் மூலமாகவும்தான் அறிந்தோம். 'ஓம் சக்தி' அலுவலகத்திலேயே இரங்கல் கூட்டம் நடத்தினோம்.

சாலன் என்பவரை நான் தொலைபேசியில் அழைக்கின்றபோதெல்லாம் எங்களுக்குக் கிடைத்த 'திரு மூலன்' என்றுதான் அழைப்பேன். இனி மலையாளத்திலிருந்து மொழிபெயர்ப்புப் படைப்புகள் வருவது குறையலாம். ஏனெனில், சாலன் இல்லை. அந்த இடத்தை நிரப்பச் சரியானவர்கள் எனக்குத் தெரியவில்லை.

அவருடைய மனைவி, பிள்ளைகளுக்கு நாங்கள் எப்படி ஆறுதல் சொல்வது என்று தெரியவில்லை. பாசம் மிக்க ஒரு படைப்பாளியை, அன்பு நிறைந்த ஓர் எழுத்தாளரை இழந்த துயரத்தில் எங்களால் எதுவும் செய்ய இயலவில்லை. அவருடைய ஆன்மா சாந்தியடைய இறையருளைப் பிரார்த்திக்கின்றோம். அவர்கள் குடும்பத்திற்கு எங்கள் அனுதாபங்களைச் சமர்ப்பிக்கின்றோம்.

– இ.ஆர்.

சாலன் பல இடங்களுக்கு அலைந்து, களப்பணிகள் செய்து, கேரளத்தில் பிறர் கண்ணில்படாத பல அபூர்வச் செய்திகளையும், சம்பவங்களையும் அந்த இதழில் வெளியிட்டார். கவிஞர் சிதம்பர நாதனுக்கும் சாலனுக்கும் இடையில் இருந்த உறவு மிகுந்த மதிப்புக்கும் வியப்புக்கும் உரியது.

ஓம்சக்தியைப் போலவே தாமரையிலும், ஜன சக்தியிலும் வேறு சில சிற்றிதழ்களிலும் எழுதி வந்தார் ஏ.எம்.சாலன்.

சாலனை ஒரு தலித்து எழுத்தாளர் எனச் சிலர் குறிப்பிடுவர். சாலனின் தலித்தியம் பிற சமூகத்தினரையும் அரவணைக்கும் தலித்தியம். தன் முனைப்பு சிறிதும் அற்ற கனிந்த தலித்தியம். இந்தப் பார்வை அவருடைய கட்டுரைகளில் பரந்து கிடப்பதைப் பார்க்க முடியும்.

பல கட்டுரைகளை எழுதிய படைப்பாளி அவர். 'படைப்பு – படைப்பாளி – விமர்சனம்', 'தலித் பண்பாடு சில பார்வைகள்', 'எனது வாழ்க்கைப் பயணம்' என மூன்று தொகுப்புகளாக அவருடைய கட்டுரைகள் இதுவரை வெளி வந்துள்ளன. இன்றும் பல வெளி வரும்.

ஆரல்வாய்மொழி வட்டார தலித் மக்களின் வாழ்வையும், பிரச்சினைகளையும் கதைகளாக்கினார் ஏ.எம்.சாலன். அவர் பார்வை வளர்முகப் பார்வை. நேற்றில் இருந்து இன்று சமூக இறுக்கங்கள் படிப்படியாகத் தளர்ந்து வருகின்றன. இவை மேலும் தளரும். காலப்போக்கில் கரைந்தே போகும் என்னும் குறிப்புகளைக் கொண்டவையாக அவை இருக்கின்றன.

எர்ணாகுளத்தில் வாழ்ந்ததால் மலையாளத்தில் எழுதவும், பேசவும் கற்றுக் கொண்டார் சாலன். பல நல்ல மலையாளப் படைப்பாளிகளின் கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார். புகழ்பெற்ற மலையாளக் கவி ஓ.என்.வி குருப்பின் தேர்ந்தெடுக்கப்பட்ட கவிதைகளை ஒரு தொகுப்பாக என்.சி.பி.எச் வழியே வெளியிட்டார் அவர். தேர்ந்தெடுக்கப்பட்ட மலையாளச் சிறுகதைகள், விளம்பரத்தில், கானலில் நீர் தேடிய மான்கள் ஆகிய தொகுப்புகள் இவர் மொழிபெயர்த்து வெளியிட்டவை.

கேரளத்தின் புகழ்பெற்ற 20–ஆம் நூற்றாண்டு எழுத்தாளர்களில் ஒருவரான பொன் குன்னம் வர்க்கி யின் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளைத் தற்சமயம் இவர் தமிழில் மொழிபெயர்த்தார். அவர் மறைவதற்கு ஒரு வாரத்துக்கு

முன்தான் அவற்றை முன்னுரைக்காக என்னிடம் அனுப்பினார். வாசித்து விட்டு நான் உடனே அனுப்பிய முன் னுரையோடு அந்த அருமையான சிறுகதைகள் வெளியீட்டுக்காக அவர் இல்லத்தில் முறைப்படுத்தப் பட்ட நிலையில், மரணம் அவரை நம்மிடம் இருந்து பறித்துக் கொண் டது.

பார்வையிலும் பேச்சிலும் பழக்கவழக்கங்களிலும் மென்மை யானவர் ஏ.எம்.சாலன். யாரையும் கெடுத்துப் பழித்தும் பேசாதவர் அவர். தன்னுடைய மகிழ்ச்சிகளை யும், துயரங்களையும், தனக்கு நெருங்கியவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் பண்புடையவர். தன் மனைவியிடமும் மகனிடமும் மரு மகளிடமும் பேரக் குழந்தைகளிட மும் நிரம்ப பிரியம் உடையவர்.

பல தடவை அவர் எர்ணாகுளம் வீட்டுக்கு என் துணைவியாருடன் போயிருக்கிறேன். அவரும் அவரு டைய துணைவியாரும் விருந்தி னரை உபசரிக்கும் பண்பில் மிக உயர்ந்தவர்கள். அவருடைய பேத்தி ஒருத்தி என்னைக் கண்டால் போதும், குழந்தைத் தனமாக நாட் டியமாடி எங்களைப் பரவசப்படுத்து வாள். என் வீட்டுக்கும் என் மகள் கள் வீட்டுக்கும் வாய்ப்புக் கிடைக் கும் போதெல்லாம் வருவார்கள் சால னும் பானுவும்.

வாரத்திற்கு இருநாளாவது என்னிடம் தொலைபேசியில் நெடு நேரம் உரையாடுவார் சாலன். தனித்தோ, குடும்பத்தோடோ நான் எர்ணாகுளத்தைக் கடந்த போதெல் லாம் அருமையான உணவுப் பொதி களும் நொறுக்குத் தீனிகளும் கொடுத்து எங்களை இருவரும் உப சரித்தார்கள். எங்களுக்கு மட்டுமல்ல, என் இரு மக்களுக்கும் கூட நெருங்கிய சொந்தகாரர்கள் அவர்கள்.

இன்னும் 20 ஆண்டுகளாவது வாழ்ந்து தமிழ் இலக்கியத்திற்குத் தொண்டு செய்யும் ஆற்றலும், அழகுணர்ச்சியும், படைப்புத் திறனும் கொண்ட அருமைத் தம்பி சாலன் முதிரா வயதில் அந்தோ நம்மை விட்டுப் பிரிந்து போய்விட்டாரே!

●

## வரப்பெற்றோம்

**1. ராஜநந்தினி** – நூலாசிரியர் : வசந்தநாயகன். பக். 80, விலை ரூ. 70/– செல் : 97905 70339. (தமிழகத்தை ஆண்ட சிற்றரசர்களின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட சுவை யான கதைகள் அடங்கிய தொகுப்பு).

**2. அய்யா வைகுண்டரின் சாதனையும் ஆங்கிலேயரின் வேதனையும்** – நூலாசிரியர் : கேப்டன் எஸ்.பி. குட்டி. பக். : 128, விலை ரூ. 100/– செல் : 94436 07684. (அய்யா வைகுண் டர் வாழ்ந்த காலத்தில் ஆங்கிலேயரின் சூழ்ச்சிகளையும், அவை எவ்வாறு முறியடிக்கப்பட்டன என்பதையும் தெள்ளத் தெளிவாகக் கூறும் நூல்.

**3. மறக்க முடியாத சந்திப்புகள்** – நூலாசிரியர் : துடுப்பதி ரகுநாதன். பக். : 96, விலை ரூ. 100/– செல் : 97895 74816. (கடந்த 60 ஆண்டுகளில் நூலாசிரியர் தம் வாழ்க்கையில் சந்தித்த மறக்க முடியாத பிரபலங்கள் பலரைப் பற்றி நினைவு கூரும் நூல்.

**4. அருவிச்சரம் – நூலாசிரியர்** : புலவர் வீ. சொக்க லிங்கம். பக். : 96, விலை ரூ. 30/– செல் : 94869 23424. (தென்பாண்டி நாட்டிலுள்ள குற்றாலத்தின் பெருமைதனைத் தேன் சுவைச் செந்தமிழில் நூலாசிரியர் படைத்திருக்கும் கவிதை நூல்).

**5. ஆடலரசன் ஹைக்கூக்கள் – நூலாசிரியர்** : செ. ஆடலரசன். பக் : 40, விலை, ரூ. 50/– போன் : 04362 – 239289. (இயற்கை அதிசயங்கள், வாழ்க்கை அனுபவங்கள் இவற்றை ஹைக்கூ வடிவில் காட்சிப் படுத்தியிருக்கும் நூல்).

**6. பெற்றோர்களே கவனியுங்கள்** – நூலாசிரியர் : காந்தலட்சுமி சந்திரமௌலி. பக் 72, விலை ரூ. 60/– செல் : 98840 83087. (இன்றைய அவசர உலகில் பெற்றோர்கள் குழந் தைகளிடம் எப்படி, எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை அழகாக விவரிக்கும் நூல்).

**7. மகாமக மகிமை** – நூலாசிரியர் : வித்துவான் வே. மகாதேவன், பக். : 122. விலை ரூ. 75/–. செல் : 98409 36640. (கும்பகோணம், அதன் கல்வி, கலாச்சாரம், மகாமகப் பெரு விழாவின் மகிமை பற்றி அரிய செய்திகள் விரிவாக விளக்கப்பட்டிருக்கும் நூல்).



*With Best Compliments from*

# A B T LIMITED

**Divisions**

ABT PARCEL SERVICE | ABT MARUTI | ABT WIND ENERGY | ABT BUS SERVICE

ABT PUMP | ABT INFO.NET | ABT EXPPRESS

Corporate Office : 180,Race Course Road,Coimbatore - 641 018. Phone : 0422 - 4333666 Fax : 0422-4333100

Website: www.abtlimited.com E-mail : corporate@abtlimited.com

கட்டுரை

# ஒளி விளக்கீடு

*“இருக்கொடு நீர் சங்கிற் கொண்டிட்டு*
*எழில் மறையோர் வந்து நின்றார்*
*தருக்கேல், நம்பி சந்தி நின்று*
*தாய் சொல்லுக் கொள்ளாய், சிலநாள்*
*திருக்காப்பு நானுன்னைச் சாத்தத்*
*தேசுடை வெள்ளுறை நின்றாய்!*
*உருக்காட்டும் அந்தி விளக்கின்று*
*ஒளி கொள்ள ஏற்றுகேன் வாராய்”*

– பெரியாழ்வார் திருமொழி

இறைவழிபாட்டிலே திருவிளக்கிடுதல் முக்கிய அங்கம் வகிக்கிறது. தெய்வப் படிமங்கட்கு அபிசேகம், அலங்காரம் ஆனதும் விதம் விதமான தீபத் தட்டுகளால் தீப ஆரத்தி காட்டுவது எல்லா ஆலயங்களிலும் வழக்கமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற செயல்!

அன்னவிளக்குகள், ஆடும் மணி விளக்குகள், தோரண விளக்குகள், ஐமுக, ஆறுமுக, நான்முக விளக்குகள், கோல விளக்குகள், குத்துவிளக்குகள் என்று எத்தனை வகையான விளக்குகள்!

அந்தி வண்ணனின் செம்மேனி, விளக்குகளின் ஒளியில் தக தகக்கின்றது. அன்னையின் திருமேனி எழிலை விளக்கம் செய்கின்றன.

எங்கும் ஒளிச்சுடர்கள்! எங்கணும் ஒளி வெள்ளம்!

ஆலய தரிசனம் பண்ண வந்தவர்கள், ‘ஐயனின் திருக்கோவிலிலே இப்படி அணி விளக்கம் செய்தார் யார்?’ என்று வியப்புடன் வழிபாடு செய்கிறார்கள்!

ஆலயம் நெடுகிலும் ஒளிரும் முத்துச் சுடரொளி, இரவைப் பகலாக மாற்றிக் கொண்டிருக்கிறது.

*“திருக்கிளர் சீர் மாடங்கடிருந்து பெருங்குடி நெருங்கிப்*
*பெருக்குவட வெள்ளாற்றுத் தென்கரைப் பாற்பிறங்கு*
*பொழில்*
*வருக்கை நெடுஞ்சுவை பொழிதேன்மடு*
*நிறைத்து வயல்விளக்கு*



‘இருக்கு வேதத்தை ஓதிய வண்ணம் மறையவர்கள் வந்து நின்றாயிற்று. அந்திப் பொழுதும் வந்துவிட்டது. பகலிலேயே ஒளி விளக்குத் தேவைப்படும். அந்திப் பொழுதிலே உன்னுடைய முழுமையான தரிசனம் வேண்டுமென்றால், திருவிளக்குகளின் ஒளி வேண்டாமா? இதோ விளக்கேற்ற வருகிறேன். ஒளி வெள்ளத்திலே தேசுடைய உன் திருமேனி அழகை அள்ளிப் பருகி உள் வாங்கிக் கொள்ள விரும்புகிறேன்’ என்று பெரியாழ்வார் பாடுகிறார்.




திருமயிலாப்பூரிலே எலும்பைப் பெண்ணாக மாற்றி உயிர் கொடுத்த திருஞானசம்பந்தர், குடத்துள் எலும்பாக இருக்கும் பூம்பாவையை நோக்கி, ‘விளக்கீடு காணாது போதியோ பூம்பாவாய்’ என்று நெஞ்சம் நெகிழப் பாடுகிறார்.

விளக்கிடுதல் என்பது ஒரு விழாவாகவே அல்லவா அப்போது கொண்டாடப்பட்டு வந்திருக்கிறது.

உமாகல்யாணி




கணம்புல்லர்
நாயனார்

*யிருக்கு வேளூரென்ப திவ்வுலகில்*

*விளங்கும் பதி" –யில்*

அருள் விளங்கப் பிறந்த கணம் புல்லரே, இவ்வாறு ஒளிரும் விளக்குகளை ஏற்றிவைத்தத் திருவிளக்குப் பணியாளர் என்பதை அறிந்து மனதார நன்றிகூறி மகிழ்கிறார்கள்.

''தமஜோமா ஜ்யோதிர் கமய!'' இருளிலிருந்து ஒளிக்கு அழைத்து வரும் நற்செயலை அல்லவா கணம்புல்லர் செய்திருக்கிறார்.

தாவாத பெருஞ்செல்வம் தன்னிடம் மிகுதியும் பெருகியிருந்தால், ஓவாத ஒளிவிளக்குகளைச் சிவனார் ஆலயத்தில் ஏற்றிவைத்து, நாவாரப் பண் பாடி நம்தேவன் திருத்தாள் பரவுவதே தனது கடன் என்று, இருக்கு வேளூர்ப்பதியினரான கணம் புல்லர் தீர்மானித்து அவ்வண்ணமே செயலாற்றியும் வந்தார்.

செல்வத்தின் இயல்பு செல்வது. ஓரிடத்தில் மட்டும் நிலையாக இருப்பதில்லை. கணம்புல்லரின் ஓவாத செல்வமெல்லாம், சிவனார் திருக்கோவிலில் ஒளியாய் நின்றெரிந்து சென்றேவிட்டது. வறுமையை அழைத்து வந்து கணம்புல்லருக்குத் துணை இருத்திப் போயே போய்விட்டது.

மன்றில் நின்றாடும் நாதனின் மலர்ப் பாதங்களே சரணம் என்று தில்லைத் திருநகருக்கு வந்தார். அவருள் ஒளிவெள்ளம் பாய்ந்தது.

சிவனாரின் திருக்கோவிலுக்கு ஒளிவிளக்கு ஏற்றாமல் இருப்பதும் ஒரு வாழ்வோ? செல்வங்கள் போனால் என்ன? இல்லத்தில் எத்தனையோ பொருட்கள் இருக்கின்றனவே! அவற்றையெல்லாம் விற்று ஆலயத்தில் நெய்விளக்கு ஏற்றுவோம் என்று முடிவு பண்ணிவிட்டார்.

அங்ஙனமே திருப்பலீச்சுரத்து நாயகனுக்கு விளக்குகள் ஏற்றுவித்தார். இல்லத்தில் இருந்த பொருட்கள் எல்லாம் இல்லாமற் போயின. இனி மேல் ஏது செய்வோம் என்று கலங்கினார்.

இரப்பது இழிவு என்பதால் அதனைச் செய்யவும் வெறுத்தார்.

யோசிக்க யோசிக்க ஓர் எண்ணம் உதயமாயிற்று. உடல் உழைப்பு என்கிற மூலதனம் இருக்கும்போது, வேறு எதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும் என்று ஊக்கமுடன் எண்ணினார். காட்டுக்குச் சென்று கணம் புல்லைக் கட்டுக் கட்டாக அறுத்துக் கொண்டு வந்து விற்றார். விற்றதனால் கிடைத்த பணத்தைக் கொண்டு எம்பெருமானின் கோவிலை ஒளி மயமாக்கினார் கணம்புல்லர். அவரது உடல் உழைப்பினால் சுடர் விட்டன ஒளி விளக்குகள்!

இவ்வாறு திருவிளக்கேற்றி உவந்து வரும் நாளில் ஒரு நாள் அவரது கணம்புல்லை எவரும் வாங்கவில்லை. என்ன செய்வதென்று புரியாமல் சிந்தை மிக நொந்தார். இறைவா! இதுவும் உன் திருவிளையாடல்களில் ஒன்றோ? என்று புலம்பினார். இன்று திருவிளக்கு ஏற்றுவதற்கு என் செய்வேன்? என்று ஏங்கினார்.

ஒருகட்டுப் புல்லிருக்க சிந்தையில் தயக்கமேன் என ஊக்கம் கொண்டு, மன்றுள் நடமாடும் மன்னரின் திருமுன்னர் சென்றார். அப்புல்லையே நெருப்பில் காட்டி, ஒளியூட்டி நின்றார்.

பொழுதும் கரைந்தது, புல்லும் மறைந்தது. இனி ஒளிகாட்டப் புல்லும் இல்லை.

இவ்வளவு நேரம் ஒளி காட்ட முடிந்தது. இனிமேல் அந்தப் புல்லும் இல்லாமையால் என்ன செய்து ஒளி காட்டலாம் என்று யோசனை பண்ணி னார். நீளமான தமது தலைமுடி நினைவிற்கு வந்தது. சற்றும் தாமதிக்காமல் தலைமுடியை அரிந்து எடுத்தார். அதனை நெருப்பூட்டி எரிக்கலா யினர்.

இறைவனால் அதற்கு மேலும் அவரைச் சோதனை பண்ண இயலவில்லை. ஒளிப் பிழம் பாய்க் காட்சி அளித்தார். கண்கள் நீர் சொரிய அப்படியே இறைவனின் திருப்பாதத்தில் விழுந்து வணங்கினார்.

வணங்கிய கணம்புல்லரை இறைவன் தம்மு டன் சேர்த்துக் கொண்டு திருக்கயிலாயத்தில் சேர்ப்பித்தார்.

இறைமுன்னர் ஒளிகாட்டிய கணம்புல்லர், இனிமேல் பிறவாப் பெரும் பேற்றை எய்தி இறை வனிடமே அடைக்கலமானார்.

இதுதான் மெய்யான இறை பக்தியினால் கிடைக்கப் பெறும் நற்பேறு ஆகும்.



இவரைப் போன்று ஒளிவிளக்கீடு செய்து, முக்தி நிலை எய்திய நாயனார் கலியநாயனார் ஆவார். இவர் சீர்கெழு தொண்டை மண்டலத் திலே, தடமதில் சூழ் ஒற்றியூர் நகரில் வாழ்ந்த புண்ணியர் ஆவார். இவரது குலம் செக்கார் குலம்! பெரும் செல்வந்தர்!

செல்வம் நிலையாமையையும், யாக்கை நிலையாமையையும் நன்குணர்ந்த இவர், சிவ புண்ணியம் தேடலே இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்றம் தரும் செயல் என்று உறுதியாக எண்ணி னார்.

திரு ஒற்றியூர் சிவத்தலத்தில் அல்லும், பக லும், உள்ளும் புறமும் எண்ணிறந்த திருவிளக்கு களை ஏற்றும் திருத்தொண்டினை அயராது செய்து வந்தார்.

ஆலயத்தின் உள்ளும் புறமும் எந்த நேரமும் ஒளிவெள்ளம்தான்.

ஆண்டவனிடம் பக்தி கொள்வதை அறநெறி, ஒளிநெறி, திருநெறி என்பதையே மிக அழுத்த மாக வற்புறுத்தின சைவமும் வைணவமும். இதில் ஒளிநெறியை ஏற்றுக் கொண்டவர்கள் கணம் புல்லரும், கலியநாயனாரும்.

*"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா –*
*நன்புருகி*
*ஞானச்சுடர் விளக் கேற்றினேன்*
*நாரணர்க்கு*
*ஞானத் தமிழ் புரிந்த நான்"*

– பூதத்தாழ்வார்

பூதத்தாழ்வார் முதலிய அடியார்கள், அக இருளை அகற்ற, ஞானத்தமிழ் விளக்கை ஏற்ற, பாசுரங்கள் பாடிப் பரவினர்.

அகஇருளை அவர்கள் விலக்கினால், இவர்கள் புறஇருளை விலக்கி ஆலய தரிசனத்தை அற்புதமாக்கியிருக்கிறார்கள். அரனின் தரிசனத்தை விளக்கம் பெறச் செய்திருக்கிறார்கள்.

கலிய நாயனார் செய்துவரும் விளக்கீடு வழிபாட்டில் மகிழ்ந்த சிவபெருமான், இவரின் தொண்டினது பெருமையை மற்றையோரும் அறிந்து கொள்ள வேண்டும் என்கிற எண்ணமுடன், திருவிளையாடல் ஒன்றை நிகழ்த்தினர்.

செல்வம் கொழித்துக் கொண்டிருக்கும் கலிய நாயனாரின் இல்லத்திலே, வறுமையைத் துணை சேர்த்தார். அவருடைய செல்வம் எல்லாம் குன்றும்படி செய்தார். அவர்தாம் வறுமையை எய்திய பின்னரும் மனம் மாறவும் இல்லை. இறைத் தொண்டினை விடவும் இல்லை.

தமது செக்கார மரபில் உள்ளோரிடம் எண்ணெய் வாங்கி விற்று, அதில் கிடைக்கும் லாபத்தைக் கொண்டு போய் நெய் வாங்கித் தந்து விளக்கிடும் தொண்டை விடாது செய்யலானார்.

சில நாட்கள் ஓட, உறவினர்களும் எண்ணெய் கொடுப்பதை நிறுத்திவிட்டனர். அவர் மனம் வாடிப் போனார். இறைத் தொண்டு தடைப்படுகிறதே என்று மிகவும் மனம் வருந்தினார். எப்படியேனும் திருவிளக்கிடும் பணியைச் செய்தே ஆக வேண்டும் என்று உறுதிபூண்டார். அதற்காகச் செக்காட்டி எண்ணெய் எடுக்கும் தொழில் நடைபெறும் இடங்களுக்குச் சென்று உதவியாய் வேலை செய்து கொடுக்க, அதனால் வரும் கூலியைக் கொண்டு தீபம் ஏற்றலானார்.

இப்படிக் கூலியாளாக நிறையப் பேர் வந்து விட்டமையால், போட்டி ஏற்பட்டு அதுவும் செய்ய முடியாமல் போய்விட்டது.

இதனால் கவலை கொண்டவர், தமது மனைவியை விற்று, அதனால் கிடைக்கும் பணத்தினால் விளக்கீடு செய்யலாம் என்று முயற்சி செய்தார். இவரது மனைவியை வாங்குவார் எவரும் இன்மையால் நொந்து போய்விட்டார்.

ஆலயத்தை அடைந்து திருவிளக்கு ஏற்றும் சமயத்திலே, திருவிளக்குப் போட முடியாமல் போய் விட்டால் தான் இறந்துவிட வேண்டும் என்று முடிவு பண்ணிவிட்டார்.

திரியிட்ட அகல்களைப் பரவலாக வைத்து எண்ணெய்க்குப் பதிலாகத் தமது இரத்தத்தை நிரப்பி எரிக்கும் பொருட்டு, ஆயுதம் கொண்டு கழுத்தை அரிந்தார்.

இதுபோதும் இவரின் பக்திமையைக் காட்ட என்று எண்ணி அரனார், அவரின் கையைப் பற்றிப் பிடித்து அவருக்கு முன்னே இடபத்தின் மீது அமர்ந்திருக்கும் தமது கோலத்தைக் காட்டி அருளினார்.

தான்பட்ட பாட்டிற்கெல்லாம் முக்தி கிடைத்து விட்டதாய் எண்ணி அரனைச் சேவித்தார். அரன், கலிய நாயனாரைத் தமது திருவடியில் சேர்த்துக் கொண்டார். விளக்கீடு செய்த கலிய நாயனாருக்கு வீடு பேறு சித்தித்தது.

முக்திநெறி எய்த எத்தனையோ அறவழிகள்! அவற்றில் திருவிளக்கீடும் ஒன்றாகும் என்பதை மெய்ப்பித்தவர்கள் கணம்புல்லரும், கலிய நாயனாரும்.

எல்லாவற்றிற்கும் ஆதார சுருதியாய், நல்லதொரு வழிகாட்டியாய் இந்துசமயம் அமைந்துள்ளது என்பது மிகையல்ல.

*"தோரண வீதியும் தோமறு கோட்டியும்*
*பூரண கும்பமும் பொலம்பாலிகைகளும்*
*பாவை விளக்கும் ..... சேர்த்து மின்"*

– விழாவறை காதை

இந்திர விழா எடுத்தற் பொருட்டாய் இவையெல்லாம் செய்யப்படுகின்றன என்கிறார் மணிமேகலை பாடிய சாத்தனார்.

பௌத்த சமயக் காப்பியம் இது. இங்கேயும் விழா எடுக்கும் போதில் 'பாவை விளக்குகள்' ஏற்றப்படுகின்றன என்று பாடுவதன் மூலம் வழிபாட்டில் ஒளிவிளக்குகள் ஏற்றி வைத்தல் என்கிற இந்துசமய மரபைப் பின்பற்றி, மாறுபட்ட சமயங்களும் ஏற்றுச் செய்து வருகின்றன என்பது தெளிவாகிறது.

இருளை விரட்டும் விளக்கீடு செய்தல் உயர்வினும் உயர்வு என்பதாலேயே, தமது உயிரைக் கொடுத்தேனும் விளக்கேற்ற வேண்டும் என்கிற உறுதியைக் கணம் புல்லரும், கலிய நாயனாரும் உலகிற்குக் காட்டி, மீண்டும் பிறவாப் பெருநிலையை எய்தினர்.

தீப ஒளியின் முக்கியத்துவத்தைச் சொல்லவே, தீபாவளித் திருநாளும், திருக்கார்த்திகைத் திருநாளும் கொண்டாடப்பட்டு வருகின்றன. ●

கட்டுரை

# கம்பூர் ஊராட்சி
# இளைஞர்களின் சாதனை!

டாக்டர் க.பழனித்துரை



கிராமசபை எந்த வகையிலும் லோக்சபைக்குக் குறைவானது அல்ல. இதுவும் அரசியல் சாசனத்தால் உருவாக்கப்பட்டதுதான். அதற்குச் சட்டத்தின் மூலம் தந்த அதிகாரங்களை வைத்து ஒரு கிராம சபை முடிவு செய்துவிட்டால் அதை யாரும் மாற்ற இயலாது. இந்தக் கருத்தைக் கூறியது உச்சநீதி மன்றம்.

யானையின் பலம் யானைக்குத் தெரியாததால்தான் யானைப்பாகன் ஒரு சிறிய கைத்தடியை வைத்து யானையை ஆட்சி செய்கிறான். அதே போல்தான் மக்களாட்சியில் மக்களுக்கு இருக்கும் அதிகாரத்தை மக்கள் புரிந்து கொள்ளாமல் அறியாமையில் மூழ்கி இருக்கும் வரை யார் வேண்டுமாயினும் மக்களைக் கோலோச்சலாம்; மக்கள் மேல் ஆட்சி செய்யலாம்; ஆதிக்கம் செய்யலாம்.

இந்திய மக்களாட்சியில் கிராம சபை என்பது ஒரு மிக முக்கியப் பங்கை கிராம மக்களின் வாழ்க்கையில் ஆற்றிக் கொண்டிருக்கிறது. ஒட்டுமொத்த அரசுத் துறைகளை மக்களுக்குக் கடமைப்படுத்தவும், மக்களை ஆட்சியிலும், முன்னேற்றச் செயல்பாடுகளிலும் பங்கேற்க வைக்கவும் உருவாக்கப்பட்டதுதான் கிராம சபை.

அத்துடன் மக்கள் கிராம சபையில் பங்கேற்பதன் மூலம் அதிகாரப்படுத்தப்பட வேண்டும் என்பதற்காகவும் மக்களாட்சிப் பண்புகளை மக்கள் மத்தியில் வளர்த்தெடுக்கப்பட வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் உருவாக்கப்பட்ட கிராம சபையை, மதுரை மாவட்டத்திலுள்ள கம்பூர் ஊராட்சியிலுள்ள ஒருசில இளைஞர்களின் பங்களிப்பால் மக்களிடம் – குறிப்பாக ஏழைப் பெண்களிடமும் இளைஞர்களிடமும் மிகப் பெரிய மாற்றத்தை உருவாக்கியது. அந்த அளவிற்கு மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்தி, மக்களை கிராமசபைக்கு வர வைத்து விட்டனர்.

இது வரலாற்று நிகழ்வாக புது டெல்லி வரை ஊடகங்கள் மூலம் சென்றது. இதற்குப் பின்னணியில் ஓர் இளைஞர் பட்டாளமே இயங்கியிருப்பது இந்த கிராம சபைக் கூட்டத்திற்குப் பிறகுதான் தெரியவந்தது. கடந்த இரண்டு ஆண்டுக்காலம் இந்த





இளைஞர்கள் மிகப்பெரிய உத்வேகத்துடன் இதற்காகத் தன்னலமற்றுத் தியாகச் சிந்தனையுடன் உழைத்து, மக்களின் நம்பிக்கையைப் பெற்றுச் செயல்பட்டுள்ளனர்.

எப்படி திடீர் என இந்த இளைஞர்கள் இப்படிப்பட்ட பணிகளில் இறங்கினர் என்பது பலருக்கும் புதிர். இவர்களின் ஏக்கத்திற்கும், தாகத்திற்கும் தீனி போட்ட இடம் ஜல்லிக்கட்டுப் போராட்டம். ஜல்லிக்கட்டுப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த போதுதான் இவர்கள் இந்த உத்வேகத்தைப் பெற்று, ஊர் திரும்பி மக்களைச் சுயாட்சிக்குத் தயார் செய்வது என்ற உறுதியுடன் இரண்டு ஆண்டுகள் முயற்சி செய்து, உலகம் வியக்கும் வண்ணம் கிராம சபையைத் துடிப்புள்ள ஓர் ஆளுகை அமைப்பாக மாற்றி வருகின்றனர். அவர்களின் செயல்பாடுகள் மிகப் பெரிய சவால்களை எதிர்நோக்கியுள்ளன.

இந்த இளைஞர்கள் சாதாரணமாக ஓர் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் மட்டுமே செயல்பட்டதாகத் தெரியவில்லை. பக்குவப்பட்ட நிலையில், உயர் தர்ம நெறிகளுடன், உயர்ந்த புரிதலுடன், தொலைநோக்குப் பார்வையில் இந்தச் செயல்பாட்டில் இறங்கியுள்ளனர் என்பது தெரியவந்தது.

பொதுவாகத் தமிழகத்தில் சமீப காலமாகக் கிராமசபைக் கூட்டம் ஒரு சடங்குச் சபையாக மாறி வருகிறது. அத்துடன் கடந்த இரண்டாண்டுக் காலமாகப் பஞ்சாயத்துக்களே இல்லாத நிலையில், அந்தச் சடங்கும் நீர்த்துப் போகும் நிலைக்கு வந்து கொண்டிருக்கிறது.

இந்தச் சூழலில், கடந்த அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி மதுரை மாவட்டத்தில் கொட்டாம்பட்டி ஒன்றியத்திலுள்ள கம்பூர் பஞ்சாயத்தில் நடத்திய கிராம சபை, ஊடகங்களின் கவனத்தை ஈர்த்தது. அப்படி என்ன அங்கு நடந்தது?

கிராம சபையில் மிகப் பெரும் கூட்டம் கூடியது. 700 பேருக்கு மேல் கூடினார்கள். கிராம சபை காலை 10.30 மணிக்குத் தொடங்கி 4 மணி வரை மிகப் பெரிய விவாதங்களுடன் அமைதியாக ஆரவாரம் இன்றி நடத்தினார்கள். கேள்விக் கணைகளால் அரசு அதிகாரிகளைத் திக்குமுக்காட வைத்தனர்.

நான்காண்டுக் காலத்தில் ஆறு கோடி ரூபாய் செலவழித்ததாகக் கணக்கெழுதியிருந்ததை ஒவ்வொன்றாகக் கேள்வி கேட்டு யாருக்காக, எங்கு, எதற்கு, எப்போது செலவழித்தீர்கள் என்று கேட்டு முறையான ஓர் ஆய்வு மேற்கொண்டு உண்மையைக் கண்டுபிடிக்க மாவட்ட ஆட்சித் தலைவரை வேண்டிக் கொண்டனர்.

செலவழித்த மொத்தத் தொகை பற்றி இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? மத்திய அரசின் பஞ்சாயத்துத்துறை வலைத்தளத்தில் ஒவ்வொரு ஊராட்சியின் வரவு – செலவுப் புள்ளி விபரங்கள், பிரியா மென்பொருள் மூலமாகப் பதிவு செய்து வைத்துள்ளனர். அந்த வலைத்தளத்தில் பதிவிறக்கம் செய்து மக்களிடம் காண்பித்தார்கள் ஒரு சில இளைஞர்கள். தயாரிப்புடன் இறங்கியிருக்கிறார்கள் என்பது அவர்களின் செயல்பாடுகளில் தெரிகின்றன.

அரசியல் சாசனம், பஞ்சாயத்து அரசாங்கத்தின் சட்டம், அரசு தரும் திட்டங்கள், அரசு ஆணைகள் என அத்தனையும் படித்துப் புரிந்து கொண்டு, மக்களாட்சியில் இருக்கும் வாய்ப்புக்கள் அனைத்தையும் புரிந்து, ஒரு மிகப் பெரிய மக்கள் தயாரிப்பைச் செய்திருக்கின்றனர் அந்தக் கிராமத்தில்.

கூட்டத்தைக் கூட்டுவதில் மட்டும் அவர்கள் ஆர்வம் கொள்ளவில்லை. கூட்டத்தில் அரசுடன் ஒரு பேச்சு வார்த்தை அமைதியான வழியில்,

அறவழியில் நடத்திட மக்களைத் தயார் செய்ததுதான் அனைவரையும் ஆச்சரியப்பட வைத்துள்ளது. இதில் இந்த இளைஞர்கள் மிக ஆழமாக கிராம மக்களின் மனோபாவம், அரசு அதிகாரிகளின் அணுகுமுறை இவற்றை நன்கு உணர்ந்து இதற்கு ஏற்றாற்போல் யுக்திகளை அமைத்துச் செயல்பட்டதுதான் இந்தக் கிராமசபைக்கு வெற்றியைத் தேடித் தந்துள்ளது.

ஏழை மக்களின் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட வேண்டும். அது இந்தக் கிராம சபை மூலமாக, இந்த இளைஞர்களின் உதவியுடன் நடக்கும் என்பதை அவர்கள் உணர வேண்டும். அப்படி உணர்ந்தால்தான் கிராம சபைக்கும் வருவார்கள், இந்த இளைஞர் கூறுவதற்கும் செவி சாய்ப்பார்கள். இதைச் செய்ய வேண்டுமானால், அரசு அதிகாரிகளுக்கு ஒரு செய்தியை மிகத் தெளிவாகத் தந்திட வேண்டும் என இந்த இளைஞர்கள் உறுதியுடன் இருந்தார்கள்.

பொதுமக்களுக்கு அரசாங்கப் பணிகள் பற்றியும், பஞ்சாயத்துச் செயல்பாடுகள் பற்றியும் புரிதலும் தெளிவும் ஏற்பட்டுவிட்டது. அதுமட்டுமல்ல, மக்கள் கேள்வி கேட்கக் கற்றுக் கொண்டார்கள், ஒற்றுமையாக இருக்கின்றார்கள், சாதியப் பிரிவினையைக் கடந்து விட்டார்கள், அரசியல்கட்சி என்ற பேதத்தைத் தாண்டி எங்கள் ஊர் நலன், எங்கள் நலன் என்ற உணர்வு நிலைக்கு வந்து விட்டார்கள் என்ற செய்தியைத் தந்து விட்டார்கள்.

இதன் விளைவு, அதிகாரிகளும் இனிமேல் இந்தக் கிராமத்தில் மக்கள் பணத்தை எந்த விதத்திலும் நாம் எடுக்க முடியாது, மக்களைச் சமாளிக்க இந்த ஊரில் இந்தப் பண்பட்ட இளைஞர்களுடன் பணி செய்வதுதான் ஒரே வழி என முடிவு செய்ததன் விளைவுதான், அந்த ஊரில் பணி செய்த பஞ்சாயத்துச் செயலரை உடனே மாற்றிவிட்டுப் புதியவர் ஒருவரை நியமித்துள்ளனர். இவர் அனுதினமும் மக்களுடன் தொடர்பில் இருக்கக் கூடியவர், மக்களுக்கு இணக்கமாகச் செயல்பட்டு எல்லாத் தரப்பு மக்களின் நம்பிக்கையையும் பெற்று இயங்கி வருகிறார்.

இந்தச் சூழலில், ஜனவரி 26 –ஆம் தேதி கிராமசபைக் கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தைப் பார்வையிடப் பல ஊடக நண்பர்கள் வந்தார்கள். பல நிறுவனங்கள், அமைப்புக்களைச் சார்ந்தவர்களும் வந்திருந்தார்கள். நானும் அங்குச் சென்றேன். அங்குச் சென்றவுடன் மிகப்பெரிய கூட்டம் கூடியிருந்தது. காவலர்கள் பலர் அங்கிருப்பதைக் காணமுடிந்தது. அரசுத்துறைப் பணியாளர்கள் பலர் வந்திருந்தனர். காவல் துறையில் மப்டியில் பலர் அங்கு வந்துவிட்டனர்.

ஏனென்றால், அந்த இளைஞர்கள் பெருமளவு வாட்ஸ் அப்பிலும் குறுஞ்செய்தி அனுப்பும் முறையிலும் மக்களைத் திரட்டிக் கொண்டிருந்தார்கள். இதற்காக இந்த இளைஞர்கள் ஏழு கிராமங்களுக்கும் ஒலிபெருக்கி வைத்து ‘கிராமசபைக்கு வாருங்கள்’ என அழைத்த வண்ணம் இருந்தனர். அங்கு வந்தவர்களுக்கு மதியம் 1 மணிக்கு மோர் கொடுத்தனர். கிராம சபை முடிந்த பிறகு 2.30 மணிக்கு எளிய உணவும் அத்தனை பேருக்கும் கொடுத்தனர்.

அந்தக் கிராமசபையைத் தலைமை தாங்கி நடத்தியது ஊர் நாட்டாமைதான். 11.30 மணிக்கு ஆரம்பித்த கிராமசபைக் கூட்டம் 2 மணி வரை அமைதியாகவே நடைபெற்றது. அந்தக் கிராமசபைக் கூட்டத்தில் நடந்தவை பல செய்திகளை நமக்குத் தந்துள்ளன.



கிராமசபை வலுப்பட வேண்டும் என்றால் அரசு மட்டும் முயன்று நடை பெறாது. அரசுடன் மக்கள் கைகோர்க்க வேண்டும். அரசு தரும் நிதியில் ஒரு கிராமசபையைக் கூட்ட முடியாது. அந்தக் கூட்ட அறிவிப்புக்கு வரும் ஏழைகள் தங்கள் ஒரு நாள் ஊதியத்தை விட்டு வருகின்றனர். அவர்கள் மட்டும் வருவது கிடையாது. அவர்களுடன் அவர்கள் குழந்தைகளும் வருகின் றார்கள். இவர்களுக்கு உணவு ஏற்பாடு, குடிநீர், தேநீர் என அனைத்தும் ஒரு கோவில் திருவிழாவிற்கு வருபவர் களுக்கு அன்னதானம் வழங்குவது போல் வழங்கினார்கள்.

இதற்கான செலவை இந்த இளைஞர் குழு ஏற்றுச் செய்ததன் விளைவு இவ்வளவு பெரிய கூட்டம். அடுத்து, தங்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வு கிராம சபை மூலம் கிடைக்கும், அதற்குக் கிராமசபையைப் பயன்படுத்த வேண்டும் என்ற உணர்வை மக்கள் மத்தியில் ஏற்படுத்த வேண்டும்.

கிராமசபை என்பது அரசாங்கத்தை மக்களுக்குக் கடமைப்பட்டதாக மாற்றுவதற்குக் கிடைத்த ஓர் இடம். எனவே, அதைப் பயன்படுத்துவதன் மூலம் அரசுத்துறைகளின் திட்டங்களை முழுமையாகக் கிராம மக்களின் மேம் பாட்டிற்குப் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்பதை மக்களிடம் புரிய வைத்துவிட்டால் மக்கள் பங்களிப்பைச் செய்வார்கள்.

கிராமசபையில் பங்கெடுப்பதன் மூலம் எந்தெந்தத் துறைகளின் மூலம் என்னென்ன திட்டங்கள் மக்களுக்காக அந்தக் கிராமங்களில் நிறைவேற்றப் பட்டன, அந்தத் திட்டங்கள் முறையாக நிறைவேற்றப்பட்டனவா என்று கண் காணிக்க முடியும். அதேபோல் கிராமப் பஞ்சாயத்து செய்யும் பணிகள், அவற் றிற்கான செலவு இவற்றைக் கிராம சபையின் மூலம் தணிக்கை செய்ய முடியும்.

இதனால் மக்கள் பணத்தை ஊழல் செய்ய முடியாமல் செய்துவிடலாம் என்பதை மக்களுக்குத் தெரியப்படுத்தி னால், மக்கள் கிராம சபையைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்று பங்கேற்க முன்வருவார்கள்.

கிராமசபை என்பது மனுச் செய்யும் இடமில்லை. முடிவுகள் எடுக்கும் அரசி யல் சாசனச் சட்டத்தால் உருவாக்கப் பட்ட அமைப்பு. இங்கு அரசிடமிருந்து தகவல்களைப் பெறவும், கிராம வளர்ச் சிக்கான திட்டங்களை உருவாக்கி அனுமதியளிக்கவும், நிதி நிலை அறிக் கைக்கு ஒப்புதல் அளிக்கவும், செய்த செயல்பாடுகளுக்குப் பஞ்சாயத்துத் தந்த தணிக்கை அறிக்கையை ஆராய்ந்து விசாரித்து அனுமதி யளிக்கும் அதிகாரம் பெற்ற சபை.

எனவே, கிராமசபைக்குச் சென்றால் மேற்சொன்ன அனைத்தையும் விவாதிக்க நமக்கும் ஒரு வாய்ப்பு என்று புரிந்துவிட்டால் கிராமசபை வலுப் பட்டுவிடும். அதிகாரத்தில் உள்ளோ ரைக் கேள்வி கேட்கவும், விவாதம் செய் யவும், அரசுத்துறைகளிடம் விளக்கம் பெறவும் கிராமசபை ஒரு நல்ல வாய்ப்பு என்பது புரிந்து விட்டால், மிக எளிதாக மக்கள் கூடுவார்கள்.

கிராமத்தில் மக்கள் சாதியின் பெய ரால், மதத்தின் பெயரால், கட்சியின் பெயரால் பிரிந்து கிடப்பதன் காரணத் தால் கிராமம் சுரண்டப்படுகிறது. கிராமத்துக்காரர்களை வைத்துதான் கிராம வளர்ச்சி, கிராமத்தில் வசிப் போரின் ஒட்டு மொத்த வளர்ச்சி என் பது அனைவருக்கும் புரிந்துவிட்டால் கிராம மக்கள் சாதியையும், மதத்தையும், கட்சியையும் கிராம வளர்ச்சிக்காகக் கடந்து விடுவார்கள்.

மேற்கூறிய அனைத்து அம்சங்களை யும் கம்பூர் கிராமசபையில் எம்மால் பார்க்க முடிந்தது. இதற்கு அந்தக் கிராம இளைஞர்கள் எடுத்த பெருமுயற்சிதான் மிக முக்கியக் காரணம். ஒரு வித்தியாச மான இளைஞர்களாக இவர்கள் இருந் தார்கள் என்பதுதான் நமக்கு மிகப் பெரிய நம்பிக்கையை ஊட்டியது. காந்தி வேண்டிய கிராமச்சேவகர் களாகவும் விவேகானந்தர் கேட்ட வீர இளைஞர்களாகவும் அந்த இளைஞர் கள் எனக்குக் காட்சியளித்தனர். ●

கட்டுரை



கவிஞன்பன் பாரி

# தமிழ்த் தொண்டர் ஐராவதம் மகாதேவன்

அறிஞர் ஐராவதம் மகாதேவன் மறைவை ஒட்டிச் சில நாள்களாக அச்சு ஊடகங்களில் அவரது படத்தைக் கவனித்திருக்கலாம். கட்டடத்தில் நிற்பதைப் போல் சாரம் கட்டி ஏறி மலைப்பாறையில் நிற்பார். பெயிண்ட்டரைப் போல கையில் ஒரு பிரஷ்.

இதுவா தொல்லியல் அறிஞரின் கோலம் என்று கேட்க நினைத்திருந்தால், அதற்கு விடை காணக் காலத்தில் கொஞ்சம் பின்னோக்கிப் போக வேண்டும். ஏறத்தாழ 200 ஆண்டுக் கால மாகவே பூகோளம் மற்றும் மானுடவியல் அறிஞர் களைக் குடைந்து கொண்டிருந்த முக்கியமான கேள்வி – மனித குல வளர்ச்சியில் எது மூத்த நாகரிகம் என்பது.



இதற்கு, சர். ஜான் மார்ஷல் என்ற தொல்லியல் அறிஞர் 1920–இல் விடை கண்டார். அவர் ஒரு வெள் ளையர். பல்வேறு நாட்டு அறிஞர் களும் ஐயங்களை எழுப்பிக் கடைசி யில் அதை ஒப்புக் கொண்டார்கள். அந்த விடை : உலகில் மூத்தது – சிந்து சமவெளி நாகரிகம். அடுத்த கேள்வி எழுந்தது. சமவெளி என்றால், அதென்ன மைதானமா? ஊரா? மாவட்டமா? எந்தப் பகுதி?

அவரே விடை தந்தார் : "ஊருமல்ல, நாடு மல்ல. மேற்கே ஈரானிலிருந்து கிழக்கே யமுனைக் கரை வரையும், வடக்கே இமயத்திலிருந்து தெற்கே மராட்டிய மாநிலம் வரையுமான சுமார் 10 லட்சம் சதுரக் கிலோ மீட்டர் பரப்பளவு கொண்டது சிந்து சமவெளி.'' இது கீழடி ஆய்வுக்கு முந்தைய கணக்கு!

அகழ்வாராய்ச்சி செய்து கண்ட றியப்பட்ட நூற்றுக்கணக்கான நகரங் களில் மொகஞ்சதாரோ, ஹரப்பா முக்கிய மானவை. மீண்டும் கேள்விகள் எழுத் தொடங் கின. அங்கே வாழ்ந்த மக்கள் எந்த இனம்? அவர்கள் பேசிய மொழி எது? அவர்கள் எழுத்தின் வரி வடிவம் என்ன? அம்மக்களின் கொடிவழி உறவு இப்போது எந்த நாட்டில்?

இதெல்லாம் சாதாரணமான கேள்வி யில்லையே. ஒரு மனதாக எல்லோரும் ஒப்புக் கொள்ளும் பதில் இதற்கு உடனடியாகக் கிடைத்து விடுமா?

ஆனால், பெரும்பான்மையோரை ஒப்புக் கொள்ள வைக்கும் ஒரு பதிலை, சுமார் 40 ஆண்டுக்காலம் ஆய்ந்து 1000 பக்கங்கள் தாண் டிய நூலாக எழுதி, "Early Tamil Epigraphy" என்ற பெயரில் உலகிற்கு அளித்தார் ஐராவதம்.

7105 மொழிகள் பேசப்படும் இந்த உலகில், இந்தியாவில் மட்டும் 880 மொழிகள் என்றும், இவற்றில் பெரும்பாலானவை வரிவடிவம் இல்லாதவை என்றும் 25 ஆண்டு களுக்கு முந்தைய சர்வே ஒன்று தெரி விக்கிறது.

வட இந்தியாவின் மூத்த மொழி பிராகிருதம் என்றால், தென்னிந் தியாவில் தமிழ். பிராகிருதமும்,



சமஸ்கிருதமும் ஏறத்தாழ ஒன்றுதான். பிராகிருதம் பேச்சுமொழி! சமஸ்கிருதம் செய்யுள் மொழி அல்லது வழிபாட்டு மொழி. பொதுவாக ஒரு நாட் டின் அரசியல், பண்பாடு மற்றும் மொழி வர லாற்றை அறியவும், தொன்மங்களை உணரவும் ஐந்து முக்கிய ஆதாரங்கள் தேவை.

1. கல்வெட்டுகள், 2. செப்பேடுகள், 3. ஓலைச் சுவடிகள், 4. வெளிநாட்டுப் பயணிகளின் குறிப்பு கள், 5. மன்னர்கள் தங்களைப் பற்றித் தாங்களே எழுதிக்கொள்ளும் மெய்க்கீர்த்திகள்.

முதல்நிலை ஆதாரமான கல்வெட்டுத் தரவு கள் வடக்கில் நிறைய உண்டு. அதற்குக் காரணம் அசோகச் சக்கரவர்த்தி. அவர்தான் சாலையோரம் மரங்களை நட்டதோடு, சரித்திரம் பேசக் கல்வெட்டுகளையும் அமைக்கத் தொடங்கியவர். அவரது நிர்வாக மொழி பிராகிருதம். அதனால், கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்தே வட இந்திய வரலாற்றின்மீது வெளிச்சம் விழத் தொடங்கி விட்டது.

தெற்கிலோ, கிறிஸ்துவுக்கு முன்பிருந்து கி.பி. 6–ஆம் நூற்றாண்டு வரை போதுமான கல்வெட்டுத் தரவுகள் இல்லை. அந்த நூற்றாண்டுகளைத் தெளிவாக முகம் பார்க்க முடியாமல்தான் நம்மவர்கள் இருண்ட காலம் என்றார்கள். மற்றபடி அந்தக் காலத்தவர்கள் யாரும் இருளைப் பரப்பவில்லை. இன்னும் சொல் லப்போனால், தமிழுக்கு யாப்பிலக்கண விருத்தி உரைகளையே அந்தக் களப்பிரர் காலத்துச் சமணர்கள்தான் தந்தார்கள்.

ஆனால், அந்த நூற்றாண்டுகளின் நிகழ்வு களைப் பேசத்தான் கல்வெட்டுத் தரவுகள் போது மானதாக இல்லை. இந்த முன்கதைச் சுருக்கத்தை அறியாமல் ஐராவதத்தின் களப்பணி எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதைப் புரிந்து கொள்ள முடியாது.

மலைப்பாறைகளிலும் குகைகளிலும் ஏதோ புரியாத மொழியில் சமண, பௌத்த மதத் துறவிகள் பொறித்த சித்திரக் குறிகளைத் தவிர, இங்கே கல்வெட்டுகள் ஏதுமில்லை என்று ஒதுங்கியிருந்தார்களே, அந்தச் சித்திரக் குறிகள்தாம் ‘தமிழ்ப் பிராமி’ என்று அறிவியல் பூர்வமாக அறிந்து சொன்னார் ஐராவதம்.

பிராமி என்றால், எழுத்தின் தொடக்க கால வரிவடிவம். இன்றைய வரிவடிவமும் அதில் அடக்கம். கல்வெட்டுகள் இல்லாத குறையைத் தமிழகத்தின் மலைப்பாறைகளும், குகைகளும் தீர்த்து வைத்தன. கல்வெட்டுகளைக்கூடத் தூக்கி வந்து அருங்காட்சியகத்திலோ, ஆய்வுக் கூடத்திலோ வைத்து ஆராய முடியும். ஆனால், குகைகளைத் தூக்கிக் கொண்டு வர முடியுமா?

மைப்படி எடுத்தல், மாவு பூசிப்பார்த்தல் என்று எத்தனையோ ஆய்வு முறைகளுக்காக அங்கேயே போயாக வேண்டும். அதற்காகத்தான் மலையில் சாரம் கட்டி ஏறினார் மகாதேவன். அவருக்கு முந்தியே பல அறிஞர்கள் குகைகளை ஆய்ந்து இவருக்குப் பாதை போட்டுக் கொடுத்தார்கள் என்பது உண்மைதான்.

மாட்டு வண்டியில் ஏணியோடும், கயிற் றோடும் அலைந்து மலைக் குகைகளை ஆய்ந்து, அதில் உள்ள குறிகள் தமிழ்ப் பிராமியாய் இருக்க லாம் என்றும், தமிழ் இலக்கணம் அதில் உண்டு என்றும், 1924–இல் அறிக்கை தந்தவர் கே.வி. சுப்பிரமணிய ஐயர்.

விழுப்புரம் அருகே கீழ்வாலை என்னும்


மொகஞ்சதாரோ – ஹரப்பா

கிராமத்தின் குகையில் ழ, ள, ற, ன ஆகிய எழுத் துக்கள் உள்ளன என்றும், அத்தோடு சிந்துவெளி எழுத்துப்படங்கள் அங்கே செவ்வண்ணத்தில் வரையப்பட்டுள்ளன என்றும் கண்டுரைத்தவர் தமிழறிஞர் பி.எல். சாமி.

‘பழந்தமிழ்க் கல்வெட்டுகள்’ என்ற நூலை 1938–இல் வெளியிட்டு, ஆந்திராவில் பட்டிப்பு ரோல் என்ற ஊரில் உள்ள குகையிலும் இங்குள்ள குகையிலும் ஒரே மாதிரி எழுத்துக் குறிகள் என்று கண்டவர் தி.நா. சுப்பிரமணிய ஐயர். இவர்களை யெல்லாம்விட, ஐராவதம் பரவலான கவனம் பெற்றதற்குப் பல காரணங்கள் உண்டு.

சிந்துவெளி எழுத்துக் குறிகளுக்கும் தமிழகக் குகை வரிகளுக்கும் தொடர்பு உண்டு. அங்குள்ளதும் தமிழ்ப்பிராமி, இங்குள்ளதும்

தமிழ்ப்பிராமி. இவை இரண்டும் ஒன்றே என்று உலகளாவிய ஆய்வுக்குப் புது வாசலைத் திறந்து விட்டவர் ஐராவதம் தான். அதை அறிவியல் பூர்வமாக நிரூபிக்கும் பணியிலும் இறங்கினார். இது ஆய்வுலகில் பல அதிர்வுகளைக் கிளப்பியது.

1982 முதல் 10 ஆண்டுகளில் மட்டும் சிந்துவெளி முத்திரைகள் 3200–ஐப் படித்து ஆதிகால வரிவடிவத்தில் உள்ள தமிழைப் புரிந்து பொருள் கண்டது மட்டுமல்லாமல், மற்றவர்கள் புரிந்து கொள்ள வழிகாட்டிக் குறிப்புகளையும் எழுதினார். இதை 1992 செப்டம்பர் மாதம் இதழ் ஒன்றுக்கு அளித்த நேர்காணலில் தெரிவித்துள்ளார்.


அசோகர்

இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் திராவிட இயக்கங்களின் எழுச்சியும் இவருக்கு ஊக்கம் அளித்திருக்கலாம். முந்தைய அறிஞர்களுக்கு அது வாய்க்கவில்லை.

சிந்துவெளித் தமிழ்ப்பிராமியில் அதிகமாக ‘ழ’கரம் உள்ள பெயர்ச்சொற்கள் வருவதைக் கண்டுபிடித்தார். அந்நாகரிகம் நம்முடையது என்பதற்கு ஐராவதம் தந்த முக்கியத் தரவு அது. வேறெந்த மொழியிலும் சிறப்பு ‘ழ’கரம் இல்லையே. அழகன், வழுதி, நன்னன், கடலன், சாத்தன், மாசாத்துவான், நன்னத்து அழகன் முதலிய பெயர்கள் அடிக்கடி அந்த முத்திரைகளில் வருவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஐராவதம் அளித்துள்ள கடலன், சாத்தன் பெயர்களைக் குறித்து அறிஞர் இரா. மதிவாணனும் பல தரவுகளை அளித்துள்ளார். கடலன் – கப்பல்களில் செல்லும் வணிகர்களின் கடற்காவலன். சாத்தன் – பெரு வணிகன். இன்றும் தென்மாவட்டங்களில் பெருவாரியாக உள்ள வணிக மக்களிடையே சாத்தன், சாத்தையா, சாத்தப்பன் என்ற பெயர்கள் உண்டு.

கடலன் ஊர்தான் இன்றைய கடலூர் என்கிறார் ஐயா மதிவாணன். நெல்லைச் சீமையில் மல்லன் கடலனூரை, மல்லன் சமுத்திரமாய் வடமொழியில் மாற்றிவிட்டார்கள். அம்பா சமுத்திரமும் அப்படி மாற்றப்பட்ட கடலனூர்தான்.

சாத்தன் எனும் தூய தமிழ்ச்சொல்லை வைத்துக்கொண்டு சமஸ்கிருதப் பற்றாளர்கள் செய்த பம்மாத்து வேலைகளை எதிர்கொள்ளத்தான் ஐராவதம் முதலிய தமிழ்த்தொண்டர்கள் தமிழின் தொன்மை தேடி – வேர்ச்சொல் தேடி ஓடினார்கள்.

சகல கலைகளும் கற்றவன் சாஸ்திரி. அந்த வடசொல்தான் ‘சாஸ்திரன்’ என்றாகி, ‘சாத்திரன்’ என மாறிக் கடைசியில் ‘சாத்தன்’ எனத் திரிந்து நிற்கிறதாம்.

மணிமேகலைக் காப்பியம் எழுதியவர் சீத்தலைச் சாத்தன் அல்ல – சீத்தலைச் சாஸ்திரி என்றார்கள். அதுமட்டுமல்ல, சாத்தனார் என்ற பட்டத்தோடு சங்க காலத்தில் 32 புலவர்கள் வாழ்ந்தார்கள் என்று எட்டுத்தொகை நூல்கள் வழியாகத் தெரிய வருகிறதே, அந்த 32 பேரும் சங்க காலத்துச் சாஸ்திரிகளாம்.

இந்தச் சங்ககால சாஸ்திரிகளை எல்லாம் கண்டு பிடித்தவர் ஒரு சிலப்பதிகார ஆய்வாளர். பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்த அவர் பெயர் வெ. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார். 1946–இல் அவர் எழுதி வெளியிட்ட சிலப்பதிகார ஆராய்ச்சியை வாசித்தபோதுதான் இந்தக் கண்டுபிடிப்புகளை எல்லாம் அறிய முடிந்தது.

கண்ணகியின் தந்தை பெயர் மாநாய்கன் அல்ல – மாநாவிகன். நாவாய் என்றால் கப்பல். நாவாய்த் தேவன் என்ற பெயர் சிந்துவெளி முத்திரைகளில் வருவதாக அறிஞர் மதிவாணன் குறிப்பிடுகிறார்.

நாவாய் உடையவன் என்ற பொருளில்தான் மாநாவிகன். பின்னர் இதே நாவாய், நாவிகன் ஆகியதில் ஆங்கிலேயர்கள் ‘நாவி’யை மட்டும் எடுத்து ‘நேவி’ என்று வைத்துக் கொண்டார்கள். கோவலனின் தந்தை மாசாத்துவன். இதுவும் சிந்துவெளிப் பெயர்களில் ஒன்றாய் வருவதாக ஐராவதம் கண்டறிந்துள்ளார்.

சமஸ்கிருதத்தைத் தமிழுக்குத் தாயாக்க முயன்ற காலத்தில் ஐராவதம் அறிவியல் பூர்வமாகத் தமிழின் தொன்மையை நிறுவியது மகத்தான பணி.




1950–களின் இறுதியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கருத்தரங்கம் ஒன்றில் வங்கத்தைச் சேர்ந்த சுனீத்குமார் சட்டர்ஜி என்பவர், சமஸ்கிருதம்தான் தமிழுக்கு மூல மொழி என்றார். அங்கே பேராசிரியராக இருந்த தேவநேயப் பாவாணர் உடனே பொங்கி எழுந்து மறுத்துப் பேசினார். அவருக்கு ஆதரவுக் குரல் கொடுத்தோர் குறைவாகவே இருந்தார்கள்.




நேராகத் தமது அறைக்கு வந்து மளமளவென மறுப்பறிக்கை எழுதி, அங்கே பணியிலிருந்த மணவை முஸ்தபாவை அழைத்து, 'என்ன செய்வாயோ, ஏது செய்வாயோ தெரியாது. நாளைக் காலை இதை அச்சில் ஏற்றிவந்து தர வேண்டும்' எனக்கூறிக் கொடுத்துவிட்டார்.

அதைச் சிரமேற்கொண்டு பறந்த முஸ்தபா, சிதம்பரத்திற்குப் போய் விடிய விடியக் கண் விழித்து அச்சடித்து அறிக்கைப் பிரதிகளை எடுத்து வந்தார். அடுத்த நாள் கருத்தரங்கில் சுனீத்குமார் சட்டர்ஜி உட்பட அனைவருக்கும் அறிக்கைப் பிரதியைப் பாவாணர் விநியோகித்தார்.

தம்மைப் பாவாணர் அவமதித்துவிட்டதாக சுனீத்குமார் புகார் செய்ய, அது தொடர்பாக எழுந்த சர்ச்சையில் 'நான் வளைய மாட்டேன்' என்று சொல்லிப் பணி விலகல் கடிதம் கொடுத்து விட்டு வெளியேறினார் பாவாணர்.

ஐராவதமும் ஒரு கட்டத்தில் தமது எழுத்து நேர்மைக்கும், தமிழ் ஆய்வுப் பணிக்கும் இடைஞ்சலாக இருக்கிறது என்று கூறி, ஐ.ஏ.எஸ். பணியையே தூக்கி எறிந்துவிட்டு விருப்ப ஓய்வில் வந்தவர்தான்.

எந்தத் தமிழ்ச் சொல்லை எடுத்தாலும் அது சமஸ்கிருத முட்டையிலிருந்து பொரிக்கப்பட்ட குஞ்சு என்று சாதிப்பதையே சிலர் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்டவர்கள் மத்தியில் ஐராவதத்தின் தமிழ்த் தொண்டு எப்படி இருந்தது?

தினமணி ஆசிரியராக வந்தபோது தமக்கு உதவும் ஆசிரியர் குழுவில் அப்போதிருந்த வ. ரங்காச்சாரி என்பவர் இதுபற்றி எழுதியிருக்கிறார். 'கமலா' என்று ஆகார ஈற்றில் முடியும் வட சொல்லை 'அம்' விகுதி சேர்த்துக் 'கமலம்' என்று எழுதுகிறோமல்லவா? அன்றைய ரயில்வே அமைச்சர் பெயர் 'கமலாபதி திரிபாதி.' அவரைக் 'கமலபதி' என்றே எழுதச் சொல்வாராம்.

ஆந்திரா, கேரளா, கர்நாடகா என ஆகார ஈற்றில் முடியும் மாநிலப் பெயர்களைக்கூட, அம் விகுதி சேர்த்து ஆந்திரம், கேரளம், கர்நாடகம் எனத் தமிழுக்கு ஏற்பத் திருத்தி எழுதச் செய்திருக்கிறார்.

"நீங்கள் ஆகார ஈற்று வைத்தே எதையும் எழுதி னால், நாளை மரம் என்பதைக் கூட 'மரா' என்றும் குளம் என்பதைக் 'குளா' என்றும் எழுதுவார்கள். அதைப் பார்த்து விட்டுப் பின்னால் வருவோர், மரா என்பது சமஸ்கிருதச் சொல்! அதிலிருந்துதான் மரம் வந்தது, 'குளா' என்பது சமஸ்கிருதச் சொல். அதிலிருந்துதான் குளம் வந்தது என்பார்கள்.

சிறுவர்கள்கூட, 'நாங்கள் மராவில் ஏறி, குளாவில் குளித்து, பழாக்களைத் தின்றோம்' என்று எழுதுவார்கள். இப்படி எல்லாம் தமிழ் சிதையாதிருக்கச் சரியான வழிமுறைகளை ஐராவதம் காட்டியதாக அவருடன் இருந்த ரங்காச்சாரி குறிப்பிடுகிறார்.

இலக்கண விதிகளை எல்லாம் படித்துப் பாடம் நடத்திய தமிழ்ப் பேராசிரியர்கள் செய்ய வேண்டிய பணியை, வேதியியலும் சட்டமும் படித்த இந்திய ஆட்சிப்பணி அதிகாரி செய்தார் என்பது வியப்பு அல்லவா?

கல்வியைத் தாண்டி அரசாங்கப் பணியைத் தாண்டி, தமிழ் அவரை உணர்வால் அணைத்துக் கொண்டது. ஐராவதம் ஐயருக்கு மகனாய்ப் பிறந்த மகாதேவன், தம் பெயரை 'வெள்ளையானை பெரியசாமி' என்றுகூட மாற்றிக்கொள்ள நினைத்தார். ஆனால், ஆவணங்களில் திருத்தம் செய்யும் சிக்கல், கருதி அந்த ஆசையைக் கைவிட்டுவிட்டார்.

உதட்டில் தமிழும் உள்ளத்தில் சமஸ்கிருதமுமாகச் சாத்தனைச் சாஸ்திரியாக்கத் தமிழ்த்துறையின் சம்பளம் பெற்ற ஆச்சார்யார்கள் எங்கே? சிந்துவெளியின் சிறப்பு 'ழ'கரம் கண்டறிந்து தமிழின் தொன்மையை அறிவியல் பூர்வமாகக் காட்டி ஆய்வுக்கு வாசல் திறந்த ஐராவதம் எங்கே?

தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை. இது ஐராவதம் மகாதேவன் என்னும் தமிழ்த் தொண்டருக்கும் பொருந்தும். ●

கட்டுரை

டி.எம். இரத்தினவேல்

# அரியை அரனாக மாற்றிய அகத்தியரும் ஆளுடைய பிள்ளையும்

சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளான சிவனை, கண்ணுதற் பெருங் கடவுளை, ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ் சோதியாய், பிறவா யாக்கைப் பெரியோனாய்ச் சிறப்பித்துக் கூறுவார்கள் நம் சிவனடியார்கள்.

எண்ணற்ற திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் மெய்ப் பொருளை உணர்த்தும்





விதமாகச் சிவனருட் செல்வர்களின் திருமுறைகளும் அமைந்துள்ளன.

மாமுனிவர்களும், மகரிஷிகளும், சித்தர் பெருமக்களும், நாயன்மார்களும் மற்றுமுள்ள சிவனடியார்களும் சைவ சமயத்திற்கு ஏதேனும் ஊறு நேரும் போது, 'வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க' அவ்வப்போது தோன்றி அரும்பாடுபட்டுச் சைவ சமயத்தைக் காத்து வளர்த்தார்கள்.

அந்த நிலையில் அகத்திய மாமுனிவரும், ஆளுடைய பிள்ளை எனப்பட்ட திருஞானசம்பந்தர் பெருமானும் சைவத்தைக் காக்கும் பொருட்டு 'அரி'யை 'அரனா'க மாற்றிச் சிவலிங்க வடிவமாகச் செய்த அற்புத வரலாற்றை இங்குக் காண்போம்.

இமயமலையில் சங்கரனுக்கும் சங்கரிக்கும் திருமணம் நிகழ்ந்தது. அதைக் காண மாமுனிவர்கள், மகரிஷிகள், தேவர்கள், மக்கள் என்று யாவரும் கூடினர். தேசத்தின் வட பாகத்தில் பலர் கூட, அது தாழ்ந்து தென்திசை உயர்ந்தது. சிவபெருமான் அகத்திய முனிவரைக் கூப்பிட்டு 'நீங்கள் தென்திசை செல்லுங்கள். தேசம் சமனமாகும்' என்று கூற, முனிவரும் விந்திய மலை கடந்து பொதிகை மலை அடைந்தார்.

அவர் இறைவனின் திருமணக் காட்சியைக் காணாததால், அதைப்

பார்க்கும்படி அருள வேண்டும் என்று வேண்ட, சிவபெருமானும் 'உங்களுக்குத் திரிகூட மலையில் உள்ள திருக்குற்றா லத்தில் மணக்காட்சி அருள்வோம்' என்றார் – என்கிறது புராணம்.

அகத்தியர் குற்றாலம் வந்து சேர்ந் தார். அந்தக் குற்றாலத்தில் திருமாலுக்கு மட்டுமே ஒரு கோயில் இருக்கின்றது. இம்மண்ணுலகில் இக்கோவிலைத் தவிர, வேறு ஒரு கோவிலும் ஒப்புமை யாகாது என்றெண்ணி, அங்கு வைணவ அந்தணர்கள் அளவற்றவர் நெருக்கமாக இருந்தனர். அவர்கள் உண்மையான நூல்களின் விதியை உணர்ந்திருந்தும் அஞ்ஞானத்தால் தங்கள் சமயத்தை மேலானது என்று சிந்தித்திருந்தனர்.

அவர்கள் சிவனடியாரைப் பார்த் தால் சினந்து சீறித் தம்முன் எதிர்ப் பட்ட நெடுங்காலப் பகைவரைப் போல மிகவும் நிந்தனை செய்து, அவர்களின் முகத்தையும் பாராதவராய், துன் மார்க்கத்தையே தன் மார்க்கமாகக் கொண்டு 'வேதத்தை ஓதுபவர்' என்ற ஒரு சொல்லை மட்டும் தாங்கி தம் சமய ஒழுக்கத்தைத் தாம் மேற்கொண்டு ஒழு காதவராய், அந்த ஊரில் இருந்தனர்.

தமிழை நன்கு ஆய்ந்த அகத்தியர் அந்த வைணவர்களின் தன்மையை உணர்ந்தார். குறுகிய வடிவத்தை யுடைய அகத்திய முனிவர் அவர்களின் செயலை அறிந்து, குற்றாலம் என்ற ஊரின் வழியே சென்று திருமாலின் கோயிலுக்கு முன்னே வந்தார்.

முறைமையுடைய அக்கோயிலில் கூடியிருக்கும் வைணவர்கள் அவரைப் பார்த்துக் கோபத்துடன், "அணியக் கூடாத ருத்ராட்சத்தையும் விபூதியையும் அணிந்துள்ள குள்ள முனியே, நீ பிட்சை ஏற்றுத் திரிந்த சிவனுக்குத் தொண்டனாவாய். அதனால் நீ இங்கு வருவது தகுதியுடையதன்று. நீ கையில் தண்டமும் தாங்கியிருக்கின்றாய். குறுகியவனாயும் உள்ளாய். ஆகவே நீ எம் இறைவரான திருமால் எழுந்தருளி யிருக்கும் இந்தக் கோயிலுக்குள் நுழையாதே, விலகிப் போ!" என்று சப்தமிட்டனர். மேலும் அவர்கள் "நீ இந்தப் பதிக்கு வருவதும் பாவமாகும். இந்தப் பக்கமே வராதே, திரும்பிப் போ, திரும்பிப் போ" என்று ஒருசேரக் கத்தினார்கள்.

அருளால் கடல் போன்றவராகி, அவ்வாறு சென்ற அகத்திய முனிவர், உயிர்க்குள் உயிராக நின்ற சிவபெரு மானை நிந்திக்கின்ற இவர்களின் அஞ் ஞானமான கர்வத்தை, ஆணவத்தை அடியோடு அழிப்பேன் என்று எண்ணி, முன்நாளில் தாம் கற்ற மாயையால், இரசகுளிகையின் புகைபட்ட பொன் போலப் பாகவதரின் – பொய்யான திரு மால் அடியவரின் – வேடம் பூண்டார்.

அகத்திய முனிவர், திருமாலின் அடியவர் போல் தாம் கற்ற மாயத்தால் வடிவம் கொண்டு மறுபடியும் அத் திருமால் கோயில் சென்றார். தொலை வில் அவர் வரும்போதே அவரைக் கண்ட வைணவர்கள் எதிர்கொண்டு அழைத்து அகமும் முகமும் மலர வணங்கி வரவேற்றார்கள். உண்மை யான திருமால் அடியவர் எண் றெண்ணி மகிழ்ந்தார்கள்.

உடனே அகத்தியர், திருமால் இருக்கும் கோயிலை விரைந்து அணுகி, அங்குள்ள வைணவர் கூட்டத்துடன் வலம்வந்து, திருமாலின் அடிகளை வணங்கித் துதித்துப் பக்கத்தே நின்ற அடியவரைப் பார்த்து, "இந்த மூர்த்தி யைத் தரிசிக்க விருப்பம் கொண்டோம். திருமஞ்சனம் முதலியவற்றை விரை வாகக் கொண்டு வாருங்கள்" என்று அகத்தியர் சொன்னார்.

உடனே வைணவர் சிலர் சென்று தூய திருமஞ்சன நீரையும், மணம் கமழும் மென்மையான மலர்களையும், மணமுள்ள சந்தனத்தையும், அழகிய ஆடையையும், மற்றவற்றையும் மரபுப் படி கொண்டுவந்து வைத்தனர்.

வைணவ அடியார் வடிவில் இருந்த அகத்திய முனிவர் அந்த வைணவர் கூட்டத்தைப் பார்த்து, "இன்று இந்த மூர்த்தியைப் பூசிக்கின்ற விதிமுறையை எல்லோரும் நன்றாகக் காணுங்கள். கண்டுகளியுங்கள்!" என்று கூறி, குறுகிய வடிவத்தையுடைய அகத்திய முனிவர், அறுகம்புல்லையும், கங்கையையும் அணிந்த சடையை உடைய

சிவபெருமானை உள்ளத்துள் எண்ணிக் கொண்டு, திருமால் விக்கிரகத்தின் மீது தமது சிவந்த கையை முடியின் மீது வைத்து ஐந்தெழுத்து மந்திரமான 'நமசிவாய' மந்திரத்தை ஓதியபடியே, தமது திருக்கரத்தால் குழைவித்துக் குழைவித்து, 'குறிய வடிவமாக ஆவாய், குறிய வடிவமாக ஆவாய்' என்று சொல்லி அமர்த்திச் சிறந்த அரக்கால் செய்யப்பட்ட உருவத்தின் மீது கடுந்தீ பட்டதுபோல் நெகிழச் செய்து ஒரு சிவ லிங்கத்தை உருவாக்கினார். உடனே தம் பழைய வடிவத்தை எடுத்து, பூ, நீர் முதலானவற்றைத் தூய்மையாக்கி விரைவாகப் பூசை செய்தார். "இன்று முதலாக இது சிவத் தலமாயிற்று!" என்று கூற, வைணவர்கள் அஞ்சி ஓடித் தம் நகரத்தை விட்டு நீங்கிப் பூமியில் எங்கும் சிதறினர்.

அகத்தியர் அரியை அரனாக மாற்றிய அற்புத நிகழ்ச்சியை கந்தபுராணம், அசுர காண்டத்தில் வரும் திருக்குற்றாலப் படலம் 15–வது செய்யுள் அழகாக எடுத்துக் கூறுவதைப் பாருங்கள்.

"அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம்
பெருமானை அகத்துட் கொண்டு
சிறுகுமுரு வுடையமுனி நாரணனார் திருமுடி
மேற் செங்கை யோச்சிக்
குறுகுகுறு கெனஇருத்தி
ஒள்ளரக்கிற் புனை
பாவை கோல மீதும்
அறுகுதழல் உற்றென்னக்
குழைவித்தோர்
சிவலிங்க வடிவஞ் செய்தான்"

இப்படி விஷ்ணு ரூபமாக இருந்த மூர்த்தியை அகத்தியர் சிவலிங்க ரூபமாக்கிய தலம் குற்றாலம். இதுபற்றி ஞானசம்பந்தர் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். இவரே திருப்பூந்துருத்தியில் திருமாலவனைச் சிவலிங்க வடிவமாக்கிய வரலாற்றையும் காண்போம்.

திருஞானசம்பந்தரது அவதாரம் இறைவனின் அருளால் தமிழகத்தில் நிகழ்ந்தது. இதனைச் சேக்கிழார் பெருமான் திருஞான சம்பந்தரின் வரலாற்றைத் தொடக்கத்தில், "வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத் துறை விளங்க" திருஞான சம்பந்தர் அவதரித்தார் என்று குறிப்பிடுகின்றார்.

ஒரு சமயம், அப்பர் பெருமான் திருப்பூந்துருத்தி எனும் திருத்தலத்தில் திருமடம் அமைத்து அங்குத் தங்கியிருந்ததை அறிந்த ஞானசம்பந்தர் அங்குச் செல்ல, அப்பர் சம்பந்தரின் வருகையை அறிந்து அடியார் குழாத்துடன் கலந்து ஞானசம்பந்தரின் சிவிகையைத் தாங்கி வந்தார்.

இதை அறியாத ஞானசம்பந்தர் அப்பரைக் காணாமல், 'அப்பர் எங்குற்றார்? என்று வினவ, அதைக் கேட்ட அப்பர், "அடியேன் உமது சிவிகையைத் தாங்கி வரும் பேற்றினைப் பெற்றேன்" என்றார். அதைக் கேட்ட சம்பந்தர் கலங்கி, உடனே கீழே இறங்கி 'தாங்கள் இவ்வாறு செய்தது தகுமோ?' என மனம் நெகிழ்ந்து அப்பரைத் தழுவிக் கொண்டார்.

சீர்காழியில் அவதரித்த திருஞான சம்பந்தர் பல தலங்களை வழிபட்டுப் பல அற்புதங்களை நிகழ்த்திய பின்னர் திருப்பூந்துருத்திக்கு வருகை தந்ததைக் கண்ட அப்பர் அடியார் குழாத்துடன் அவரை வாழ்த்தி வரவேற்றார். இருவரும் சைவநெறி தழைத்தோங்குவதைப் பற்றி மெய்மறந்து பேசிக் கொண்டிருக்க இடையில் சம்பந்தர் குறுக்கிட்டு, "சுவாமி, இந்தத் திருப்பூந்துருத்தியில் சைவ சமயத்திற்கு ஏதோ ஊறு நேர்வதாகக் கேள்விப்பட்டேன்" என்று கூற, அதற்கு அப்பர், "ஆமாம் சுவாமி, காக்கும் கடவுள் திருமால் மட்டும்தானாம். அவரை மட்டும் வணங்குவோம், சிவன் அழித்தல் தொழில்


அப்பர்

செய்பவராம். நாம் அவரை வணங்கத் தேவையில்லை என்று பூந்துருத்தியில் திருமால் பூசை மட்டுமே போதுமென்று கூறி வைணவர்கள் சிவபூசையை நிறுத்தி விட்டதாகக் கூறி வருந்தினார்.

இச்செய்தியைக் கேட்ட ஞான சம்பந்தர் உடனே அப்பர் பெருமானை அழைத்துக் கொண்டு, பூந்துருத்தி திருக் கோயிலில் அருள்பாலிக்கும் அருள்மிகு அழகாலமர்ந்த நாயகி சமேத புட்பவனநாதர் சந்நிதி சென்று, தோத் திரம் செய்து மனம் உருகப் பாடலா னார். அச்சமயம் இறைவன் அருளால் குடகுப் பகுதியில் பெருமழை பெய்தது. இதனால் காவிரி நதியில் வெள்ளம் பெருக்கெடுத்து வந்ததால் வைணவர் களின் இல்லங்கள் அழிந்தன. அத்தோடு அவர்களின் ஆணவமும் அழிந்தது.

பிறகு ஞானசம்பந்தர் பூந்துருத்தி மேற்பால் மாயனார் கோயிலுக்குச் சென்று, அங்கே வீற்றிருக்கும் மாய வனைச் சிவபெருமானாக எண்ணி மெய்யுருகப் பாடினார். ஆளுடைப் பிள்ளையின் அற்புதமான பாடலுக்கு மாயவனும் உருகிச் சேயிழை பங்கன் அங்கச் சிவலிங்க வடிவமானான். அங்குப் பிரகாரத்தைச் சுற்றிலும் இருந்த மாயவன் பரிவாரங்களும், அரன் பரி வாரங்களாக மாறின. அன்றிலிருந்து அக்கோயிலும் சிவன் கோயிலாயிற்று. அரியுரு சிவவுருவானதைக் கண்ட அப்பரும் சம்பந்தரும் மெய்சிலிர்க்கத் துதித்தினர்.

இவ்வற்புத நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான்,

> "மாயனைச் சிவனாகப் பாட மாயவ
> னுருகியொன்றாச்
> சேயிழை பங்க னங்கச் சிவலிங்க வடிவ மானான்
> பாயமால் பரிவாரங்கள் பரன்பரி வாரமானார்
> கோயிலும் பரமன்மே கோயிலாய்
> விளங்கிற்றன்றே!"

என்று தமது பெரிய புராணத்தில் குறிப் பிட்டுள்ளார்.

இப்படி அரியை அரனாக மாற்றிய அருளாளர்களாக அகத்திய முனிவரும், ஆளுடைய பிள்ளையும் போற்றப்படு கிறார்கள். ●


1956–ஆம் வருஷத்திய ரிஜிஸ்ட்டரேஷன் ஆப் நியூஸ் பேப்பர் (சென்ட்ரல்) சட்டத்தின் 8–வது விதிப்படி 'ஓம் சக்தி' என்ற தமிழ் மாதப் பத்திரிகையின் உரிமையாளர் பற்றிய விபரங்கள் பிரசுரிக்கப்படுகின்றன.

பாரம் – 4

| | | |
|---|---|---|
| 1. பிரசுரிக்கப்படும் இடம் | : | கோவை |
| 2. பிரசுரத்தின் தன்மை | : | மாதம் ஒருமுறை – முதல் தேதி |
| 3. அச்சிடுவோர் பெயர் | : | த. ராஜ்குமார் |
| எத்தேசத்தவர் | : | இந்தியர் |
| விலாசம் | : | ருக்மணி ஆப்செட் பிரஸ், E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கோவை – 641 021. |
| 4. ஆசிரியர் & பிரசுரகர்த்தர் | : | ம. மாணிக்கம் |
| எத்தேசத்தவர் | : | இந்தியர் |
| விலாசம் | : | 180, ரேஸ்கோர்ஸ் ரோடு, கோவை – 641 018 |
| 6. இந்தப் பத்திரிகையின் சொந்தக்காரர் | : | சக்தி சுகர்ஸ் லிமிடெட் |
| பெயர், விலாசம், மொத்த முதலில் | : | த.பெ.எண் : 3775 |
| நூற்றுக்கு ஒன்றுக்கு மேல் முதல் போட்டுள்ள கூட்டாளிகள் பங்குதாரர்கள், பெயர்கள், விலாசங்கள். | | 180, ரேஸ்கோர்ஸ் ரோடு, கோவை – 641 018 |

ம. மாணிக்கம் ஆகிய நான் இதன்மூலம் தெரிவித்துக் கொள்வது மேலே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் அனைத்தும் நான் அறிந்தமட்டில் உண்மை.

கோவை
1.3.2019

ம. மாணிக்கம்
பிரசுரகர்த்தர்

# மலர்மன்னனின் ‘திராவிட மாயை’ நூல்

மலர்மன்னன் எழுதிய ‘திராவிட மாயை’ என்ற நூலில் உள்ள ஒரு செய்தி திரு.வி.க.–வைப் பற்றித் தெரிவிக்கிறது.

‘நும்பல்’ என்பது செங்கல்பட்டு ஜில்லாவில் ஒரு ஜாகிர் கிராமம். அங்கு கிராம அமீனாவாக இருந்த முனுசாமிப்பிள்ளை பற்றித் தமது வாழ்க்கைக் குறிப்புகளின் வாயிலாக நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் (திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் – முதல் தொகுதி).



திரு.வி.க.

முனுசாமிப் பிள்ளையின் அதிகாரம் அமீனா அளவில் நிற்பதில்லை. ஏறக்குறையப் பத்துக் கிராமங்கள் வரை பரவி நின்றதாம். அவ்வட்டாரத்தில் ஒரு முடிசூடா மன்னனாக அவர் விளங்கினார்.

திரு.வி.க.வின் வாழ்க்கைக் குறிப்பு இன்னொரு சுவையான தகவலையும் தருகிறது. சென்னை ராயப்பேட்டையில் முத்து முதலித் தெருக் கோடியிலே ஒரு பள்ளிக்கூடம். அதன் பெயர் ஆரியன் பிரைமரி பாடசாலை. பள்ளியை நடத்தி வந்தவர் ராஜகோபால நாயக்கர் என்ற பிராமணர் அல்லாதவர். அந்தப் பள்ளியில்தான் 1891–ஆம் ஆண்டு திரு.வி.க. சேர்க்கப்பட்டார். தமிழ் கற்பித்த அந்த ஆரம்பப் பாடசாலைக்கு என்ன பொருளில் ஆரியன் என்ற பெயரை ராஜகோபால நாயக்கர் வைத்திருப்பார்?

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆளுகை தொடங்கியபோது நீதி பரிபாலனம் செய்கையில், பெரும்பாலானவர்களாக இருக்கும் இந்துக்களுக்கு அவர்களின் சட்ட திட்டங்களின் படி நியாயம் வழங்குவதுதான் முறை என்று ஆங்கிலேய ஆட்சியாளர்கள் உணர்ந்தனர்.

அதற்கான சட்டப் புத்தகங்களை அவர்கள் தேடியபோது, அவையெல்லாம் சமஸ்கிருதத்தில் இருப்பது தெரிய வந்தது. உடனே சமஸ்கிருதப் பண்டிதர்களுக்கு அடித்தது யோகம். அந்தப் பண்டிதர்கள் பிராமணர்களாக இருந்தனர்.

அன்று பிராமணர் அல்லாத ஆனால் தங்களை உயர் சாதியினராகக் கருதிக் கொண்டவர்கள் தமிழுடன் சமஸ்கிருதமும் கற்றவர்களாக இருந்தபோதிலும், பிராமணர்களுக்கு மதச் சடங்குகளை நடத்தி வைப்பவர்கள் என்கிற தகுதி இருந்ததால், அவர்களுக்கே சட்ட விதிமுறைகளை விளக்கும் வாய்ப்புக் கிட்டியது.

இந்துக்கள் தொடர்புடைய வழக்குகள் வருகையில், ஆங்கிலேய நீதிபதிகளின் கீழே அமர்ந்து விளக்கம் அளிப்பவர்களாகப் பிராமண வடமொழி அறிந்த பண்டிதர்கள் பணி செய்தனர்.

கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சி இருந்தவரை மட்டுமே இந்த நடைமுறை இருந்தது. 1857–இல் முதல் இந்திய சுதந்திரப் போருக்குப் பிறகு, கிழக்கிந்தியக் கம்பெனி அகற்றப்பட்டு, இந்தியா முழுமையும் பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வந்தது.

அதைத் தொடர்ந்து இந்தியாவில் மெக்காலே கல்வி முறை அமலுக்கு வந்தது. அந்தக் கட்டத்தில் மெக்காலே கல்வி முறையில் படித்து முன்னேறி அரசாங்க அலுவல்களில் பல்வேறு பதவிகளில் அமர்ந்த பிராமணர்கள், திடீரென அதிகாரம் வரப்பெற்றவர்களாகச் சமுதாயத்தில் முக்கியத்துவம் அடைந்து ஆதிக்கம் செலுத்தத் தொடங்கினர்.

ஆனால், மொத்த பிராமண சாதியினரும் சமுதாயத்தில் ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பைப் பெற்றுவிட்டனர் என்று சொல்லிவிட முடியாது.

ஒரு பிராமணர் அரசாங்க அதிகாரி என்ற முறையில்தான் மற்றவர்கள் மீது அதிகாரம் செலுத்த முடிந்திருக்கிறதேயன்றி, தாம் ஒரு பிராமணர் என்னும் சாதியின் அடிப்படையில் அல்ல.

ஆனாலும் எங்கெல்லாம் அதிகாரம் உள்ள பதவிகளில் பிராமணர்கள் இருந்தார்களோ, அங்கெல்லாம் அவர்கள் தமது உறவினர்களையும் அரசு வேலைகளுக்கு உள்ளே இழுத்து வந்துள்ளனர். **– ‘பாஞ்சஜன்யம்’ செப் – டிசம்பர் 2018 இதழ்**

நல்வாழ்த்துக்களுடன்!



ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்
ஜோதி ஜோதி ஜோதி பரஞ்
ஜோதி ஜோதி ஜோதி அருள்
ஜோதி ஜோதி ஜோதி சிவம்

# ஏ.பி.டி. இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

சக்தி பைனான்ஸ் பில்டிங், டாக்டர் நஞ்சப்பா ரோடு,
கோயமுத்தூர் - 641 018 போன் : 0422-2233982, 2233983

# கிராமப்புறத்தில் ஒரு பல்நோக்கு மருத்துவமனை

பேரூர் ஆதீனம் சீர் வளர் சீர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் பிறந்த ஊர், அன்னூருக்கு அருகில் உள்ள முதலிபாளையம். பேரூராதீனம் அங்கு பிறந்தாலும், அவருடைய ஆன்மிகத் தொண்டு பேரூரில்தான் நிலை கொண்டது.

அதற்கு முன்பு சிரவை ஆதீனம் இராமானந்த அடிகளாரிடம் பயிற்சி பெற்றார். அவரோடு இணைந்து பேரூராதீனத்தின் பெரும் புகழுக்கு இராமசாமி அடிகளார் பாடுபட்டார். சாந்தலிங்க சுவாமிகள்தான் பேரூர் ஆதீன கர்த்தர். அதனால்தான் தனது பெயரோடு சாந்தலிங்கரையும் இராமசாமி அடிகளார் இணைத்துக் கொண்டார்.

சாந்தலிங்கர் திருமடம், பேரூராதீனமாவதற்கு முன்பே ஒரு மிகப் பெரிய பணியை மேற்கொண்டது. சைவச்செம்மல் வி.சி. சுப்பைய கவுண்டர், கோவைப் பிரமுகர் டாக்டர் ஆர்.கே. சண்முகம் செட்டியார், கோவை கிழார் எனப் புகழப்பட்ட சி.எம். ராமச்சந்திரன் செட்டியார் ஆகியோர் கோவை பேரூர் சாந்தலிங்கர் திருமடத்தில் புலவர்களுக்கான தமிழ்க் கல்லூரியைத் தொடங்க நிதியுதவியையும், பிற



கபிலை மாமுனிவர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்

உதவிகளையும் செய்தனர்.

அந்தக் காலகட்டத்தில் கரந்தைத் தமிழ்ச்சங்கம் புகழ்பெற்று விளங்கியது. அதே போல, கொங்கு வட்டாரத்தில் பேரூர் தமிழ்க்கல்லூரியும் புகழ்பெறத் தொடங்கியது. இந்தக் கல்லூரியில்தான் தவத்திரு சுந்தரசுவாமிகள், முன்னாள் அரசவைக் கவிஞர் புலமைப்பித்தன், கவிஞர் புவியரசு, புலவர் ராசியண்ணன் முதலிய இலக்கிய ஆளுமைகள் படித்தார்கள்.

இக்கல்லூரியில் படித்துப் புலவர் பட்டம் பெற்றவர்கள் 5 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களிலும் கிராமங்களிலும் தமிழாசிரியர்களாகப் பணியாற்றினர்.

இதன் நிர்வாகத்தை மேற்கொண்டு வந்த பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் தவத்தையும், தமிழையும் இரு கண்களாகப் போற்றியவர். தமிழ் அவருக்கு உயிர் என்றால் தவம் அவருக்கு உடலாக இருந்தது. ஆழ்ந்த புலமை பெற்ற அடிகளார், குன்றக்குடி அடிகளாரோடு மிக நெருங்கிய தொடர்புடையவர்.

அதுமட்டுமல்ல, சைவத்திற்காகப் பல நாடுகளுக்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டு அங்குள்ள

தமிழர்களை, குறிப்பாக ஈழத் தமிழர் களை நேசித்தவர்.

பேரூராதீனத்திற்கு ஒரு கனவு இருந்தது. அது என்னவென்றால், தான் பிறந்த அந்த முதலிபாளையம் கிராமத்தில் மக்கள் பணி ஏதேனும் செய்ய வேண்டும் என்பதுதான் அந்தக் கனவு. அங்கு பஞ்சாயத்து மூலம் கல்வி நிலையங்கள் இருந்தன. கல்விப்பணி அங்கு அவசியப்படவில்லை. அங்கு அவசியப்பட்டது ஒரு மருத்துவமனை தான். ஏனெனில், கிராமவாசிகள் மருத்துவ சிகிச்சை பெறுவதற்கு அன்னூருக்கோ, கோவைக்கோ செல்ல வேண்டியிருந்தது.

அவர்களுடைய தேவையை மனதில் கொண்டு அங்கு ஒரு மருத்துவ மனையை உருவாக்க வேண்டும் என்று தொடர்ந்து சிந்தித்து வந்தார். இதற்காக அமைக்கப்பட்ட அறங்காவலர் குழு உறுப்பினர்களான 'சக்தி' குழுமங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், பண்ணாரியம்மன் குழுமத் தலைவர் திரு. எஸ்.வி. பாலசுப்பிரமணியம், கோவை கே.எம்.சி.எச். மருத்துவமனை தலைவர் டாக்டர் நல்ல. க. பழனிசாமி,


மருத்துவமனையின் மாதிரி வடிவம்

ரூட்ஸ் குழுமத் தலைவர் திரு. கி. ராமசாமி, செந்தில் குழுமம் திரு. ஓ. ஆறுமுகசாமி, கிருஷ்ணா கல்விக் குழுமத்தின் தலைவர் திருமதி. ச. மலர்விழி ஆகி யோர் அடிகளாரின் 90–ஆம் ஆண்டு நிறைவின் நிகழ்வாக, அடிகளாரின் திருப்பெயரில் மக்களுக்குப் பயன்படும் அனைத்து வசதிகளையும் உள்ளடக்கிய உயர்தர பல்நோக்கு மருத்துவமனையை உருவாக்கிட முடிவு செய்து ஒவ்வொரு வரும் ரூ. 1 கோடி நன்கொடை நிதி வழங்கினர்.

இம்மருத்துவமனைக்கான இடத்தை பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க மருதாசல அடிகளாரும், அவர்தம் பூர்வாசிரமத் தங்கை திருமதி காந்திமதி ரகுபதி அவர்களும் தங்களுடைய நிலத்தில் 5 ஏக்கர் பூமியை இதற்காக வழங்கினார்கள்.

102 படுக்கை வசதிகளைக் கொண்டதாக அமையவுள்ள இம்மருத்துவ மனை, சுமார் 80 கோடி மதிப்பீட்டில்

தொடர்ச்சி 92-ம் பக்கம்

சிறுகதை



ஆர்னிகா நாசர்

# ஆறாவது விரல்

பிரமாண்டமான பைசல் மஹால் மின்பழங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மொகலாயர் பாணியில் உள்ளலங்காரம், பூக்களால் அலங்கரிக்கப்பட்ட மேடை, தரைத்தளத்தில் 1500 ஆண்களும் முதல் தளத்தில், 500 பெண்களும் திருமணத்தைக் கண்டுகளிக்கும் வண்ணம் மஹால் கட்டப்பட்டிருந்தது. ஒலிபெருக்கியில் நாகூர் அனிபா பாடல்கள்.

ஒரு செவர்லெட் காரில் செய்குதம்பி வந்திறங்கினார். செய்குதம்பி ஒரு தொழிலதிபர். செய்கு தம்பியுடன் அவரது நான்கு இளைய சகோதரர்களும் வந்திறங்கினர்.

கார் நெரிசலில் சிக்காமலிருக்கக் காரை மண்டபத்திலிருந்து 200 மீட்டர் தூரத்தில் நிறுத்தினர். இறங்கி ஆடைகளைத் திருத்தித் தலைவாரிக் கொண்டனர். ஐவரில் இருவர்

“நம்மகிட்ட விருந்தோம்பல் குணம் இல்லாம போய்ட்ருக்குன்னு அந்த ஆள் சொல்றார். அவரின் குற்றச்சாட்டு நம் அனைவருக்கும் பொதுவானது. அந்தாள் சாப்டலைன்னா நாங்களும் சாப்டல பாய்...



பிரபல தொழிலதிபர் பக்கீர் மீரானின் மகள் திருமணம். 5000 பேருக்கு அழைப்பு, பிரியாணியுடன் ஏழெட்டு துணை அசைவ அயிட்டங்கள் கூடிய விருந்து. ஐந்து வகைப் பாயாசம் உண்டு.

விருந்து சாப்பிட வருபவர்களைக் கட்டுப்படுத்திப் பந்தியில் அமர வைத்து உபசரிக்க இருபது கட்டுமஸ்தான சீருடை வாலிபர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர்; அழையா விருந்தாளிகள் வந்தால் அவர்களை வெளியே விரட்டியடிக்கப் பணிக்கப்பட்டிருந்தனர்.

மண்டபத்தின் முன் நூற்றுக்கணக்கான நான்கு சக்கர வாகனங்கள் குழுமியிருந்தன.

நறுமணம் பீய்ச்சிக் கொண்டனர்.

மண்டபத்தை நோக்கி நடக்க ஆரம்பிக்கும் ஐவரை ஒரு குரல் மறித்தது.

“நமஸ்காரம் பாய்மார்களா...!”

செய்குதம்பி திரும்பினார். ஒரு நாற்பது வயது மதிக்கத்தக்க ஆண் நின்றிருந்தார். உலர்சலவை செய்யப்படாத பேன்ட் சட்டை அணிந்திருந்தார்.

“யாரப்பா நீ...?”

“நான் அய்யலு. திருத்துறைப்பூண்டிக்காரன். ஒரு வேலையா சிதம்பரம் வந்தேன். வேலை முடிஞ்சது.

பஸ் ஸ்டாண்ட் போகும்போது இந்த மண்டபம் என் கண்ணுலபட்டது. தவிர மண்டபத்துக்குள்ளயிருந்து வர்ற பிரியாணி வாசனை என்னை அச மடக்கிப் போட்ருச்சு. ஆயிரம் உணவு வகைகள் இருந்தாலும், முஸ்லிம்கள் சமைக்கிற பிரியாணியின் மகத்துவம் தனிதான். நாக்கு ஜலம் ஊறுது. தனி யாப் பந்திக்குப் போய் மாட்டி அடி வாங்க உடம்புல சத்தில்லை. நீங்க அஞ்சு பேரும் அண்ணன் தம்பிகள் மாதிரி தெரியுறீங்க, கார் டிரைவர்னு சொல்லி என்னையும் பிரியாணி சாப் பிட வைங்க, உங்களுக்குப் புண்யமாப் போகும். அடுத்த நூறு வருஷத்துக்கு அஞ்சு பாய்க தயவுல சூப்பர் பிரி யாணி சாப்பிட்டேன், சூப்பர் பிரி யாணி சாப்பிட்டேன்னு சொல்லி உங்க புகழ் பரப்பிட்டிருப்பேன்!”

செய்குதம்பி மெலிதாய்ச் சிரித் தார். அண்ணன் சிரித்ததும் நான்கு தம்பிகளும் சிரித்தனர்.

“அய்யலு! உன் அபிலாஷையை ஒளிக்காம, மறைக்காம நீ சொன்ன விதம் அருமை. நாங்க டிரைவர் வச்சுக் கார் ஓட்றதில்லைன்னு எல் லாருக்கும் தெரியும். அழைப்பிதழ் உள் ளவங்களை மட்டும்தான் கண்டிப்பா சாப்பிட விடுவாங்க. ஓர் இலைக்கு ஐந்நூறு ரூபா செலவு பண்றாங்க. நாங்க உன்னைக் கூட்டிட்டுப் போனா லும் அவங்க வாசல்லயே திருப்பி அனுப்பிச்சிருவாங்க!”

அய்யலுவின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. “உங்களை நம்பி வந்த எனக்கு இந்தப் பதிலா?”

“இது எங்க வீட்டுக் கல்யாணம்னா உன்னைச் சாப்பிட வும் அனுமதிச்சு, பார்சலும் கட்டிப் போகப் பண்ணுவம். அடுத்தவங்க வீட்டுக் கல்யாண விருந்துல அந்நியர் களை அனுமதிக்க எங்களுக்கு அதி காரம் ஏது?”

“இன்னைக்கி இந்த விருந்தை நான் சாப்டலைன்னா ஏங்கிப் போய்டு வேன். ஊருக்குத் திரும்பிப் போய் இந்த ஏக்கத்தில செத்தாலும் செத்துப் போய்டுவேன். இந்தப் பாவம் உங்களுக்குத்தான்!”

“என்ன அண்ணன்... இந்த ஆள் இப்படிப் பேசுறான்!”

“தம்பி! ஒரு யோசனை... உனக்கு ஐந்நூறு ரூபா தரேன். இங்கப் பக்கத் தில கமல விலாஸ் இருக்கு. பிரியாணி அந்தக் கடைல பிரமாதமா இருக்கும். வயிறாரச் சாப்டுட்டு ஊருக்குப் போ. ஊருக்குப் போகும்போது உன் அட்ரஸ் குடுத்திட்டுப் போ, எங்க வீடுகள்ல ஏதாவது விசேஷம்னா உனக்கு அழைப்பிதழ் வைக்கிறேன். வந்து திருப்தியாச் சாப்பிட்டுப் போ!” ஐந்நூறு ரூபாய் நோட்டு ஒன்றை நீட்டினார் செய்கு.

அய்யலுவின் முகம் இருண்டது. “தொண்டை வறளுது, குடிக்கக் கொஞ்சம் தண்ணி குடுங்கன்னு கேட்டா நாலாவது தெருவுல இருக்கிற மூணாவது வீட்டுக்குப் போய் குடின்றீங்களே, நியாயமா? ஐயாயிரம் பேர் சாப்பிடுற விருந்துல நான் ஐயா யிரத்து ஒண்ணா சாப்பிடக் கூடாதா? முஸ்லீமுக்கு முஸ்லீம் காட்ற விருந் தோம்பலை ஓர் இந்து சகோதர னுக்குக் காட்டக் கூடாதா?”

மூன்றாவது சகோதரன், “அண்ணன்... இந்த ஆளு கேக்றது நியாயமான கேள்விகள்தான். விருந் துக்கு நம்ம அஞ்சு பேரைக் கூப்பிட் டாங்க. விருந்துக்கு அஞ்சுன்னு எண் ணிக்கை கணக்கு. நான் கார்லயே உக்காந்திருக்கேன். அஞ்சாவது ஆளா இந்த அய்யலுவைக் கூட்டிட்டு போங்க...”

“அப்படி அய்யலுவைக் கூட் டிட்டுப் போறதுன்னா கார் டேஷ் போர்டுல இருக்கிற துணித் தொப்பி எடுத்து அய்யலு தலைல மாட் டிருங்க!” மூன்றாவது சகோதரன்.

“பிரியாணி சாப்பிட அய்யலு அய்யூப் ஆகமாட்டான்!”

“இப்படிச் செஞ்சா என்ன அண்ணன்?” இரண்டாவது சகோதரன்.

“எப்படி...?”

“நாம அஞ்சு பேர் இலையை ஆறாவது ஆள்கூட ஷேர் பண்ணிக்குவோம். ஆறாவது விரலை அஞ்சு விரல்கை அட்ஜஸ்ட் பண்ணிக்கிறது இல்லையா?”

“அய்யலு பந்தில தனி சேர்ல உக்காராம நம்ம மடிலயா உக்காருவாரு!”

“பேசிக்கிட்டே இருந்தா முடிவு ஏற்படாது. அய்யலுவைக் கூட்டிட்டு போவோம். நாம்பளா வாய் திறந்து எதுவும் சொல்ல வேணாம். மீறிக் கேட்டா அய்யலு நம்மகிட்ட பணி புரியுற விசுவாசின்னு சொல்லுவோம். அய்யலுவை விட மறுத்தா நாம்பளும் சாப்பிடாம மொய் மட்டும் வச்சிட்டுத் திரும்பிடுவம். வீட்ல இதே தரத்ல பிரியாணி தயாரிச்சு அய்யலுவை உபசரிப்போம்!” என்றார் செய்குதம்பி.

ஐவரும் அய்யலுவைத் தங்களுக்கு நடுவே நுழைத்துக் கொண்டு மண்டப வாசலை நோக்கி நடந்தனர். ஓர் இயந்திரம் பன்னீர் ஸ்ப்ரே செய்தது. வரவேற்புப் பெண்கள் ரோஜாவும் கிரிஸ்டல் கல்கண்டும் நீட்டினர். கொத்தாய்க் கல்கண்டு அள்ளிக் கொண்டான் அய்யலு.

மணப்பெண்ணின் தந்தை அய்யலு அழைக்கப்படாத இடைச்செருகல் எனப் புரிந்து கொண்டார். அவரது முகம் கறுத்தது. செய்குதம்பியை அர்த்தபுஷ்டியாய்ப் பார்த்தார். செய்குதம்பி அய்யலுவின் தோள்மேல் கைபோட்டபடி நடந்தார். ஏறக்குறையக் கடைசி வரிசையில் அய்யலுவை நடுவில் அமர்த்தி இடப்பக்கம் இரண்டு சகோதரர்களும் வலப்பக்கம் மூன்று சகோதரர்களும் அமர்ந்து கொண்டனர்.

நிக்காஹ் ஓதி முடிக்கப்பட்டது.

இஸ்லாமியத் திருமணம் பற்றி ஆயிரம் சந்தேகங்களைச் சளைக்காமல் கேட்டு செய்குதம்பியிடம் விடை பெற்றான். அத்துடன் நில்லாது வார்த்தைக்கு வார்த்தை, “பந்தி எப்பப் பரிமாறுவாங்க. பந்தி எப்பப் பரிமாறுவாங்க...” என்று கேட்டுக் கொண்டிருந்தான் அய்யலு.

அமர்ந்த நிலையிலேயே இடுப்பு பெல்ட்டைக் கழற்றிச் சுருட்டி பேன்ட் பாக்கெட்டுக்குள் பதுக்கினான் அய்யலு.

“எதுக்கு அய்யலு...?”

“வயிறு லூசாயிருந்தா நிறையச் சாப்பிடலாமில்ல... அதுக்குத்தான்!”

அய்யலுவின் நடவடிக்கைகளை இரு டபிள்யூ.டபிள்யூ.எப். தடியர்கள் கண்காணித்துக் கொண்டிருந்தனர்.

“இவனைப் பந்திக்குள்ள நுழைய விடாமப் பாத்துக்கணும். எதிர்த்து வம்பு பண்ணினா தர்ம அடிதான்.”

முதல் பந்திக்கு அனைவரும் நடக்க ஆரம்பித்தனர். செய்குதம்பியும் அவரது சகோதரர்களும் அய்யலுவை அரவணைத்தபடி நடந்தனர்.

பந்திவாசலில் மணப்பெண்ணின் தந்தை குறுக்கே கை நீட்டி அய்யலுவை மட்டும் தடுத்தார். “நீ நில்லுப்பா...!”

செய்குதம்பி. “அவர் எங்களோட வந்தவர்... அவர விடுங்க!”

“இல்லல்ல... அவர் இருக்கட்டும்... நீங்க சாப்பிடப் போங்க பாய்!”

“அவரைக் கூட்டிக்கிட்டுதான் நாங்க சாப்பிடப் போவம்!”

“நான் அவரை இன்வைட் பண்ணலையே...”

“ஒரு அழைப்பிதழின் பெயரில்

நான்கைந்து பேர் கூடுதலாய் ஏழெட்டுப் பேர் விருந்து சாப்பிட வருவதில்லையா? அவரை விடுங்க பாய். எங்க சாப்பாட்டை அவர் பகிர்ந்துக் கட்டும்!"

"இப்படி ஒவ்வொருவரும் திருமணத்திற்குச் சம்பந்தமில்லாத நபரை உடன் அழைத்து வந்தால் விருந்துக்கு அழைக்கப்பட்டவர்களுக்கு அடுத்தடுத்த பந்தியில் உணவில்லாமல் போய்விடுமே..."

"விருந்தோம்பல் ஐந்நூறு பேர் உணவை அறுநூறு பேர் சாப்பிட வைக்கும். விருந்துக்கு அழைக்கப்பட்டவர் தன்னுடன் யாரையாவது கூட்டிவரது தப்பே இல்லை!"

"இல்ல பாய்... விருந்துக்கு யார் யாரை அனுமதிக்கனும்ன்றது விருந்து உபசரிப்பவரின் அடிப்படை உரிமை!"

அய்யலு இருவரையும் சமாதானப் படுத்தும் விதமாய் இரு கை நீட்டி, "எனக்காக ரெண்டு பாய்களும் சண்டை போட்டுக்க வேணாம்... முஸ்லீம்களுக்கு விருந்தோம்பல் குணம் ஜாஸ்தின்னு நம்பி வந்திட்டேன். அது தப்புன்னு புரிஞ்சுபோச்சு. நா கிளம்புறேன். மணமக்கள் அமோகமா இருக் கட்டும்!"

அய்யலு கிளம்ப ஐந்து சகோதரர்களும் கிளம்பினர். "நாங்க கூட்டி வந்த ஆளுக்குச் சாப்பாடு இல்லைன்னா எங்களுக்கு எதுக்கு? நாங்களும் கிளம்புறோம்!"

குழுமியிருந்த கூட்டத்தில் பலர், "நம்மகிட்ட விருந்தோம்பல் குணம் இல்லாம போய்ட்ருக்குன்னு அந்த ஆள் சொல்றார். அவரின் குற்றச் சாட்டு நம் அனைவருக்கும் பொதுவானது. அந்தாள் சாப்டலைன்னா நாங்களும் சாப்டல பாய்... கிளம்புறோம்."

"தடிதடியாய் ஆள்களை நிறுத்தி அழையா விருந்தாளிகளைப் பிரிச்செடுக்கிறது மனிதாபிமானக் காரியமில்லை. ஐயாயிரம் பேரைக் கூப்ட்டீங்க. அழையாம ஒரு நூறு இருநூறு பேர் சாப்பிடுவாங்களா? சாப்பிடட்டுமே... நாம எல்லாம் வாரத்துக்கு அஞ்சுநா எப்படியாவது பிரியாணி சாப்ட்டுர்றோம். ஆனா ஏழைகள் அபூர்வமாய்த்தான். ஏழை பாழைகளுக்கு விருந்து சாப்பாடு போட்டா அவங்க வயிறு மணமக்களை வாழ்த்தும். அந்த வாழ்த்துப் பலிக்கும் தன்மை வாய்ந்தது. கல்யாண வீடுகள்ல சொந்தபந்தம் வாளி வாளியாய், சட்டி சட்டியாய்த் தூக்கிப் போவதைத் தடுத்தாலே நூறு ஏழை பாழைகளுக்கு விருந்துச் சாப்பாடு போடலாம்" – சிலர்.

மணப்பெண்ணின் தந்தை சில நொடிகள் தலை கவிழ்ந்திருந்தார். பின் ஓடிப் போய் அய்யலு கையைப் பற்றிக் கொண்டார். "என்னை மன்னிச்சிருங்க. சாப்பிட வாங்க."

"இவ்வளவு தூரம் பேசிட்டீங்க... ரசாபாசம் ஆய்ப்போச்சு. நான் எப்படிச் சாப்டுறது?"

கூட்டம் கோரஸாய், "பாய் சார்பா நாங்க மன்னிப்புக் கேக்கிறோம்... எங்களோட விருந்து சாப்பிட வாங்க... விருந்தோம்பல் குணம் எங்களைவிட்டு எங்கயும் போய்டல."

அய்யலுவுக்கு முதல் பந்தியில் ராஜஉபசாரம் நடந்தது.

மணப்பெண்ணின் தந்தை கட்டுமஸ்தான வாலிபர்களிடம், "விருந்துக்கு யார் சாப்பிட வந்தாலும் தடுக்காதீங்க. எல்லாரும் மனம்குளிர, வயிறு மகிழ சாப்ட்டுட்டுப் போகட்டும்."

அய்யலுவைப் பேருந்துநிலையம் வரைக்கும் வந்து பஸ் ஏற்றிவிட்டனர் செய்குதம்பி சகோதரர்கள்.

இரண்டு வருடங்கள் கழித்து...

அய்யலுவின் மகளுக்குத் திருமணம். தாத்தாவழிச் சொத்து கோர்ட்டின் தீர்ப்பின்படி கிடைத்து அய்யலு கோடீஸ்வரனாகியிருந்தான்.

வடை பாயாசம், 32 வகைக் கூட்டு, மசியல், பொறியலுடன்




செட்டிநாட்டு டைப் சைவச் சாப்பாடு விருந்து.

வாசலில் நின்று அனைவரையும் வரவேற்றுக் கொண்டிருந்தான். ஒரு முஸ்லிம் பெரியவர் அழையா விருந் தாளியாய் வந்து பந்திக்குள் நுழைய முரண்டிக் கொண்டிருந்தார்.

அய்யலு ஓடினான். "விடுங்கப்பா அவரை. விருந்துக்கு யார் சாப்பிட வந்தாலும் தடுக்காதீங்க. எல்லாரும் மனம்குளிர, வயிறு நிறையச் சாப் பிட்டுவிட்டுப் போகட்டும்!"

முஸ்லிம் பெரியவரின் முகத்தில் வானவர்கள் கூடி மதநல்லிணக்கத் திருவிழாக் கொண்டாடினர்.

●



முதலிபாளையம் கிராமத்தில் நவீன மருத்துவமனை அடிக்கல் நாட்டுவிழாவில் தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் சி.சுப்பிரமணியம், கிருஷ்ணா கல்வி நிலையத் தலைவர் திருமதி ச.மலர்விழி, பண்ணாரி அம்மன் சுகர்ஸ் தலைவர் டாக்டர் எஸ்.வி. பாலசுப்பிரமணியம், சக்தி குழுமத் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், ரூட்ஸ் குழுமத் தலைவர் கி.ராமசாமி, செந்தில் குழுமம் ஓ.ஆறுமுகசாமி, டாக்டர் நல்ல க. பழனிசாமி.

86-ம் பக்கத் தொடர்ச்சி

உருவாக உள்ளது. இம்மருத்துவமனை நவீன மருத்துவச் சிகிச்சைக் கருவிகள், அறுவைச் சிகிச்சை அரங்குகள், அதி நவீனப் பரிசோதனைக் கூடங்கள் எனப் பல வசதிகளைக் கொண்டு உருவாக உள்ளது.

இம்மருத்துவமனையின் அடிக்கல் நாட்டுவிழா, சென்ற 6.2.2019 அன்று மிக விமரிசையாக நடைபெற்றது. இவ் விழாவின் வரவேற்புரையைத் தொழிலதிபர் திரு. எஸ்.வி. பாலசுப்பிரமணியம் அவர்கள் கவிதை நடையில் வழங்கினார். தவத்திரு சாந்தலிங்க மருதாசல அடிகளார் தலைமை தாங்க, சிரவை ஆதீனம் தவத்திரு இராமானந்த குமரகுருபர அடிகளார் முன்னிலை வகிக்க, மாண்புமிகு தமிழக முதலமைச்சர் எடப்பாடி கே. பழனிச்சாமி அவர்கள் அடிக்கல் நாட்டி, விழாப் பேருரை நிகழ்த்தினார்.



அடிக்கல் நாட்டுவிழாவில் பூஜைகள்...



அடிக்கல் நாட்டுவிழாவில் அறங்காவலர்களுடன் தவத்திரு மருதாசல அடிகள், சிரவை ஆதீனம் குமரகுருபர அடிகள், செயலர் பழ.தரும.ஆறுமுகம்.




மாண்புமிகு தமிழக முதல்வர் அடிக்கல் நாட்டுப் பலகையைத் திறந்து வைக்கிறார்.

இவ்விழாவில் தமிழக சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு ப. தன பால், ஊரக வளர்ச்சித் துறை அமைச் சர் மாண்புமிகு எஸ்.பி. வேலுமணி, தமிழக சட்டப்பேரவைத் துணைத் தலைவர் மாண்புமிகு பொள்ளாச்சி வி. ஜெயராமன், கால்நடைப் பராமரிப்புத் துறை அமைச்சர் மாண்புமிகு உடுமலை கே. ராதாகிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.




அடிக்கல்லைத் திறந்துவைத்த மாண்புமிகு தமிழக முதல்வருடன் மாண்புமிகு சட்டப்பேரவைத் தலைவர் ப. தனபால், மாண்புமிகு அமைச்சர் எஸ்.பி. வேலுமணி.

மருத்துவர் நல்ல ஜி. பழனிசாமி, திட்ட அறிமுக உரையை நிகழ்த்தினார். தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் சி. சுப்பிர மணியம் நன்றியுரையைக் கவிதை நடை யில் வழங்கினார்.

பொதுவாக, சமயத்தின் நோக்கம் மக்களுக்குத் தொண்டு செய்வதாக அமைய வேண்டும் என்பதுதான் மரபு. தவம் இயற்றித் தனக்கு மட்டும் மோட் சம் தேடுவதல்ல சமயத்தின் நோக்கம். சேவை செய்து, தேவைப்பட்டவர்களின் துயரத்தைத் துடைத்து அவர்களை இன் புறுத்துவதுதான் சமயத்தின் நடை முறைச் சித்தாந்தம்.

இதனைக் கிறிஸ்தவ சமயம் மிகச் சிறப்பாகச் செய்து வருகிறது. பாதிரி யார்களான துறவிகளும், கன்னியாஸ் திரீகளும் கல்விப் பணியையோ, மருத் துவச் சேவையையோ செய்பவர்கள். இவ்வாறு தொண்டு செய்வதன் மூலம் துறவுக்கே பெருமை சேர்ப்பார்கள்.

ஏனோ, நமது தமிழ்நாட்டில் சமயத் தலைமைப் பீடங்கள் பல இருந்தாலும், அவற்றால் நடத்தப்படுகிற மருத்துவ மனைகளோ, கல்விச்சாலைகளோ மிக வும் குறைவு. தஞ்சை, திருச்சி முதலிய பகுதிகளில் பண்டைய பாரம்பரியம் மிக்க அவை செயல்பட்டு வந்தாலும், அவை அனைத்தும் சமய நெறிகளை மட்டுமே போதனை செய்வதோடு, தங் கள் பணிகளைச் சுருக்கி விடுகின்றன.

இதற்கு மாறாக, கொங்கு நாட்டில் அமைந்துள்ள சிரவை ஆதீனமும், பேரூர் ஆதீனமும் தங்களைக் கல்விப் பணியில் ஈடுபடுத்திக் கொண்டுள்ள தோடு, மருத்துவப் பணியிலும் பிர வேசித்துள்ளது வரவேற்கத்தக்கதும், பின்பற்றத் தக்கதுமாகும்.

– ந.நி.

பொள்ளாச்சியில் உள்ள டாக்டர். மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரியில் 7.2.2019 வியாழக்கிழமை என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் நிறுவனர் தின விழா நிகழ்ந்தது. என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் மற்றும் சக்தி சுகர்ஸ் லிமிடெட்டின் செயல்தலைவர் டாக்டர் ம.மாணிக்கம் அவர்கள் தலைமை யேற்றார்.

விழாவில் 'கொங்குநாட்டுச் சாதனையாளர்' விருதானது, கோயம்புத்தூர் மசானிக் குழந்தைகள் மருத்துவமனையின் குழந்தைகள் நல தலைமை மருத்துவர் டாக்டர்.ம.இராமசாமி அவர்களுக்கு வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

நிறுவனர் நாள் நினைவுப் பேருரையை, வாணியம்பாடி இஸ்லாமிக் கல்லூரியின் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், 'கவிமாமணி' பேராசிரியர் டி.எம். அப்துல் காதர் அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.

நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரியின் முன்னாள் மாணவர் சங்கத்தின் நிதியத்திற்கு ரூபாய் ஐந்து இலட்சம் வழங்கிய, கல்லூரியின் பழைய மாணவரான கோவை ஸ்ரீ விவேகா இன்ஜினியரிங் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தின் முதன்மைச் செயல் அலுவலர் திரு. பி. சந்திரசேகர் (1986 இயந்திரவியல் துறை) அவர்களுக்குப் பொன்னாடை வழங்கிச் சிறப்பிக்கப் பட்டது.

பாலிடெக்னிக் கல்லூரியின்

# பொள்ளாச்சியில் நிறுவனர் தின விழா!




நிறுவனர் தினத்தில் 2019–ஆம் ஆண்டுக்கான கொங்குநாட்டுச் சாதனையாளர் விருதை என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் வழங்க, அதனைப் பெற்றுக் கொள்கிறார் கோவை மசானிக் மருத்துவமனையின் தலைமை மருத்துவர் டாக்டர் ம. இராமசாமி. உடன் விழாப் பேருரை நிகழ்த்திய பேராசிரியர் டி.எம். அப்துல்காதர், என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் துணைத் தலைவர் திரு. ம. பாலசுப்பிரமணியம், என்.ஐ.ஏ. செயலர் முனைவர் சி. இராமசாமி, பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் திரு. ரா. மணிவண்ணன், என்.ஐ.ஏ. நிர்வாக அதிகாரி திரு. ஏ. சின்னசாமி, எம்.சி.இ.டி. கல்லூரி முதல்வர் டாக்டர் ஏ. இரத்தினவேலு, வாணவராயர் வேளாண்மைக் கல்வி நிறுவனத்தின் முதல்வர் முனைவர் எம். பாலுசாமி ஆகியோர்.

முதல்வர் திரு.ரா.மணிவண்ணன் அவர்கள் வரவேற்புரை வழங்கினார்.

விழாவிற்குத் தலைமையேற்ற டாக்டர். ம. மாணிக்கம் அவர்கள் தமது உரையில், "மாற்று மருத்துவச் சிகிச்சை முறைகளில் நாங்கள் கவனம் செலுத்தி வருகின்றோம். இதன் பொருட்டு கடந்த ஆறு மாதங்களுக்கு முன் தொடங்கப் பட்ட 'மிராக்கிள் வெல்னஸ் கிளினிக்' சிறப்பான பலன்களைப் புற்றுநோயாளி களுக்கு வழங்கி வருகின்றது. மாணவர் களும், பொதுமக்களும் இந்த மருத்துவ முறையில் குணமடைந்து வருபவர் களைக் கண்டு இந்த முறையின் நன்மை களை வேண்டுபவர்களுக்குத் தெரி வித்துப் பயன்பெறச் செய்யலாம்.

இதன் சிறப்பான செயல்பாட்டால் இந்த முறை மருத்துவ நிலையங்களைத் தமிழகம் முழுவதும் உள்ள பெரிய நகரங்களில் தொடங்குவதற்கான பணி களைச் செய்துவருகின்றோம். இன்றைய சூழ்நிலையில் சிறப்பாகக் கல்வி பயிலும் யாரும் மிக உயர்ந்த நிலைக்கு வர முடியும். கடந்த ஐம்பது ஆண்டுகளை விட, இனி வரவிருக்கும் ஐம்பது ஆண்டு களில் மிக நல்ல வளர்ச்சியை நம்நாடு அடையவிருக்கின்றது. இந்த வளர்ச்சி யில் கிடைக்கும் வாய்ப்புகளை மாண வர்கள் பயன்படுத்திக்கொள்ள வேண் டும்" என்று கூறினார்.

கொங்கு நாட்டுச் சாதனையாளர் விருதுபெற்ற மசானிக் மருத்துவமனை யின் தலைமை மருத்துவர் டாக்டர் ம. இராமசாமி அவர்கள் வழங்கிய ஏற்பு ரையில், "இந்தப் பொள்ளாச்சிப் பகுதி பாலத்துறை கிராமத்தில் ஒரு சதவீதம் மட்டுமே கல்வியறிவு கொண்ட கிராமப் புறத்தில் இருந்து கல்வி பயின்று மருத் துவ மேற்கல்வி பயில எனக்குப் பொரு ளாதார உதவி வழங்கியவர் அருட் செல்வர் நா.மகாலிங்கம் ஐயா அவர் கள். அமெரிக்கா சென்று மருத்துவ உயர்கல்வி பயிலவும் அவர் உதவி புரிந்தார்.

அத்தகைய கொடைவள்ளலாகத் திகழ்ந்த அருட்செல்வர் அவர்களின் என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களில் இருந்து இந்த விருது பெறுவது எனக்கு மகிழ்ச்சியின் உச்சகட்டத்தை வழங்கு கின்றது. என் கடன் பணிசெய்து கிடப் பதே என்ற கொள்கையைக் கொண்டு சமுதாயப் பணிசெய்ய வேண்டும். தனக்கு மட்டும் வேண்டியதைச் செய்து கொள்ளாமல், பிறருக்கும் பயன் தரும் செயல்களைச் செய்ய வேண்டும். ஒவ் வொருவரின் சிறப்பியல்புகளைக் கண்ட றிந்து அதன்மூலம் முன்னுக்கு வர வேண்டும்.

மருத்துவத்தின் நோக்கம் குணப் படுத்துவது. அதற்குக் கட்டணம் என் பது கொடுக்க முடிந்ததைப் பெற்றுக் கொள்வது. இதனை அடிப்படையாகக் கொண்டே மசானிக் குழந்தைகள் மருத் துவமனையை நடத்தி வருகின்றோம். இந்த விருதினை, மசானிக் மருத்துவ மனையைத் தொடங்கி நடத்திவரும் நிறுவனர்களுக்கும், என்னுடன் தோளோடு தோள் நின்று பணியாற்றிய மருத்துவர்களுக்கும் அர்ப்பணிக் கின்றேன்" என்று கூறினார்.

நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரி யின் பழைய மாணவர் சங்கத்தின் உறுப் பினரான கோவை ஸ்ரீ விவேகா இன்ஜினியரிங் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தின் முதன்மைச் செயல் அலுவலர் திரு. பி. சந்திரசேகர் அவர் கள் ரூபாய் ஐந்து இலட்சத்திற்கான காசோலையை என்.ஐ.ஏ. கல்வி நிறு வனங்களின் தலைவர், டாக்டர். ம. மாணிக்கம் அவர்களிடம் வழங்கினார். இதனைப் பாராட்டி அவருக்கும் நாபா வின் மதிப்பியல் தலைவர் திரு. கே. பாலசுப்ரமணியன் அவர்களுக்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பிக்கப் பட்டது.

அமரர் ப.நாச்சிமுத்துக் கவுண்டர் அவர்களின் நினைவுநாள் பேருரையை, வாணியம்பாடி இஸ்லாமிக் கல்லூரி யின் முன்னாள் தமிழ்த்துறைத் தலை வர், கவிமாமணி பேராசிரியர் டி.எம். அப்துல் காதர் அவர்கள் வழங்கினார்.

டாக்டர்.மகாலிங்கம் பொறியியல் கல்லூரியின் முதல்வர், டாக்டர். ஏ. இரத்தினவேலு அவர்கள் விழாவிற்கு நன்றியுரை வழங்கினார்.

**– ந.நி.**

கட்டுரை

# மக்கள் சக்தி மக்களாட்சி

இந்தியா குடியரசாக 26 ஜனவரி 1950–இல் மலர்ந்த போதுதான் இந்தியா பரிபூரண நாடாக ஆனது. அன்றுதான் இந்தியக் குடியரசுச் சாசனம் – சட்டதிட்ட விதிகள் அறிவிக்கப்பட்டன. அன்று முதல் இந்திய மக்கள் பூரண சுதந்திரம் அடைந்த வர்களாக ஆனார்கள். மேலும் இந்திய மக்கள் யாவரும் சமம், நட்புறவு கொண்ட நன் மக்கள் எனவும் அறிவிக்கப்பட்டது.

விடுதலைப் போராட்ட வீரர்கள் பல இன்னல் களுக்கு ஆட்பட்டும், பொருள்களை இழந்தும், உடல் காயங்கள் அடைந்தும், உயிர்கள் மடிந்தும் இந்தியா சுதந்திர நாடாகவும் குடியரசு நாடாகவும்



மலர்ந்தது. விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு இன்றைய இந்திய மக்கள் வீர வணக்கம் செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள். அரசும் அந்த வீரர்களின் குடும்பங்களுக்குத் தக்க வேலை வாய்ப்பும், குழந்தைகளுக்குக் கல்வியும் கொடுக்கிறது. கொடுக்க வேண்டும்.

விடுதலைப் போராட்டச் சரித்திரம் பற்றி இளைய சமுதாயம் அறிய வேண்டும். அப்போது தான் மக்கள், இந்திய நாடு மேன்மை நிலை அடைய நாட்டில் நீதியும், நன்னடைத்தையும், நாட்டு நலனில் அக்கறையும், ஆர்வமும் கொண்டவர்களாக இருப்பார்கள்.

குடியரசு என்பதில் பூரண சுதந்திரம் அடைந்த ஒவ்வொருவரும் ஆட்சி அமைப்பதற்கும் ஆட்சி யாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் உரிமை பெற்ற வர்கள் ஆகிறார்கள். அது மட்டுமா! நல்லாட்சி அமையாத போது அல்லது ஆட்சியாளர் நல்லவ ராக இல்லாத போது நீக்குவதற்கும் உரிமையுள்ள வர்கள்.

நல்லவர்களைத் தேர்ந்தெடுக்கும் சந்தர்ப் பத்தை ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை நடக்கும் தேர்தலே தருகிறது. ஆனால் நல்லாட்சி அமை வதைக் கையூட்டுக் (லஞ்சம்) கொடுத்துச் சீரழிக் கிறார்கள். இந்த லஞ்சமும், வஞ்சமும் இல்லாத தாக்க மக்கள் கடமைப்பட்டவர்கள் ஆகிறார்கள். இதன் கொடுமையைப் பறை சாற்றி மக்களின் இந்த ஈன நிலையைத் தவிர்க்கப் பாடுபட வேண் டும். மேலும் பணத்தை வாரி இறைக்கும் வேட் பாளர்களுக்கு வாக்களிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

நல்ல வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்தால் மக்கள் வசிக்கும் பகுதிகளில் வரும் ஐந்தாண்டில் பயனுள்ள வசதிகளை, மக்கள் வேண்டிய சீர்திருத் தங்களை அடைய முடியும். தற்சமயம் நாட்டின் பல பகுதிகளில் சீரழிந்த வீதிகள், கழிவுநீர் வடிகால் கள் சீர் செய்யப்படாமல் வீதிகளில் கழிவுநீர் வடி தல், குடிநீர் தொடர்ந்து கிடைக்கும் வசதியின்மை, தொடர்ந்து மின்வசதியின்மை இன்னும் பல கேடுகள் சீர் செய்யப்படாமல் தொடரும் இன்னல்

முனைவர் டாக்டர் ஜே.ஜி. சண்முகநாதன்
கங்கா மருத்துவமனை, கோவை.



கள் எல்லாம் நல்ல வேட்பாளர்கள் இல்லாததால் தான்.

இரண்டு தேர்தலுக்குட்பட்ட ஐந்தாண்டுகள் நன்மைபெற வேண்டுமானால் மக்கள் நல்ல வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அத்தோடு நம் கடமை முடிந்துவிட்டது என்று எண்ணாமல், வேட்பாளரும் ஆட்சியாளர்களும் ஆற்றும் பணிகள் எப்படி என்பதையும் தொடர்ந்து கண்காணித்து அறியவேண்டும்.

இதில் வேட்பாளர்கள், அரசியலாளர்கள் பங்கு என்ன? தொடர்ந்து மக்களின் தேவைகளை அவர்கள் வசிக்கும் பகுதிகளின் தேவைகளையும் அறிந்து ஆவன செய்ய வேண்டும். இவற்றைப் பெறுவதற்கு மக்களுக்கு உரிமை இருக்கிறது. கேட்டுப் பெற வேண்டும். முயன்றால் முடியாதது ஒன்றில்லை.




இதற்கு மக்கள் ஒன்று சேர்ந்து முயல வேண்டும். அவர்கள் வசிக்கும் பகுதிகளில் மக்கள் ஒன்று சேர்ந்து சங்கம் அமைக்க வேண்டும். வேட்பாளரை அழைத்துத் தாங்கள் வசிக்கும் பகுதியில் வேண்டும் வசதிகளையும் மற்ற தேவைகளையும் பற்றி எடுத்துச் சொல்ல வேண்டும். இல்லையென்றால் ஒரு பயனும் இல்லாமல் ஐந்தாண்டுகள் ஓடிவிடும்.

தேர்தலுக்கு முன்னமேயே மக்கள் ஒன்றுகூடி நல்ல வேட்பாளர் யாரெனத் தேர்ந்து அவருக்கு வாக்களிக்கலாம். நல்லது வேண்டும், வேண்டாம் என்பது மக்களின் விருப்பம். இதுவும் மக்களின் உரிமை. தூங்கும் சமுதாயம் துன்பத்தைப் பெறும். நன்மையை இழக்கும்.

அடுத்ததாக, மக்களைச் சீரழிக்கும் மதுக்கடைகளை அறவே மூடவேண்டும். மது போதையால் பல கொலைகள், களவுகள், குடும்பங்கள் அழிந்ததை அன்றாடம் செய்திகள் தெரிவிக்கின்றன. ஆகவே, மக்கள் இதில் சிரத்தையாகத் தங்கள் கருத்துகளைத் தனியாகவோ, தங்களது சங்கம் மூலமாகவோ தெரிவிக்க வேண்டும். அதைப் பற்றி தினமலர் நாளிதழ் 7.2.2019 பக். 3–இல் பிரசுரமான செய்தி விளக்குகிறது.

“மதுவால் ஒரு தலைமுறையே சீரழிந்து விட்டது. வருவாய்க்காக டாஸ்மாக் கடைகளை மட்டும் நம்பாமல், அரசின் வருவாயை உயர்த்தப் பல வழிகள் உள்ளன. அவற்றில் கவனம் செலுத்த வேண்டும்” எனத் தமிழக அரசுக்கு உயர்நீதி மன்ற மதுரைக்கிளை நீதிபதிகள் யோசனை தெரிவித்தனர்.

கிராமசபைக் கூட்டங்களை நடத்தி ‘மதுக்கடைகள் வேண்டாம்’ எனத் தீர்மானம் நிறைவேற்றலாம். மதுவால் ஒரு தலைமுறையே சீரழிந்து விட்டது. இனிவரும் தலைமுறைகளையாவது காக்க வேண்டும். இது குறித்துத் தமிழக அரசு பதிலளிக்க வேண்டும்.

போராடிப் பெற்ற சுதந்திர இந்தியாவில் நாம் சுகமாக வாழ்கிறோம். இந்தியா நமது நாட்டுரிமை. இதைப் பேணிக் காப்பது நம் கடமை. இதில் உயர்கல்வி, தொழில் வளம், வேண்டிய வேலைவாய்ப்பு ஏற்றுமதியால் ஏற்படும் பொருள் வளம், இயல், இசை, நாடகம், கலைகளில் மேன்மை, ஆன்மீக வாழ்வு, சீர்மை பெற்ற ஊர்கள் (Smart Cities), மலிந்த லஞ்சம், வஞ்சம் ஒழிந்த நேர்மை வாழ்வு முறை யாவும் நமது உயர் நடத்தையால் மலர வேண்டும். ஒவ்வொருவருக்கும் இதில் பங்கு உண்டு.

எல்லாவற்றிலும் மேலாக, அரசியலில் நேரடியாகப் பங்கு கொள்ள விருப்பமுள்ளவர்கள் தாங்களாகவே வேட்பாளராக நின்று சிறப்பாகச் சேவை செய்யலாம். நல்லவர்களை மக்கள் தேர்ந்தெடுப்பதில் ஆர்வம் காட்டுவார்கள். வளமான வாழ்வு வாழ நமக்கு உரிமையுண்டு. முயற்சியால் முடியும். ●

# வெற்றி வாழ்க்கை



தங்கமகன்

விழுகின்ற விதை மட்டும்
வீரியமாய் விழுந்துவிட்டால்
விளைச்சல் பற்றிய விசனமில்லை
தொழுகின்ற வேண்டுதல்
தூய்மையாய் இருந்துவிட்டால்
துலங்கிடும் பலனுக்கு ஏது எல்லை!

விடுகின்ற மூச்சிலே
தடுமாற்றம் இல்லையெனில்
விரும்பிடும் நலனுக்குக் குறைச்சலில்லை
தொடங்கும் எப்பணியிலும்
துல்லிய கவனமெனில்
தோல்விக்குத் தோல்விதான் வேறு இல்லை!

அடிபடும் பந்துதான்
ஆகாயம் நோக்கி எழும்
அன்றாடம் நாம் காணும் காட்சிதான்
தடையொன்று நமை வந்து
தாக்கிடும் போதுதான்
தகர்த்திடத் தேவை தைரிய ஆட்சிதான்!

முடியாது என்று நாம்
முடங்கிக் கிடந்திடின்
முளைக்குமோ சுயம்பாக வெற்றிதான்
முடியும் எனும் முழக்கத்துடன்
முன்னேறிக் காட்டினால்
மொத்த உலகுமே பேசும் நமைப் பற்றித்தான்!

இந்த வயதில்தான் சாதிக்க வேண்டும்
என்கின்ற வரையறை உள்ளதாய்
எந்த ஏட்டிலும் இல்லையொரு துணுக்கு
எந்த வயதிலும் திறமை ஒளிர்ந்து
இம்மனித குலத்திற்குப் பயனாய் அமைந்தால்
என்றைக்கும் அழியாது நம் கணக்கு!

வாழும்போது நாமும் ஏதோ
வாழ்ந்தால் போதுமென
வாழ்வதா நமது வேட்கை?
வாழ்வே முடிந்தாலும் மக்கள் மனதில்
வாழ்த்தோடு ராணுவவீரன்போல் வாழ்ந்தால்
வையத்தில் அதுதான் வாழ்க்கை!






திருக்கழுக்குன்றம் கயிலைப்புனிதர், திருவாசகமெனும் தேனை அனைவரையும் சுவைக்க வைக்கும் மாணிக்கவாசகரின் மறுஉருவம்

# சிவ.தாமோதரன் ஐயா

அவர்களின் அருளாசியோடு கடவுளைக் காண கயிலைக்கு வாருங்கள்

## இந்தியாவிலேயே மிகக் குறைந்த கட்டணத்தில்

# கைலாஷ்-மானஸரோவர் முக்திநாத் யாத்ரா-2019

ஆன்மீக அதிசய அற்புதங்கள் நிகழ்ந்த, தெய்வங்கள் வாழ்கின்ற திருக்கயிலையில் **நடையிடுங்கள்!**

மானஸரோவர் புனித நீரில் மூழ்கியெழும் பேறுபெற்று தெய்வீக மர்மங்கள் நிறைந்த அவ்விடத்தில் **தியானியுங்கள்!!**

கயிலாயத்தின் சூட்சம அதிர்வுகளையும், கயிலாயத்தின் ரகசியங்களையும் **உணர்ந்திடுங்கள்!!!**

**சிவசெல்வர்களே,** மனிதனாகப் பிறந்த நம் அனைவருக்கும் இறைவனைக் காண வேண்டும் என்ற எண்ணம் மனதின் அடியிலே இருந்துகொண்டே இருக்கிறது. அந்த இறைவனாகிய எம்பெருமான் சிவனையும் பார்வதி தேவியையும் வாழ்க்கையில் ஒருமுறையேனும் கயிலையில் நேரில் தரிசித்து எல்லையில்லாப் பேரின்ப நிலை அடையவும், மேலும் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று மானஸரோவர் தடாகத்தில் சிவபூஜைக்குபின் திருமுறைகள் முழங்க, கயிலாய வாத்தியங்கள் இசைக்க, சங்கு நாதம் ஒலிக்க, தமிழ் வேதங்களுடன், அடியார்கள் ஆனந்த நடனமாடிட, சகல பரிவாரங்களும் அசைந்து வர, வரலாறு பதிவு செய்யும் விதமாக அடியார்கள் ஒருங்கிணைந்து நடத்தும் மாபெரும் இந்துக்களின் இறைநெறியான திருவாசகம் முற்றோதலுடன் கூடிய இந்த யாத்திரையின் மூலம் எழுச்சி மிக்க அபரிதமான ஆயுளை நீடிக்கச் செய்யும் சகல சக்திகளும் நிறைந்த பிரபஞ்ச சக்தியை நீங்கள் நேரில் பெறவும், மகிமைகொண்ட பிரபஞ்ச தெய்வீக நடனமான (Cosmic Dance) சிவதாண்டவத்தை நேரில் தரிசிக்கவும் ஓர் அரிய வாய்ப்பு!

| ஏப்ரல் 19 | மே 18 | ஜூன் 17 | ஜூலை 16 | ஆக.15 | செப்.13 |
|---|---|---|---|---|---|
| சித்ரா பௌர்ணமி | வைகாசி பௌர்ணமி/ புத்த பூர்ணிமா | ஆனி பௌர்ணமி | ஜூலை மாத பௌர்ணமி | ஆடி பௌர்ணமி | சிவ-பார்வதி திருக்கல்யாண சிறப்பு பெருவிழா யாத்திரை |

சென்னையிலிருந்து ரயில் மூலம் டெல்லி வழியாக காட்மண்டு அடைந்து, பின்பு அங்கிருந்து தரை வழியாக சூப்பர் டீலக்ஸ் ஏசி வாகனம் மூலம் கைலாஷ் யாத்திரை சென்று வர 20 நாட்கள்

காட்மண்டுவிலிருந்து தரை வழியாக சூப்பர் டீலக்ஸ் ஏசி வாகனம் மூலம் கைலாஷ் யாத்திரை சென்று வர 14 நாட்கள்

**ரூ. 1,24,900 மட்டுமே**

அனைத்தையும் குணமளிக்கும் சக்தி நிறைந்த மானஸரோவர் தடாகத்தில் புனித நீராடி தெய்வீக அதிசயங்களை காணவும், கிரிவலம் சென்று கயிலைநாதனை முழுமையாக தரிசிக்கவும், நமக்குள்ளே இருக்கும் பிரபஞ்சம் தூண்டப்படவும், ஆற்றல் மிக்க பாசிடிவ் காஸ்மிக் எனர்ஜி நம்முள் பிரவேசித்து பிரதிபலிப்பதை நிதர்சனமாக உணர்ந்து தெய்வீக பேரின்ப நிலையை அடையவும், யோகா மற்றும் பிராணாயாமம் போன்ற சிறப்பு பயிற்சிகளை முறையாக அளித்து யாத்திரை முழுவதும் நாங்களே உடன் இருந்து தகுந்த பாதுகாப்புடன் அழைத்துச் செல்வது இந்தியாவிலேயே யாத்திரையில் 20 வருடம் அனுபவம் கொண்ட நாங்கள் மட்டுமே

ஸ்ரீராமானுஜரின் 1002வது ஜெயந்தி விழாவை முன்னிட்டு உபன்யாசம், வைணவ சம்பிரதாயத்துடன் கூடிய

## நேபாள்-ஸ்ரீசாளகிராம-முக்திநாத் யாத்ரா

**ரூ. 25,900 மட்டுமே**

ஏப்ரல் முதல் செப்டம்பர் வரை மாதம் ஒரு குழு புறப்படும் | ரயில் மூலம் 12 நாட்கள் விமானம் மூலம் 6 நாட்கள்

சீனா, திபெத், நேபாள் டூரிஸம் போர்டில் பெர்மிட் மற்றும் விசாவை நேரடியாக பெறுவதால் இந்தியாவிலேயே மிகக் குறைந்த கட்டணத்தில் கைலாஷ்-மானஸரோவர்-முக்திநாத் யாத்திரைக்கு அழைத்துச் செல்வது நாங்கள் மட்டுமே

**சிவனடியார்களின் பொருளாதார வசதிகளைக் கருத்தில்கொண்டு குறைந்த கட்டணத்தில் ரயில் மூலம் சென்னையிலிருந்து காட்மண்டு வரை தொடர்ந்து அழைத்துச் செல்வது நாங்கள் மட்டுமே!**

*ஞான ஒளி வீசும் சிவனின் வாசஸ்தலத்தை தரிசிப்பதன் மூலம் காணக்கிடைக்காத பல அற்புதங்களை தாங்கள் காணப் போகிறீர்கள். தங்களின் உள்ளத்தையும், உணர்வுகளையும் உயர்த்தி மனித நிலையிலிருந்து தெய்வீக நிலைக்கு உயரப் போகிறீர்கள். நூறு பிறவியின் பெரும்பயனை அடையப் போகிறீர்கள்*

**தெய்வீக புதிராக நிற்கும் கயிலை மலையானை தொட்டு ஸ்பரிசித்து மெய்சிலிர்க்க வைக்கும் பேரின்பநிலை, யோகநிலை அடைய தங்கள் அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்**




GET ₹ 40,000 FOR KAILASH
GET ₹ 10,000 FOR MUKTHINATH
SUBSIDY FROM TAMILNADU GOVT.

#1 yatra

கடந்த 19 ஆண்டுகளாக சுமார் 7000 சிவனடியார்களை கயிலைநாதனையும், முக்திநாதனையும் நேரில் கண்டு தரிசிக்க அழைத்து சென்ற ஒரே நிறுவனம்

## ஸ்ரீ அன்னபூரணி யாத்ரா சர்வீஸ்

sapyservice@gmail.com | www.annapooraniyatra.com

**63, NADU STREET, MYLAPORE, CHENNAI-4 ✆ 8056 333 333, 8056 444 444**

எங்களின் பயண திட்டம், பயண நாட்கள் மற்றும் கட்டணத்தை மற்ற நிறுவனங்களுடன் ஒப்பிட்டு பாருங்கள். பதிவு கட்டணம் ரூ. 5,000 மட்டுமே

SPECIAL CARE FOR SENIOR CITIZENS
PASSPORT WILL BE ARRANGED

திபெத், நேபாள அரசு அங்கீகாரம் பெற்ற நிறுவனம்
中国西藏自治区印度民间香客接待中心 INDIAN PILGRAME SERVICE CENTRE OF TAR
कैलाश यात्रा संचालक संघ नेपाल Association of Kailash Tour Operators Nepal

**சிவ-பார்வதி உறைந்திருக்கும் தெய்வ உலகம் திருக்கயிலையில்**

இறைவனை நீங்கள் **பார்க்கலாம்!** இறைவன் பேசுவதை நீங்கள் **கேட்கலாம்!**
இறைவனோடு நீங்கள் **பேசலாம்!** இறைவன் நடத்தும் அற்புதங்களை நீங்கள் **உணரலாம்!**

Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication
28.2.2019

Regd.No.CB/016/2018-20
OM SAKTHI - MARCH - 2019





# Dr. MAHALINGAM
## COLLEGE OF ENGINEERING AND TECHNOLOGY

Affiliated to Anna University, Chennai; Approved by AICTE ; Accredited by NAAC with Grade 'A++'
Udumalai Road, Pollachi - 642 003. Tel: 04259-236030/40/50 Fax: 04259-236070 www.mcet.in




COUNSELLING CODE
**2706**




MCET has been recognised by MHRD to establish "Institution Innovation Council (IIC)"







TIER 1 ACCREDITED COURSES*




RANK BAND OF 151-200 in Engineering India Ranking 2018



## Empowering Students to accomplish their dreams

*Dr. Mahalingam College of Engineering & Technology (MCET), an engineering institution with two decades of service offers quality education and training.*




MCET has the unique position of being the only Autonomous Engineering College in Tamil Nadu till date to have been conferred with the **highest grade of A++** by National Assessment and Accreditation Council (NAAC).

### PROGRAMMES

(*Tier 1 - Accredited by NBA)

**B.E. / B.Tech**
- Mechanical Engg.*
- Automobile Engg.*
- Civil Engg.*
- Electrical & Electronics Engg.*
- Electronics & Communication Engg.*
- Electronics & Instrumentation Engg.*
- Computer Science & Engg. *
- Information Technology
- Mechatronics Engg.
- Production Engg.

**M.E. / MCA**
- CAD / CAM
- Applied Electronics
- Computer Science & Engg.
- Communication Systems
- Structural Engg.
- Master of Computer Application

**Ph.D**
- Mechanical Engg.
- Electrical & Electronics Engg.
- Electronics & Communication Engg.
- Computer Science & Engg.
- Civil Engg.









**MCET has obtained Platinum Rating for the year 2018 in the AICTE - CII Survey of Industry Linked Technical Institutions 2018.**

**15** CENTERS OF EXCELLENCE
**90%** STUDENTS OFFERED PLACEMENTS
**1309** STUDENTS UNDERWENT INTERNSHIP
**MCET CONNECT** – INTERACTIVE LEARNING EXPERIENCE THROUGH TABLETS



On Campus Techno-Commercial Ventures (Caresoft Global Pvt. Ltd., VVDN Technologies, ABT Info.net - An Internet Data Centre, ABT Maruti Ltd.)



International Collaboration with Canadian & Australian University

DIAMOND JUBILEE YEAR 1957 - 2017

